


இல்லத்திலே ஸர்ப் இருந்தால் சலவையிலே உங்களை மிஞ்ச முடியாது. அத்தனை வெள்ளைவெளேரென்ற துப்புரவு; வேலையும் வெகு எளிது. எல்லாம் ஸர்ப் செயல், அதன் அளவுகடந்த சலவைத் திறன். சட்டை, சேலை, சிறுவரின் உடைகள் யாவினுக்கும் உகந்தது ஸர்ப்.

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்

SU. 23-X52 TM

# ஒரு இணையற்ற பரிசு...!

B/C/74/TM

...தி பாங்க் ஆப் இந்தியா லிமிடெடில்
ஒரு ஸேவிங்ஸ் பாங்குக் கணக்கு மற்றும்

## அவனுக்குச் சொந்தமாக ஒரு பாஸ் புத்தகம்!

...அவனுக்குக் கிடைத்த ரொக்க நன்கொடைகள், ரொக்கப் பரிசுகளையெல்லாம் இக்கணக்கில் போட்டு வைத்திருப்பான். கணக்கில் இருப்புத் தொகை வளர்ச்சிபெற்று வருவதில் அவனுக்கு சந்தோஷமும் பெருமையும் ஏற்படும்.

## விசேஷ வசதி

நீங்கள் ஆண்டு ஒன்றுக்கு **100 செக்குகள்** வரை எழுதி எந்த சமயத்தில் எவ்வளவு தொகை வேண்டுமானாலும் முன்னறிவிப்பின்றி வாங்கிக்கொள்ளலாம். தவிர உங்கள் சேமிப்பிற்கு ஆண்டு ஒன்றுக்கு 3% தொடர் வட்டி கிடைக்கும்.

**தி பாங்க் ஆப் இந்தியா லிமிடெட்**

T. D. கன்ஸாரா, ஜெனரல் மானேஜர்



புகைபிடிக்கும் இங்கிதம்

# பெண் மனம் புண்படா வண்ணம்...

மாதர்களோடு புழங்குகையில், இன்றியமையாதபோது மட்டுமே புகைபிடியுங்கள்—அதுவும் பெண் மனம் நோகாத வண்ணம். புகை பிடிக்கையிலே பெண்மணிகளை எதிர்ப்பட்டால், முகமன் கூறுவதற்கு முன் சிகரெட்டை அகற்றிக்கொள்வதே நலம். அவர்களைக் கடந்து சென்ற பிறகே தொடர்ந்து புகை பிடிப்பது நாகுக்கு.



உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

## பனாமா

Panama 20

CIGARETTES

இழுக்க இழுக்க இன்பம் இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்.
கோல்டன் டொபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 617. TAM

Greens' Advtg.

சுபகிருது, கார்த்திகை 24

கல்கி

டிசம்பர் 9௳ 1962

## பொருளடக்கம்



அட்டைப்படம் : நன்றி: 'டைம்'

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 22

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 19

# மூன்று திருநாட்கள்

மெத்த அதிருஷ்டம் செய்தவர்களை ஆங்கிலத்தில் மும்மடங்கு பாக்கியசாலிகள் (thrice blessed) என்று சொல்வார்கள். மூன்று புண்ணியத் திருநாட்களை ஒட்டி வெளியாகும் இவ்வாரக் 'கல்கி' இதழ் அவ்வாறு மும்மடங்கு பாக்கியம் செய்ததாகும்.

முதலாவதாக ஒளி விழாவாகிய திருக் கார்த்திகை. அகல்கள் ஏற்றி வைக்கும் போது, 'நம் அகத்திலுள்ள அச்சம், சோர்வு முதலிய இருள்கள் விலகித் தீரம் என்ற தீபம் ஒளிர வேண்டும்; தேசப் பாதுகாப்பில் நமது சேவையும் மிளிர வேண்டும்' என்று பிரார்த்திப்போம்!

தீப உற்சவத்தன்றே நிகழும் மற்றொரு நன்னாள் மகாகவி பாரதியின் எண்பத்தோராவது ஜயந்தியாகும். பா—ரதி என்றாலே ஒளியில் களிப்பவர் என்று பொருள். சத்தியத்தின் ஒளியில் முக்குளித்து எழுந்து சங்கநாதம் செய்தவர், சிங்கநாதம் செய்தவர் அமரகவி. 'செங்கதிர்த் தேவன் சிறந்த ஒளியினைத் தேர்கின்றோம்—அவன் எங்கள் அறிவினைத் தூண்டி நடத்துக' என்பதாக வேதம் தமிழ் செய்து, ஒளி வழிபாட்டை வளர்த்த பாட்டுக்கொரு புலவர் அவர். இன்று தோன்றாத் துணையாக இருந்து ஆண்மையென்ற ஒளியை நம்மில் தூண்டி, தேச சேவைக்கு நம்மை ஆசி கூறி அனுப்புகிறார் அவர். 'ஆயிரம் உண்டிங்கு ஜாதி—எனில் அந்நியர் வந்து புகல் என்ன நீதி?' என அவர் போதித்த ஐக்கிய மகாமந்திரத்தை இன்று விசேஷமாக நினைவுகூர்ந்து நாட்டுப் பணிக்கு நம்மை அர்ப்பணித்துக் கொள்வோம்.

மூன்றாவது விழாவாக இம்மாதம் 8-ந்தேதி நம் அருமைத் தலைவர் ராஜாஜிக்கு எண்பத்தைந்தாவது பிராயம் பிறக்கிறது. எண்ணி எண்ணிப் புளகம் அடைய வேண்டிய எண்பத்துநாலு ஆண்டுகளில் ஒரு மாசு, மறு இன்றித் தேசு குன்றாமல் ஒளிர்ந்த புனித வாழ்க்கை ராஜாஜியுடையது. ஆம், ராஜாஜியின் சரிதையையும் ஒளியின் சரிதமாகவே கருதலாம். அவர் உற்ற பல இன்னல்களும் 'சுடச் சுடரும் பொன்போல்' அவரது வாழ்க்கைக்கு ஒளி கூட்டியே வந்திருக்கின்றன.

ஒளி என்பதைப் பொதுவாக அறிவுடனேயே இணைத்துக் காண்கிறோம். அந்த ஞானப் பிரகாசத்தில், பாரதியார் தேர்ந்த 'செங்கதிர்த் தேவனின் சிறந்த ஒளி'யைப் போலவே அருகில் நெருங்கவொண்ணாத ஒரு தன்மையும் உண்டு. ஆனால் அறிவொளியின் உருவகமாகிய ராஜாஜியோ உயிர்க்குலத்துக் கெல்லாம் அரியதொரு பொதுச் சொத்தாக இருக்கிறார். இது எதனால்? சூரிய ஒளி சந்திரனில் படிந்து வீசும் போது குளிர்ந்த நிலவைப் பொழிகிறதல்லவா? அதேபோல் ராஜாஜியின் அறிவொளி, அருள் என்னும் மதியத்தில் பிரதிபலித்துத் தொண்டு என்ற நிலவாக உலகெங்கும் நிலவுகிறது. நிலவொளியில் தானே பிணிகள் தீர்க்கும் மூலிகைகள் வளரும் என்று சொல்வார்கள்? அதேபோல ராஜாஜியின் அறிவில் பிறந்து, அன்பில் கனிந்துவரும் உலகத் தொண்டு மக்களின் பயம், நம்பிக்கையின்மை, பலவீனம் முதலிய பிணிகளைக் களையும் மூலிகைத் தழைகளைத் தழைக்கச் செய்கிறது.

ராஜாஜியின் அருமை பெருமைகளை நம் வாசகர்களுக்கு விளக்குவது உடன்பிறந்தான் பெருமையைப் பிறந்த வீட்டில் கூறுவதற்குச் சமானமேயாகும். ஆன்மீகம், இலக்கியம், அரசியல் முதலிய பல துறைகளிலும் தேர்ந்து, தொட்டதையெல்லாம் தங்கமாகத் துலக்கும் ராஜாஜி சரித்திர புருஷர், சரித்திரம் கண்டறியாத மகாபுருஷர். அவரது

சிறப்புக்களை முற்றிலும் கூறி விவரிப்பது முயன்றாலும் முடியாத காரியமாகும். எனினும் அவரது ஒரு சில குணநலன்கள் இன்று நம் மனத்தில் முன் நிற்கின்றன.

முதலாவதாக, எண்பத்திநாலு ஆண்டுகள் முடிவுற்ற பின்னும் அவரது சொல் வன்மையும், செயல் திட்பமும், சிந்தனைத் திறனும் குன்றாமலிருப்பதாகும். இந்த வயதில் அவர் வெளிநாடுகள் சென்று தமது நுண்ணிய மேதா விலாசத்தை உலகெல்லாம் அறியுமாறு செய்தது உலகத்தின் பாக்கியம். தூதரின் இலட்சணமாகத் தமிழ் மறை வகுத்த 'அன்பு, அறிவு, ஆராய்ந்த சொல் வன்மை' மூன்றிலும் மேருவாக விளங்கும் ராஜாஜி தொன்மையான பாரதப் பண்பாட்டின் பெருமையை உலக அரங்கில் பொலியச் செய்து விட்டார். எத்தனையோ தூதுப் பணிகளை நாம் கண்டிருக்கிறோம். புல், பூண்டு உள்பட உயிருள்ள சகல சேதன வஸ்துக்களையும் ஆபத்திலிருந்து காப்பதற்காகச் சென்ற ராஜாஜியின் தூதுப் பணியைப் போல் நாம் கண்டதில்லை. அவருக்கு நிகராக வேறொருவர் இல்லாதது போலவே அவரது தூதுக்கும் ஒப்பாக வேறொன்றைச் சொல்ல முடியாது.

எண்பத்திநாலாவது வயதில் ஊக்கம் குன்றாது அவர் உலக யாத்திரை செய்ததை விட அதிசயம், சொல்—செயல்—சிந்தனை மூன்றாலும் ஒரே சத்தியத்தை மூவகையில் தொழுது வரும் ராஜாஜி இந்த முதுமையிலும் தமது சிந்தனையில் வளர்ந்து வருவதேயாகும். இந்த வளர்ச்சியேதான் அவரைப் புரிந்து கொள்ளாதவர்கள் அவர் மீது தப்பபிப்பிராயம் கொள்ளவும் காரணமாக இருக்கிறது. வளர்ச்சியில் மாறுபாடு காணப்படுவது இயற்கைதானே? இந்த மாறுபாடுகளைக் கண்டு தம் வளர்ச்சியைத் தடை செய்து கொள்ள விரும்புபவரல்ல ராஜாஜி. 'முரண்பாடு என்பது சிற்றறிவினர் கண்டு நடுங்கும் குட்டிச்சாத்தான்' என்ற ஆங்கில முதுமொழியை மெய்ப்பித்து வருகிறார் அறிவின் இமயமான ராஜாஜி.

'நான் ஒரே கருத்தை விடாமல் கைக் கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி அக்கறை இல்லாதவன். நான் சத்தியத்தை நாடிச் செல்பவன். அந்த யாத்திரையில் பல பழைய கருத்துக்களை நீத்தவன்; பல புதிய கருத்துக்களை ஏற்றவன். வயதில் நான் கிழடு தட்டிப் போனாலும் என் அக வளர்ச்சி நின்று விட்டது என நான் எண்ணவில்லை. சத்தியம் என்ற என் ஆண்டவனின் அழைப்பு ஒவ்வொரு கணத்திலும் எப்படி ஒலிக்கிறதோ அவ்வாறே அதனை ஏற்றுக் கீழ்ப்படிவதில்தான் என் நாட்டம் உள்ளது' என்று காந்தியடிகள் கூறினார். அந்த அநுபவ வாக்கியத்தைப் புரிந்து கொண்டவர்களுக்கு ராஜாஜி சத்தியத்தின் காவலராக நிற்பதும் புரியும்.

ஒரே பரம்பொருள் பல கடவுளராகத் தோன்றுவது போல, ஒரே சத்தியம் காலத்துக்கும் சூழலுக்கும் தக்கவாறு பல விதங்களில் தோன்றுகிறது. அவ்வப்போது இவ்வாறு ராஜாஜி கண்டு வரும் சத்திய தரிசனம்தான் அந்தந்தச் சமயத்தில் நாட்டு நலனுக்கு உகந்ததாகும். பிறருடன் முரண்படுவதைவிட, தன்னுடைய கருத்துக்களையே புதுப்பித்துக் கொள்ளத்தான் அதிக ஆத்மபலமும், அந்தரங்கசுத்தமும் வேண்டும். இத்தகைய அகத் திண்மையும், உள்ளத் தூய்மையும் கொண்டவர் ராஜாஜி. இங்கு இவ்வளவு சொல்ல நேர்ந்ததற்குக் காரணம் நாட்டின் இன்றைய நிலைமையில் ராஜாஜியின் மகிமையைப் புரிந்து கொண்டு அவரது அறிவுரைகளின் வழி நடப்பது எவ்வளவு அத்தியாவசியமானது என்பதை வலியுறுத்துவதற்குத்தான்.

இன்று எதிரி வந்து புகுந்ததால் நம்மில் ஆயிரம் ஜாதிகள் இருந்தாலும் சகோதரராக ஒன்று நின்று நாட்டைக் காக்க வேண்டும் என்பது உண்மைதான். ஆனால் அதற்காகத் தவறுகள் நிகழும்போது அவற்றை எடுத்துக் காட்டாவிட்டாலோ, அவ்வாறு எடுத்துக் காட்டுவதை விரோத பாவம் என்று எண்ணினாலோ நாம் அதோகதியாவோம். 'குற்றத்தை வலிவுற எடுத்துக் காட்டுபவர்களைத் துணையாகக் கொண்ட ஆட்சியாளரைப் பகைவர் என்ன செய்ய இயலும்?'

**இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே**
**கெடுக்கும் தகைமை யவர்?**

என்ற வள்ளுவர் வாசகத்தை அரசியல்வாதிகள் எல்லோரும் உன்னிப்பாகப் பார்க்க வேண்டிய தருணம் இது.

சீன ஆக்கிரமிப்பினால் மக்களுடைய உணர்ச்சிகள் பெரும் கிளர்ச்சி அடைந்துள்ள இன்று ராஜாஜியின் இன்னொரு சிறப்புக் குணத்தையும் நினைந்து பின்பற்ற வேண்டும். மனத்தையும், அறிவையும் எப்போதும் தெளிவாக வைத்துக் கொண்டு உணர்ச்சிகளுக்கு

அதிக இடம் கொடுக்காமல் வாழும் ஞானி ராஜாஜி. 'உணவு, உறக்கம், உழைப்பு எதிலுமே எவன் மிகையாக இராமல், மந்தமாகவும் இராமல் மிதமாக இருக்கிறானோ அவனே யோகி' என்று கண்ண பெருமான் கூறியதற்கேற்ப உணர்ச்சிகளில் மிதமாக இருக்கும் உத்தம யோகி ராஜாஜி. இந்த இதமான மிதத் தன்மை அவருக்கு அளித்த அணிகலனே அடக்கம் என்ற உயர் பண்பு. அவரது அடக்கத்திலும் கூட ஒரு கௌரவமும் கம்பீரமும் உள்ளன. இன்று நமக்கு அவரது அறிவுரைகளைவிட உற்ற துணையில்லை. சமீபத்தில் அவரது பல புத்திமதிகள் அரசினரால் பின்பற்றப்பட்டிருப்பது தேசத்தின் எதிர்காலத்தைப் பற்றி நம்பிக்கை ஒளி கூட்டியிருக்கிறது. இந்த நம்பிக்கையுடன் ஒளி விழாக்கள் மூன்றினையும் கொண்டாடி மகிழ்வோம்.

## நட்புக்கு வழிதேடவும்

வல்லரசுத் தூதர்களின் முயற்சியால் அயூப்—நேரு சம்பாஷணை நடக்கப்போகிறது என்பதை அறிந்த மக்கள் நாடு முழுதும் மகிழ்ச்சி அடைந்தார்கள். இச்சந்திப்பின் பயனாக ஓர் உடன்படிக்கை கச்சிதமாக ஏற்படும், சீனாவின் ஆக்கிரமிப்புக்கும் பிடிவாதத்துக்கும் அது ஒரு மருந்தாக இருக்கும் என்று நம்பினோம். திடீரென்று, ஒரு கம்யூனிஸ்டு பார்லிமெண்ட் அங்கத்தினரின் கேள்வியை வைத்துக் கொண்டு பிரதம மந்திரி பார்லிமெண்டில் செய்த பிரசங்கம் இந்த மகிழ்ச்சியையும், நம்பிக்கையையும் குலைத்து விட்டது. சந்திப்புக்கு முன்னமேயே 'தாம் விட்டுக் கொடுக்கமாட்டோம், பிடித்த பிடியை நழுவவிடமாட்டோம்' என்று பகிரங்கமாகச் சொல்லி விட்டபின் பேச்சுக்கு என்ன இடமிருக்கிறது? இது சாமர்த்தியமுமல்ல; ராஜ நீதியுமல்ல; மரியாதையும் அல்ல. நம்முடைய துரதிர்ஷ்டம்.

பிரதம மந்திரியின் பார்வை ஒரு வேளை கொழும்பில் நடக்கப் போகும் சமாதானக் கூட்டத்தை நோக்கிச் செல்கிறதோ என்னவோ, தெரியவில்லை. சீனா அபாயம் ஒரு நிரந்தர அபாயம் என்பதை உணர வேண்டும். இன்றோடு முடிந்து தீர்ந்துபோன விஷயமல்ல. என்றைக்கும் சாசுவதமாக இருக்கும் ஆபத்து. அதற்கு மருந்து நாமும் பாகிஸ்தானும் நட்பு மார்க்கத்தை அநுசரிப்பதேயாகும். நட்புக்கு வழி தேட வேண்டும். மறுபடியும் சந்தேகத்துக்கு இடம் தந்து விட்டது பரிதாபகரமான செய்தி.

## பாதுகாப்புச் சட்டம்

மூன்று நாள் விவாதத்துக்குப் பின் இந்தியப் பாதுகாப்புச் சட்டம் மக்கட் சபையில் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. இதன் மூலம் காங்கிரஸ் அரசாங்கத்துக்குப் பல துறைகளில் அமோகமான அதிகாரங்கள் அளிக்கப் பட்டிருக்கின்றன. ஏற்கனவே கடந்த ஆண்டுகளில் சர்க்காருடைய அதிகார பலம் பெருகி வந்திருக்கிறது. எனினும் நாட்டுக்கு ஏற்பட்டுள்ள ஆபத்தான நிலைமையை ஒட்டி இப்போது மக்களின் பிரதிநிதிகள் சர்க்காருக்கு மேலும் அதிகாரம் அளித்திருக்கின்றனர்.

பெருந்தன்மையுடன் கொடுக்கப்பட்ட இவ்வதிகாரத்தை ஜனநாயகத்துக்கும் மக்கள் உரிமைகளுக்கும் பாதகம் ஏற்படாத வகையில் அமுல் நடத்துவது மிகவும் அவசியம். எதிரியை விரட்டியடிப்பதற்காகப் பயன்படுத்தப்பட வேண்டிய அதிகாரத்தைக் கட்சியைப் பலப்படுத்திக் கொள்ளவோ, தனி மனிதர்களைத் துன்புறுத்தவோ உபயோகிக்கவாகாது. நெருக்கடி நிலைமை ஏற்பட்டுள்ள போதும் கூட நாட்டில் தேசிய அரசாங்கம் செயல்படவில்லை; காங்கிரஸ்தான் ஆட்சி நடத்துகிறது என்பதைக் கவனிக்கவேண்டும். ஆகையால் பாதுகாப்புச் சட்டத்தைப் பரந்த மனப்பான்மையுடன் அமுல் நடத்த வேண்டும் என்பது தெளிவாகும். இதைக் காங்கிரஸ் சர்க்காரும் உணர்ந்திருப்பதாக அரசாங்கத் தரப்பில் உறுதி கூறப்பட்டிருக்கிறது. பொதுமக்களும் விழிப்புடன் இருக்க வேண்டும்.

# இணையற்ற தலைவர்

## பாபு ராஜேந்திர பிரசாத்

ராஜாஜி என்று அன்புடன் அழைக்கப்படும் ஸ்ரீயுத ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் காந்திய சகாப்தம் அளித்த அரசியல்வாதிகளில் முன்னணியில் நிற்கும் ஒருவர். குறிப்பிட்ட ஒரு சமயத்தில் அவர் பின்பற்றும் ஒரு குறிப்பிட்ட வழியை ஒருவர் ஒப்புக் கொள்ளலாம்; ஒப்புக் கொள்ளாமலும் போகலாம். எனினும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவர் ஆற்றி வந்திருக்கும் பணி ஒப்பற்றதாகும்; மகத்தானதாகும். மகாத்மாஜி அரசியல் அரங்கத்தில் தோன்றியபோதே அவர் காங்கிரஸில் இருந்தார். எனினும் வேறு சில பெருந்தலைவர்களைப் போலப் பிரக்யாதி அடைந்திருக்கவில்லை. மகாத்மா காந்திஜிதான் அவரைக் கண்டுபிடித்து நாட்டுக்கு அளித்தார். அதிலிருந்து — அதாவது கடந்த நாற்பதாண்டுகளுக்கும், அதற்கும் மேலாக — ராஜாஜி முன் அணியில் இருந்து வருகிறார். குறிப்பாகச் சில சம்பவங்களைக் கூறி இதனை நான் விளக்க முற்படுகிறேன்.

அஹிம்சா முறையில் ஒத்துழையாமை புரியும் இயக்கத்தில் ராஜாஜி மிகுந்த உற்சாகத்தோடு சேர்ந்தார். உற்சாகம் காட்டியதோடு மட்டுமின்றி இயக்கத்தின் திட்டத்தையும் அதில் உள்ளடங்கிய விளைவுகளையும் தெளிவாகப் புரிந்து கொண்டு அதில் ஈடுபட்டவர் ராஜாஜி. எனவே, சீக்கிரத்திலேயே ஒத்துழையாமைத் தத்துவத்தை அதி சிறப்பாக விளக்கி, அதன் நியாயத்தை வலியுறுத்தி வாதிடுபவர்களில் ஒருவரானார் அவர். வேறு சிலரின் உதவியோடு அவர் அன்றைய சென்னை மாகாணத்தில் சுதந்திரப் போரை நிர்வகித்த முறை மக்களின் கவனத்தை உடனேயே கவர்ந்ததுடன் மற்ற மாகாணங்களில் உள்ளோரின் நன்மதிப்பைப் பெற்றது. 1922-ம் ஆண்டுத் தொடக்கத்தில் காந்தியடிகள் சிறை புகுந்த பின் காங்கிரஸின் காரியக்கிரமத்தைப் பற்றி அந்த ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்களுக்குள் கருத்து வேற்றுமைகள் தோன்றின. சட்டசபைகளையும், அரசாங்க அங்கீகாரம் பெற்ற பள்ளிகள், கல்லூரிகள் இவற்றையும், நீதி மன்றங்களையும், அரசாங்கம் அளிக்கும் விருதுகள், பட்டங்கள் ஆகியவற்றையும் பகிஷ்கரிக்க வேண்டுமெனக் காங்கிரஸ் நிகழ்ச்சித் திட்டம் வகுத்திருந்தது பலருக்கு நினைவிருக்கலாம். பிற்பாடு சுதேசி நூற்புக்கும் நெசவுக்கும் ஊக்கம் அளித்து விதேசித் துணிகளைப் பகிஷ்கரிக்கும் அம்சமும் திட்டத்தில் சேர்க்கப்பட்டது. திட்டத்தின் இந்தப் பல அம்சங்களில் சட்ட சபை பகிஷ்காரம் குறித்துக் காங்கிரஸில் அபிப்பிராய பேதம் எழுந்தது. தேசபந்து ஸி. ஆர். தாஸ், பண்டிட் மோதிலால் நேரு, வித்தல்பாய் பட்டேல், என். ஸி. கேல்கர் ஆகியோரின் தலைமை பெற்ற ஒரு கோஷ்டி சட்ட சபைகளில் காங்கிரஸ் பிரவேசிக்க வேண்டுமென்பதையும் சட்ட சபைக்குள்ளிருந்தே ஒத்துழையாமை நடத்த வேண்டுமென்பதையும் ஆதரித்தது. அப்போது ராஜாஜி, வல்லபபாய் பட்டேல், ஜமுனாலால் பஜாஜ் ஆகியோர் இன்னொரு பிரிவின் முன்னின்று சட்டசபைகளையும் பகிஷ்கரிக்க வேண்டுமெனக் கூறினர். சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்கத் தேசம் தயாராக உள்ளதா என்று ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிப்பதற்காக அப்போது காங்கிரஸ் ஒரு குழு நியமித்தது. அப்போதைக்குச் சட்ட மறுப்பு காரிய சாத்தியமல்லவென்று குழு அறிக்கை வெளியிட்ட பின் சட்ட சபையைப் பகிஷ்கரிக்கக் கூடாது என்றவர்களின் வாதம் வலுவும், வேகமும் பெற்றது. மிகுந்த செல்வாக்குள்ள பெருந் தலைவர்களில் பெரும்பான்மையோர் சட்டசபைப் பகிஷ்கார யோசனையை ரத்து செய்ய வேண்டும் என்று கூறினர். அவர்களை எதிர்த்து, பகிஷ்கரிக்க வேண்டும் என்ற கருத்தை நிலைநிறுத்தும் பொறுப்பு ராஜாஜியின் மீது விழுந்தது. 'மாறுதல் வேண்டாதார்' (No changers) கோஷ்டியின் தலைவரானார் அவர். பிரச்னையை நுணுக்கமாகப் பகுத்துப் பார்ப்பதிலும், கருக்கென்று தைக்கும்படி குற்றத்தை எடுத்



துக் காட்டுவதிலும், ஆதாரங்களை நிரம் பக் காட்டி வாதிடுவதிலும் ராஜாஜிக்கு உள்ள ஆற்றல் அப்போது வெகு சிறப்பாக வெளிப்பட்டது. தேசம் முழுவதிலும் அவர் நிகழ்த்திய பொது மேடைப் பேச்சுக்களில் மட்டு மின்றி அகில இந்திய காங்கிரஸ் குழுவிலும் இது போன்ற இதர ஸ்தாபனங்களிலும் அவர் ஆற்றிய உரைகளிலும் இந்த ஆற்றல் வெளிப்பட்டது.

அப்போதுதான் தேசபந்து தாஸ் தலைமையில் கயா காங்கிரஸ் நடைபெற்றது. காங்கிரஸின் வருடாந்தர மகாநாடுகளுக்குள்ளேயே மிகவும் அதிக நாட்கள் நடைபெற்ற மகாநாடு அது. காங்கிரஸ் சரித்திரத்திலேயே எந்த ஆண்டுக் கூட்டத்திலும் எந்த விஷயம் குறித்தும் நிகழ்ந்திராத அளவுக்குப் பல தரப்பினரும் சட்டசபைப் பிரவேசம் பற்றி விவாதித்தனர். அப்போது மாறுதல் வேண்டாதார், அதாவது காங்கிரஸின் மூல நிகழ்ச்சித் திட்டத்தில் எந்தவிதமான மாறுதலையும் எதிர்த்தவர்கள், மூன்றில் இரு பங்கு பெரும்பான்மையுடன் வெற்றி கண்டனர் என்றால் அதற்கு ராஜாஜியின் வாக்கு விலாசம் கொஞ்சம் நஞ்சம் காரணமல்ல. விஷயாலோசனைக் குழுவின் கூட்டங்களில் பேசியதோடு மட்டும் அவர் நிற்கவில்லை. இப் பிரச்னை வோட்டெடுப்புக்கு வரு முன்பு பற்பல மாகாணங்களிலிருந்தும் வந்திருந்த பிரதிநிதிகளின் முகாம்களுக்கெல்லாம் சென்று, ஒவ்வொரு கோஷ்டியுடனும் அவர் தனிப்படப் பேசினார். விமரிசனத் திறனுக்கும், ஆக்கமளிக்கும் யோசனைகளுக்கும், பிரச்னையைப் புத்தி கூர்மையுடன் பகுத்து விளக்கும் சாதுரியத்துக்கும் அவரது அந்த உரைகள் ஆதாரமாக விளங்கின.

சிறிது காலத்துக்குப் பின் அவர் நாட்டில் ஒரு சுற்றுப் பிரயாணம் மேற்கொண்டார். அப்போது அவருடன் செல்வதோடு, அவர் ஆங்கிலத்தில் நிகழ்த்திய பிரசங்கங்களை ஹிந்தியில் மொழிபெயர்க்கும் கௌரவமும் எனக்குக் கிடைத்தது. இது எனக்கு ஏராளமான விஷயங்களைக் கற்க ஒரு வாய்ப்பளித்ததோடு தனிப்பட நானாக உரைகள் நிகழ்த்தும் சிரமமும் எனக்கு ஏற்படாமல் செய்தது. அவரது ஜாஜ்வல்யமான பிரசங்கங்களுக்குப் பின் நான் சொந்தமாகப் பேசியிருந்தால் அவை சுவையற்றனவாகவே தோன்றியிருக்கும் என்று எண்ணுகிறேன்.

விளக்கிக் கூற முடியாத ஏதோ ஒரு விதத்தில் ராஜாஜியின் வாழ்க்கையில் சில சமயங்களைச் சந்தர்ப்பங்கள் உருவாக்கியிருக்கின்றன. இந்தச் சமயங்களில் அவர் பொது வாழ்வின் சர்ச்சைகளிலிருந்து அறவே விலகிக் கொண்டிருக்கிறார். மீண்டும் தாம் அரங்கிலேறித் தமது ஆற்றல்களின் உச்சியில் ஒளிர்வதற்கேற்ற தருணம் வரும் வரை தனித்தே இருந்திருக்கிறார். அத்தகையதொரு காலம் சட்டசபைப் பிரவேசம் குறித்த தீவிரமான சர்ச்சை அடங்கிய பின் வந்தது. அச்சமயம் மகாத்மா காந்தி நிர்மாணத் திட்டங்களில் முக்கியமாகக் கவனம் செலுத்தி வந்தார். நூற்பதையும், நெய்வதையும் மீண்டும் உயிர்ப்பித்து, ராட்டையின் பெருமையைப் பிரசாரம் செய்வது இந்த நிர்மாணத் திட்டங்களில் ஒரு முக்கியமான அம்சமாகும். தமது மாகாணத்தின் பிரதான நிர்வாகியாக நியமிக்

ராஜன்பாபுவும் ராஜாஜியும்



கப்பட்ட ராஜாஜி கதர் வளர்ச்சியை வெகு அற்புதமாக நடத்தினார். கதர் அபிவிருத்தியில் சிறப்பாக நிர்வகிக்கப்பட்ட மாகாணங்களில் சென்னையும் ஒன்றாயிற்று. ராஜாஜி காட்டிய வழியிலும், அவரது மேற் பார்வையிலும் ஸ்ரீ க. சந்தானம் முதலிய நண்பர்கள் கதர்த் திட்டத்தைச் சேலம் ஜில்லாவில் பரவலாகவும், தீவிரமாகவும் செயலாக்கி வந்தார்கள். சேலம் மாவட்டத்தின் உட்பகுதியில் ராஜாஜி நிறுவியிருந்த ஆசிரமத்துக்குச் செல்லும் நல்லதிர்ஷ்டம் எனக்குக் கிட்டியது. சொல்வதைத் தாமே அநுஷ்டித்துக் காட்டுவதென்ற தமது வழக்கத்துக்கேற்ப ராஜாஜி நூற்பதில் தாமே நல்ல தேர்ச்சி பெற்றார். தமது விசேஷமான அநுபவத்தாலும் அறிவாலும் கதர்த் திட்டத்தின் எல்லா அம்சங்களையும் தாமே வகுத்தார். சென்னைக் கதர் தேசமெங்கணும் பிரசித்தி பெற்றது. சென்னையின் கதர்ப் பணியைப் பார்ப்பதற்கென்றே நான் அம்மாகாணத்துக்குச் சென்றதாக நினைவு. அப்படிச் சென்றவிட மெல்லாம் கதர் அபிவிருத்தித் திட்டம் எவ்வளவு அழகாக உருவாக்கப் பட்டிருக்கிறது என்பதையும், உற்பத்தி அம்சம் மட்டுமின்றி, விநியோக, விற்பனை அம்சங்களும் எவ்வளவு சிறப்பாக நிர்வகிக்கப் படுகின்றன என்பதையும் என் கண்களாலேயே கண்டேன். கதர் பற்றியும், அது சம்பந்தமான விஷயங்கள் பற்றியும் இந்தக் காலத்தில் சந்தர்ப்பம் நேரும் போதெல்லாம் ராஜாஜி பேசி வந்தார். இவ்வாறு சில ஆண்டுகள் கழிந்தன.

அதன் பின்தான் 1930–ம் ஆண்டை ஒட்டி சட்ட மறுப்பு என்ற மகத்தான இயக்கம் ஆரம்பித்தது. யாவரும் எதிர்பார்த்தது போலவே ராஜாஜி மீண்டும் முன்னணிக்கு வந்து இயக்கத்தை நடத்தினார். வேறு பலரைப் போல ராஜாஜியும் சிறை புகுந்தார். அவ்வப்போது முறிவுபட்டு நடைபெற்ற இந்த இயக்கத்தின் முடிவில், 1937–ம் ஆண்டில் சட்ட சபைகளில் பிரவேசிப்பது என்ற கருத்தைக் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டது. சட்டசபைகளில் புகுவது மட்டு மின்றி, அன்றைய பிரிட்டிஷ் அரசாங்கம் சில நிபந்தனைகளுக்கு உட்பட்டால் காங்கிரஸார் மந்திரி பதவிகளையும் ஏற்க இணங்கலாம் என்று முடிவாயிற்று. இவ்வாறு முதன் முதல் மந்திரி சபை அமைத்தவர்களில் ராஜாஜியும் ஒருவர். சென்னை மாகாணத்தின் முதன் மந்திரியாக அவர் அற்புதப் பணி புரிந்தார்.

முதன் மந்திரி என்ற ஹோதாவில் அவர் காந்தியடிகளின் யோசனையின்மீது காங்கிரஸ் ஒப்புக் கொண்ட பல திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வந்தார். மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு, ஹிந்திப் பிரசாரம் ஆகியன இவற்றில் சிலவாகும். யதார்த்த உண்மையில் ஒரு தெளிவான பிடிப்போடு அவர் சென்னை மாகாணத்தில் ஆட்சி புரிந்தார். கடைசியில் இரண்டாவது மகா யுத்தம் மூண்டதன் பின்விளைவாக மற்ற காங்கிரஸ் மந்திரி சபைகளைப் போலவே ராஜாஜி மந்திரி சபையும் ராஜிநாமா செய்ய வேண்டியதாயிற்று. முதன் மந்திரியாக இருந்தபோது அவர் வெகு சீரிய சேவை புரிந்தார். ஏனைய மாகாண மந்திரிசபைகள் பின்பற்ற வேண்டிய 'மாதிரி'யாக அவரது நிர்வாகம் கருதப்பட்டது. வாதமிடுவதில் போல நிர்வாகம் புரிவதிலும் அவர் வெற்றி பெற முடியும் என்பதை அவரது ஆட்சி நிரூபித்துவிட்டது. சிறந்த நிர்வாகியானபடியால் அவர் தம்முடனும், தமக்குக் கீழும் ஒத்துழையாமை இயக்க காலத்தில் பணியாற்றிய பலரின் திறமையைப் பயன்படுத்திக் கொண்டார்.

ராஜாஜியைப் பற்றி இவ்வளவு அறிந்த நிலையில் ஒரு விஷயத்தைக் குறிப்பிடவேண்டும். அவர் காங்கிரஸைச் சேர்ந்த ஒரு தலைவராக இருந்தபோதிலும்—அழைப்பு விடுக்கப்பட்ட போதெல்லாம் அதன் திட்டங்களை அபாரமான ஆற்றலுடன் செயலாக்கியபோதிலும் — எப்போதுமே காங்கிரஸின் திட்டங்களையெல்லாம் மௌனமாகவும், மறுக்காமலும் அவர் ஆதரித்ததில்லை. அவர் தமது


சர்தார் படேல்


ஜமுனாலால் பஜாஜ்


ஸி. ஆர். தாஸ்

சகாக்களுடன் — ஏன், காந்திஜியுடனுமே கூட — மாறுபட்ட சந்தர்ப்பங்கள், தீவிரமாக மாறுபட்ட சந்தர்ப்பங்கள் உண்டு. ஆயினும் காந்தியடிகளுடன் அவர் ஓரிரு சமயங்களில் கருத்து வித்தியாசம் கொண்டதில் ஓர் அதிசயமான அம்சம் என்னவென்றால், அபிப்பிராய பேதமுள்ள போதிலும் அவர் காந்திஜியிடம் தாம் கொண்டிருந்த ஆழ்ந்த மதிப்பை இழந்த தில்லை. ராஜாஜியின் இந்த மனோபாவத்தையே காந்திஜியும் பிரதி பலித்தார். ராஜாஜியின் கூர்மையான அறிவு காரணமாக அவருடன் மாற்றுக் கருத்துள்ளவர்கள் அவரைக் கொண்டாடியிருப்பது போலவே சர்ச்சைகளில் அவரைக்கண்டு அஞ்சிய சந்தர்ப்பங்களும் உண்டு. 1942 ஆகஸ்டில் அகில இந்திய காங்கிரஸ் நிறைவேற்றிய 'வெள்ளையனே வெளியேறு' என்ற தீர்மானத்தில் நிறைவுற்ற இயக்கத்தைக் குறித்து ராஜாஜிக்கும் காந்திஜி உள்ளிட்ட மற்றவர்களுக்கும் தீவிரமான அபிப்பிராய பேதம் இருந்தது. இந்த இயக்கத்தை ராஜாஜி ஆமோதிக்காததால் அதிலிருந்து அவர் ஒதுங்கி நின்றார். எனினும் இதனால் அவரது எதிராளிகள் உள்பட யாருக்குமே அவரிடம் இருந்த நன் மதிப்பு குறையவில்லை. எனவேதான் 1947–ம் ஆண்டில் காங்கிரஸின் கைக்கு அதிகாரம் வந்தபோது அது அவரது சேவையை நாடிச் சென்று அதனைப் பல பதவிகளில் பயன்படுத்திக் கொண்டது. முதலில் அவர் கவர்னர் ஆனார். பின்பு கவர்னர் ஜெனரலானார். அதன் பிறகு மத்திய அரசாங்க மந்திரியானார். பின்னர் மீண்டும் சென்னை ராஜ்ய முதன் மந்திரி பதவியை ஏற்றார். ராஜாஜிதான் இந்தியாவின் கடைசி கவர்னர் ஜெனரல் என்பதை இங்கு குறிப்பிடலாம். அதிகார மாற்றம் ஏற்பட்ட பின் இந்தியா ஒரு குடியரசாகப் பிரகடனமானதால் கவர்னர் ஜெனரல் பதவி எடுபட்டுப் போய் அதனிடத்தில் ராஷ்டிரபதி தேர்வு என்று ஏற்பட்டது. எங்கு பதவி வகித்தாலும் எந்த ஹோதாவில் செயலாற்றினாலும் பலர் ஒத்துக்கூடி உழைக்குமாறு நிர்வகிப்பதில் தமது அசாத்தியமான மேதையையும் நிர்வாகத் திறமையையும் புலப்படுத்தியவர் ராஜாஜி. அவர் சென்னை ராஜ்ய முதன்மந்திரி பதவியிலிருந்து விலகிய பின்னர், காங்கிரஸ் கட்சியுடன் அவர் தொடர்பெல்லாம் முடிந்து போய் விட்டதால் தனிப்பட்ட ஒரு சுதந்திரச் சிந்தனையாளராக அவர் வாழ்வதாகவே எனக்குத் தோன்றுகிறது. சமீப காலத்தில், ஜனநாயகத்தில் ஆளும் கட்சி போலவே ஒரு கட்டுக்கோப்பான எதிர்க் கட்சியும் இருக்க வேண்டுமென அவர் எண்ணமிட்டார். இதே இலட்சியத்தை மனத்தில் கொண்டு அவர் சுதந்திரக் கட்சியை ஸ்தாபித்துள்ளார். சுதந்திரக் கட்சியானது காங்கிரஸின் கோட்பாடுகளுக்கு மாறுபடும் ஒரு பிரத்தியேகமான கோட்பாடு உள்ள கட்சியாகும். மக்களின் ஆதரவைப் பெற்றால் காங்கிரஸின் காரியக் கிரமத்துக்கு ஒரு மாற்றுத் திட்டத்தை நல்ல முறையில் உருவாக்கச் சுதந்திரக் கட்சியால் முடியும். காங்கிரஸ் திட்டத்துக்கு மாற்றாகச் சுதந்திரக் கட்சியில் தெளிவாக வரையறை செய்து, சீராக நிர்ணயிக்கப்பட்ட மாற்றுத் திட்டம் இருப்பது போல் கம்யூனிஸ்ட் கட்சி நீங்கலாக வேறு எந்தக் கட்சியிலும் கிடையாது. எனினும் அவர் இந்தக் கட்சியின் ஸ்தாபகராக மட்டுமே இருந்து மற்றவர்களை அதன் தலைவராகவும், காரியதரிசியாகவும், தேர்தலின் போது அபேட்சகர்களாகவும் இருக்கச் செய்து கட்சியின் விரிவான வேலை முறைகளை அவர்களிடம் ஒப்புவித்திருப்பது விசேஷமாகக் குறிப்பிட வேண்டியதாகும். அவரது கட்சிக் கொள்கைகளை விளக்கி காங்கிரஸ் கட்சியின் கொள்கைகளிலிருந்தும் மற்றக் கட்சிகளின் கொள்கைகளிலிருந்தும் அது எந்த இனங்களில் வேறுபடுகிறது என்று காட்டுவது என் காரியமல்ல. எனினும் சுதந்திரக் கட்சியின் சித்தாந்தம் தனக்கென்று விசேஷத் தன்மைகள் பொருந்தியது என்பதையும், அதன் கொள்கைகளை விளக்கத் திற



மோதிலால் நேரு



வித்தல்பாய் படேல்



க. சந்தானம்

னுள்ள பலர் இருக்கிறார்கள் என்பதையும், அவர்கள் பொதுமக்களின் மனத்தில் கட்சிக் கொள்கைகளைப் பதியச் செய்திருக்கிறார்கள் என்பதையும் மட்டும் நான் குறிப்பிடுகிறேன். இப்படிக் கட்சிக் கொள்கைகளைத் திறம்பட விளக்குபவர்களில் ராஜாஜியே அதி முக்கியமானவர். தேர்தலின்போது சுதந்திரக் கட்சியை நிறுவி இரண்டரை ஆண்டுகள்தான் ஆகியிருந்தன. எனினும் அது பல ராஜ்யங்களில் அபேட்சகர்களை நிறுத்தி வைத்தது. சிலவற்றில் அதற்கு மிகவும் கணிசமான ஆதரவு கிட்டியிருக்கிறது. ஒரு ராஜ்யத்தில் காங்கிரஸுக்கு அதுவே பிரதான எதிர்க் கட்சியாகவும் அமைந்துள்ளது. இந்த வெற்றிக்குப் பெருமளவு காரணம் ராஜாஜி என்ற தனி மனிதரின் பெருமையும், நாட்டு நலனைப் பற்றிய விஷயங்களை வாதிப்பதில் அவர் எடுத்துக்கொண்டுள்ள மகத்தான பங்குமே ஆகும்.

அண்மையில் காந்தி சமாதானக் கழகம் அணு ஆயுத சோதனைகளை ஆட்சேபிக்க ஒரு மகாநாடு கூட்டியது. ராஜாஜியை ஓர் அங்கத்தினராகக் கொண்ட ஒரு தூதுகோஷ்டி அமெரிக்கா, பிரிட்டன் முதலிய நாடுகளுக்குச் சென்றது. இன்னொரு கோஷ்டி ஸ்ரீ தேபர் அவர்களின் தலைமையில் ருஷ்யா சென்றது. இந்தத் தூது கோஷ்டிகள் மற்றப் பல நாட்டுத் தலைவர்களிடம் அணு ஆயுத எதிர்ப்புச் சம்மேளனத் தீர்மானங்களின் உட்பொருளை விளக்கி, உலக சமாதானத்தைக் கருதும் போது அணுசோதனைகளை நிறுத்த வேண்டியதன் அவசியத்தையும் அவசரத்தையும் அவர்கள் மனத்தில் பதிய வைக்க வேண்டியிருந்தது. ராஜாஜி தாம் சென்ற இடங்களிலெல்லாம் சோதனை நிறுத்தக் கருத்திலுள்ள நியாயத்தை வலிவுறப் பதியச் செய்தார் என்று கூறுவது மிகையாகாது. அவர் இவ்விஷயத்தை விவாதித்த இடங்களி லெல்லாம் அவரது வாதம் வெகுவாகப் பாராட்டப்பட்டது.

சென்ற சில ஆண்டுகளாக ராஜாஜி நிறைய எழுதி வருகிறார். முக்கியமாக **ஸ்வராஜ்யாவில்** வாரா வாரம் எழுதி வருகிறார். இன்றைய அரசாங்கத்தின் கொள்கை, திட்டம், செயல் போக்கு இவற்றைக் கண்டித்து விமர்சிப்பதில் தமது மதிகூர்மையைச் செலுத்தி எழுதி வருகிறார்.

சுதந்திரக் கட்சியானது தெளிவானதொரு கொள்கையுடனும், திட்டத்துடனும் உருவாவதற்கு அவருடைய எழுத்து பேர் ஆக்கம் அளித்துள்ளது. அதோடு மட்டுமின்றி, கட்சிக் கொள்கைகளையும் திட்டங்களையும் ஏற்காதவர்களிடையே கூடப் பொது விஷயங்களில் ஒரு சிரத்தையைத் தோற்றுவித்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. அவர் எழுதும் கட்டுரைகளை ஒரு குறிப்பிட்ட பத்திரிகை வாசகர்கள் மட்டுமின்றி மிகவும் பரந்து விரிந்த ஒரு வாசகர் வட்டம் படிக்கிறது. ஏனெனில் அவர் ஒரு பத்திரிகைக்கு எழுதுவதை மற்றப் பல பத்திரிகைகளும் பிரசுரம் செய்கின்றன. அவரது கருத்துக்களுடன் இணங்காதவர்களும்கூட அவருடைய இந்தக் கட்டுரைகளை மரியாதையுடன் படிக்கின்றனர் என்று திண்ணமாகக் கூறலாம்.

ராஜாஜிக்கு இன்று எண்பத்தைந்தாவது பிராயம் பிறக்கிறது. இந்த வயோதிகத்தில் அவர் தினந்தோறும், வாரந்தோறும் பத்திரிகைகளுக்கு நடப்புப் பிரச்னை பற்றியும், சூட்சுமமான பல விஷயங்கள் பற்றியும் கூட எழுதுகிறார்; அதோடு மட்டுமின்றி, அந்நிய நாடுகளுக்குத் தூது செல்கிறார் என்றால் அது தளராத மனத் திட்பத்தாலும், கடும் உழைப்பாலும் ஆற்றும் அற்புத சாதனையாகும். இந்தத் தளர்வின்மையையும், உழைப்பையும் கண்டு அவரைவிட வயதில் மிகவும் குறைந்தவர்களும்கூடப் பொறாமை கொள்ளலாம்! முதுமை ஏறிக்கொண்டே வந்த போதிலும் அவருடைய எழுத்தில் சிறிதும் சக்தி குன்றவில்லை. அன்று—நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு — 1922-ம் ஆண்டில் இருந்தாற் போலவே அவர் உள்ளத்தால் இன்றும் மகா பலசாலியாக இருப்பது அவர் எழுத்திலிருந்து தெரிகிறது. அவர் எழுதும் விஷயம்தான் மாறியுள்ளது; அவர் எழுத்தி

சிறந்து நின்ற சிந்தையோடு
தேயநூறு வென்றிவள்
மறந்த விர்த்தந் நாடர்வந்து
வாழிசொன்ன போழ்தினும்

இறந்து மாண்பு தீரமிக்க
ஏழ்மை கொண்ட போழ்தினும்
அறந் தவிர்க்கிலாது நிற்கும்
அன்னை வெற்றி கொள்கவே.



னுடைய நோக்கமும் மாறியுள்ளது. அந்த எழுத்தில் சம்பந்தப்பட்ட மனிதர்களும் மாறியுள்ளனர். ஆனால் அவரது தர்க்க ஞானமும், பகுக்கும் திறனும், கருத்துக்களும் முன் எப்போதும் அவை இருந்தாற் போலவே நுட்பமாகவும் கூர்மையாகவும் உள்ளன.

ராஜாஜி அரசியல் உலகில் கிளர்ச்சி புரிபவர் மட்டுமல்ல. முன்பே நான் சொன்னாற் போல் நானுதரப்பட்ட பதவிகளை வகிக்கும்போது, அவர் நிர்வாகத் துறையிலும் தாம் சிறப்பாகப் பங்கு கொள்ள முடியும் என்பதை ஸ்தூலமாகக் காட்டியுள்ளார். தாம் எடுத்துக் கொண்ட பல பணிகளில் தமது விசேஷமான தேர்ச்சியை முத்திரை யிட்டாற் போல் பொறித்திருக்கிறார். தமது சொந்த வாழ்விலேயே சீர்திருத்தங்கள் செய்த ஒரு தீவிர சமூக சீர்திருத்தவாதி அவர். ஆசாரம் மிக்க ஓர் அந்தணக் குடும்பத்தைச் சேர்ந்தவராயினும் ஜாதி பேதங்களை நேரடியாகத் தாக்கியவர் அவர். அவர் தேக இடம் என்ற செல்வம் அருளப் பெற்றவரல்ல. 1922—ம் ஆண்டை ஒட்டிய காலங்களில் அவர் ஆஸ்துமாவால் எவ்வளவு உபாதைப் பட்டிருக்கிறார் என்பது எனக்குத் தெரியும். இந்தக் குரூரமான வியாதியின் ஆரம்ப அநுபவங்களை அப்போதுதான் நானும் காணத் தொடங்கியிருந்தேன். இதில் ஓர் அசாதாரணமான அம்சம் என்ன வெனில் அவர் நோய்வாய்ப்பட்டிருக்கும் போதே கடுமையாக உழைத்தது மட்டுமல்ல; மருத்துவ முறையைவிடத் தமது வாழ்க்கையையும், உணவுகளையும், பழக்க வழக்கங்களையும் ஒழுங்காகத் திட்டப்படுத்திக் கொண்டதன் மூலமே வியாதியை அவர் சொஸ்தமாக்கிக் கொண்டது விசேஷமாகக் குறிப்பிட வேண்டியதாகும். பொது வாழ்வில் மட்டுமின்றி இதுபோன்ற சொந்த வாழ்க்கை அம்சங்களிலும் அவர் காட்டும் சங்கற்ப பலத்தையும் அவரது மகத்தான அறிவாற்றலையும் எண்ணினால் எனக்கேகூடச் சில சமயங்களில் பொறாமை உண்டாகி விடுமோ என்று தோன்றுகிறது. குடும்ப வாழ்வில் அவர் மகிழ்ச்சி கண்டவரில்லை. புத்திர சோகம் போன்ற துயரங்களுக்கு ஆளானவர் அவர். என்றுமே அவர் செல்வ நிலையில் வெகு செழிப்பாக இருந்ததில்லை. எனினும் உற்சாகத்தைக் குலைக்கச் செய்யும் இக் காரணங்கள் தமது பொதுப் பணியைப் பாதிப்பதற்கு அவர் அநுமதிக்கவில்லை. தனி வாழ்வில் ஒரு விசாரமும் இல்லாதவர் போலவே அவர் சேவை செய்து வருகிறார்.



ராஜாஜியும் ராஷ்டிரபதியும்

நமது பெருமை வாய்ந்த இதிகாச ரத்தினங்களான ராமாயணத்தையும் மகாபாரதத்தையும் எவ்வளவு பக்தி சிரத்தையுடன் ராஜாஜி தமிழ் வாசகர்களுக்கும், ஆங்கிலம் அறிந்தோருக்கும் அளித்திருக்கிறார் என்பதைக் கூறாவிடில் ராஜாஜியைப் பற்றிய எந்தப் பாராட்டுரையும் நிறைவுறாது.

**ரா**ஜாஜி எத்தகையவர் என்பதை ஒரே வார்த்தையில் கூறுமாறு கேட்டால் நான் இதைத்தான் சொல்வேன்: 'அவர் இணையற்றவர்'. ஒருவரோடு அவர் இணங்கும் போதும் இணையற்றவர்; இணங்காமலிருக்கும் போதும் தமக்கு இணையாக இன்னொருவர் இல்லாதவர். சிந்தனையில் இணையற்றவர் அவர்; செயலிலும் அதே போல் இணையற்றவர். அவருடைய அன்பையும், நல்லெண்ணத்தையும் பெற்றிருப்பது மட்டுமின்றி, இவற்றை இந்த நாற்பதாண்டுகளுக்கும் — அதற்கும் மேலாக — சிறு முறிவுகூட இல்லாமல் நான் அடைந்து வந்திருப்பது என் பாக்கியமாகும். நாங்கள் நோக்கும் கோணம் மாறுபட்டதுண்டு. எனினும் ஒருகண நேரம்கூட எங்களது நட்பு சிறிதும் குறைவோ, மாறுபாடோ அடைந்ததில்லை. ராஜாஜிக்காக நான் நம்பிக்கையுடன் பிரார்த்திப்பதெல்லாம் இதுவே: அவர் இன்னும் எத்தனையோ ஆண்டுகள் வாழ வேண்டும். வாழ்ந்து நம் தாய்நாட்டுக்குத் தமது ஒப்பற்ற தலைமையைத் தந்து வழிகாட்டி உதவ வேண்டும்.

# இதோ ஒரு மகா புருஷர்

**ஸ்ரீமதி ருக்மிணி தேவி**

ராஜாஜியின் பெயர் இந்தியாவிலுள்ள ஆண் பெண் பாலர் அடங்கலாக அனைவரும் அறிந்ததாகும். அவரது கருத்துக்களையும் லட்சியங்களையும் அறியாதாரும் நம்மில் கிடையாது. எனவே அவரைப் பற்றி ஒருவர் எழுதுகிறார் என்றால் ராஜாஜியைப் பற்றித் தமது கருத்துக்களை வெளியிடுவதில் அவர் கொள்ளும் மகிழ்ச்சியின் காரணமாக, எழுதுபவருக்கேதான் படிப்பவரைவிட அந்த எழுத்து அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

கடந்த ஐம்பதாண்டுகளில் நமது நாடு, அறிவிலும், ஆற்றலிலும், தலைமை தாங்கும் திறத்திலும் அசாதாரணமாக விளங்கிய சில ஆண்களையும் பெண்களையும் கண்டிருக்கிறது. ஒருவர்பின் மற்றவராக அவர்கள் மறைந்து விட்டனர். அவர்களின் மறைவால் நாம் இழந்தது எவ்வளவு என்பதைக் கூட நம்மால் புரிந்துகொள்ள இயலவில்லை. செய்ந் நன்றி என்பதை நமது முனிவர்கள் அளித்த புராதன நூல்கள் மிகவும் வலியுறுத்தியுள்ளன. எனினும் இந்த விலை மதிப்பற்ற நன்றி உணர்ச்சி இன்று காணப்படவில்லை. ஒரு மகாபுருஷரை நாம் ஏத்துகிறோம், போற்றுகிறோம், வீர வழிபாடு செய்கிறோம், தவறான வழியில் பயன்படுத்திக் கொள்ளவும் செய்கிறோம். அந்த மகாபுருஷர் மறைந்தபின் அவருக்கு நாம் சிலை எடுக்கிறோம், நினைவுச் சின்னம் எழுப்புகிறோம். அதன்பின் அவரை மறந்தே விடுகிறோம். எப்போதுதான் நாம் ஒரு மகாபுருஷரை சுய நினைப்பில்லாமல் மதிக்கவும் அவரது குணங்களை உள்ளபடி கண்டு, அவரை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளவும் கற்கப் போகிறோமோ? இந்தக் கேள்வியை நான் என்னிடமே கேட்டுக் கொள்கிறேன். நமது நாட்டினரிடமும் கேட்க விரும்புகிறேன். முதலில், நம் நாட்டுக்கு உண்மையிலேயே வழிகாட்டி இட்டுச் செல்லும் பெருமக்கள் எவ்வளவு பேர் தற்போது இருக்கிறார்கள்? 'பெருமக்கள்' என்று நான் சொல்லும் போது உண்மையிலேயே பெரும் குணங்கள் பொருந்தியவர்களைத்தான் குறிப்பிடுகிறேன். பெருந்தன்மை என்றால் புகழ் பெற்றிருப்பது என நான் எண்ணவில்லை. பெரும்பாலும் புகழ் என்பது பிரசாரத்தின் மூலம் கிடைக்கிறதே யன்றி, வழி காட்டி இட்டுச் செல்லும் திறத்தால் கிடைப்பதில்லை. உண்மையான பெருந்தகைமை என்பது அறிவாற்றல், எதனையும் தெளிவாக மதிப்பிடும் திறன், காரியத்தைச் சாதிக்கும் சக்தி இவற்றால் மட்டும் ஏற்படாது. இவற்றோடு இதயசுத்தமும், தான் எடுத்துக் கொள்ளும் பணியில் சுயநலக் கலப்பற்ற ஈடுபாடும், அப்பணிக்கே தன்னை அர்ப்பணித்துக் கொள்ளும் பான்மையும், நிரம்ப உள்ளவர்தான் உண்மையில் மகா புருஷராவார். இந்தக் குணங்கள் எல்லாவற்றையும் நாம் நிச்சயமாக ராஜாஜியிடம் காண்கிறோம். அதற்கும் மேலாக அவர் பழகும் பாங்கில் அசாதாரணமான வசீகரத்தைக் காண்கிறோம்.



நாட்டு உணர்வு படைத்தவர்கள் நாம். சுதந்திரம் பெற்றதிலிருந்து தாயகத்துக்காக என்ன செய்ய வேண்டும் என்பதை வாயளவிலாவது ஓயாமல் சொல்லி வருகிறோம். இப்படியாக, நம் நாட்டின் பல அரசியல் சித்தாந்தங்களைப் பற்றி நாம் கோஷம் எழுப்பியபடி இருப்பினும், நம்முடைய விமரிசனங்களைத் தலைவர்களிடம் சமர்ப்பித்தபடி இருப்பினும், நம்மில் எவ்வளவு பேருக்கு உண்மையிலேயே நாட்டிடம் கனன்று பொங்கும் அன்பு இருக்கிறது என்று நான் யோசிக்கிறேன். அவசர நிலைமை ஏற்பட்டால் நம் உள்ளத்தின் ஆழத்திலுள்ள உணர்ச்சி வெளிப்பட்டு நாம் ஒன்றுபடுகிறோம். இது ஓர் அற்புதமான பிரத்தியட்ச உண்மை. எனினும் உண்மையான நாட்டுப் பற்றைப் பற்றிய வினவுக்கு இது விடையாகாது. ஏனெனில் உண்மை அன்பு என்பது வெளியிலிருந்து ஓர் எதிரி ஏற்படும்போது மட்டும் வெளியாவதில்லை. அது எப்போதுமே இருப்பதாகும். இவ்வாறு தேசத்திடம் கொள்ள வேண்டிய உண்மையான அன்புக்கு உதாரணமாகக் கூறக் கூடிய ஓர் குறைவற்ற முழுமையான உருவகம் ராஜாஜி. அவர் விடுதலைக்காகப் போராடியவர். அன்றைக்கு வெளிஎதிரியாக விளங்கிய ஆங்கிலேயரை எதிர்த்து அவர் போராடினார். அதோடு அவர் நிற்கவில்லை. பின்பு அந்நிய எதிரியை விட ஆபத்தான உள்நாட்டு

எதிரியுடனும் அதே வேகத்துடன் போரிட்டவர் ராஜாஜி. தேசத்தின் விடுதலைக்குப் போராடும்போதே ராஜாஜி தேசமக்களுடைய உண்மையான விடுதலை என்ன என்பதையும் அறிந்திருந்தவர். அப்போது கண்டது போலவே இப்போதும், நாம் ஒரு தனித் தன்மை பொருந்திய தேசமாக அமைக்க வேண்டிய இந்தியா எப்படி யிருக்க வேண்டும் என்ற ஆதர்ச நிலையை அவர் தெளிவாகக் கண்டு வருகிறார்.

இந்தக் காட்சியில் அவர் இன்றுள்ள மற்ற எந்தத் தலைவரையும்விட தீர்க்கமான திருஷ்டி பெற்றுள்ளார். ஏனெனில் அவர் பாலங்களை ம், ஆலைகளையும், நுட்பத் தொழில் நிலையங் ளையும் எழுப்புவதால் மட்டும் உண்மை ான இந்தியாவை நிர்மாணிக்க முடியாது. க்களின் நடத்தையைச் சீராகச் சமைப்ப ால்தான் முடியும் என்பதை அறிந்திருக் ிறார். மக்களின் தரத்தை உயர்த்துவ தையே அவர் மிகவும் முக்கியமாகக் கருது ிறார். மற்ற அரசியல்வாதிகளைக் கண்டிக்கும் போது இதனையே அவர் இடையறாது வற் புறுத்தி வந்திருக்கிறார். 'ராஜாஜி விமர்சனம் செய்யும்போது புறநடவடிக்கைகளை மட்டும் குறைகூறி விமர்சிக்கவில்லை; புறநடவடிக்கை களைவிட நாட்டுக்கு இன்றியமையாத நிரந்தர மான தத்துவங்களையே அவர் பெரிதாகக் கருதிப் பேசுகிறார்' என்ற உண்மையை எத் தனை பேர் புரிந்து கொண்டிருப்பார்கள் என நான் எண்ணிப் பார்க்கிறேன். இவ்வாறு கருதுவதால் தான் ராஜாஜி அறிவாளிகளிடை மட்டுமே பேசாமல், எல்லாத் துறைகளையும் சேர்ந்த பொதுமக்களிடமெல்லாம் பேசு கிறார். குறிப்பாக இளைஞர்களுக்குத் தம் பணியை அர்ப்பணம் செய்யும்போது அவர் புராதன பாரதத்தின் போதனைகளையெல் லாம் அவர்களுக்கு அளித்திருக்கிறார். மகா பாரதம், ராமாயணம் போன்ற நூல்களை எழுதுவதில் அவர் நீண்ட காலத்தைச் செல விட்டிருப்பதற்குக் காரணம் இந்நூல்களின் ஆழ்ந்த முக்கியத்துவத்தை எல்லாரும் அறிய வேண்டும் என்பது மட்டுமல்ல; நம்முடைய பண்பாட்டு மரபை யாவரும் அறிய வேண் டும் என்பதும்தான்.

சாதி, இனம், சமயம் என்ற பாகுபாடுக ளறியாத மத உணர்ச்சி நிரம்பப் பெற்றவர் ராஜாஜி. புற அமைப்பைப் பொறுத்ததல்ல அவரது உண்மையான மதம். மனிதனின் இதயத்தில் அடங்கியது அவரது மதம். எனினும் அவர் தனிப்பட்ட முறையில் தெய்வ பக்தி மிகுந்தவர். ராமாயணத்தின் உபதேசங்களும், அது காட்டும் உதாரணங் களும் அவர் உள்ளத்தை எப்படித் தொடுகின் றன என்பதைக்காண்பதே ஓர் அநுபவமாகும்.

நம்முடைய முந்தையரின் இலட்சியங்களைச் சித்திரித்துக் காட்ட வேண்டும் என்பதில் நானும் நீண்ட காலமாக ஈடுபட்டு, நாட் டிய — நாடகங்களின் மூலம் இதனை முயன்று வருகிறேன். எங்களது ராமாயண நிகழ்ச் சிக்கு ராஜாஜியைப் பிரதான விருந்தாளி யாக வரவேற்று, அவர் நிகழ்ச்சியைக் கண் ணுறுவதைக் காணும் அருமையான அநுப வம் எனக்குக் கிட்டிற்று. அப்போது, ராமா யணக் கதை மட்டும் என்னுடைய இத யத்தை நெகிழ்விக்கவில்லை, ஸ்ரீ ராமனிடம் ராஜாஜி எவ்வளவு பக்தி காட்டுகிறார் என்பதனை அறிவதும் அதே அளவு நெகிழ்ச் சியை எனக்கு உண்டாக்கிற்று.

தயை, யாரையும் எளிதில் அணுகவிடும் தன்மை, யாருக்கும் உதவுவதற்கு எப்போதும் சித்தமாக இருத்தல், நம் நாட்டின் இலட்சி யங்களை எப்போதும் அகக் கண்ணில் கண்டு





அமெரிக்காவில், ராஜாஜிக்கும் பிரின்ஸ்டன் சர்வகலாசாலையைச் சேர்ந்த பிரபல விஞ்ஞானி டாக்டர் ஓப்பன்ஹெய்மருக்குமிடையே நிகழ்ந்த சந்திப்பின்போது எடுத்த படம்.

வருதல் — இந்தக் குணங்கள் பொருந்திய ராஜாஜி ஓர் உண்மையான இந்தியராவார்.

நம் தேசத்தின் அந்தராத்மாவைப் புரிந்து கொண்ட சிலரில் ராஜாஜியும் ஒருவர் எனக் கருதுகிறேன். அவர் நமது மக்களுடனே, உலகத்துடனே பேசும் போது தாம் சிந்திப்பதை மட்டும் வெளியிடவில்லை; பாரத நாட்டின் சிந்தனைக்கும் பிரதிநிதியாகவே விளங்க முயல்கிறார் என்பது என் உணர்ச்சி. இப்படிப்பட்டவர்களை நாம் காண்பது அரிதாகும். அவர்கள் வாழும்போதே நாம் அவர்களைப் போற்ற வேண்டும். ராஜாஜி நம்மிடையே இருக்கும்போது அவரிடமிருந்து நாம் எவ்வளவோ கற்க முடியும். அவரது சக்தியை நாமும் நம்முள் கொள்ள வேண்டும்.

அவர் பேசுவதிலிருந்து கற்பதைவிட, அவரது நன்னடத்தையிலிருந்து நாம் அதிகம் கற்க முடியும். அவர் ஓர் உதாரண புருஷர்; ஒரு மனிதன் தான் வாழ்ந்து காட்டும் விதத்தால்தான் பிறருக்கு அதிகம் போதிக்க முடியும். ராஜாஜி எங்கு சென்றாலும் அவரது தனித் தன்மை நிச்சயமாக உணரப்படும்.

அவர் சமீபத்தில் அமெரிக்காவிலும், பிரிட்டனிலும் பிரயாணம் செய்த போது அவரைச் சந்தித்தவர்களும் பேட்டி கண்டவர்களும் அவரைப் பற்றி ஆழ்ந்த நல்லபிப்பிராயம் பெற்றதில் எனக்கு ஆச்சரியமில்லை. ஜொலிக்கும் இதய சுத்தமும், உலக சமாதானத்துக்கு உதவுவதில் ஆர்வமும் கொண்ட ஓர் அசாதாரணமான மனிதர் அவர் என்பதை அவர்கள் கண்டார்கள்.

யாருமே அசட்டை செய்ய முடியாத பெரு மக்கட் கூட்டத்தைச் சேர்ந்தவர் ராஜாஜி. தாம் சரியானதென எண்ணுவதை வெளியிடுவதில் அவருக்குள்ள மகத்தான துணிவும், அவ்வாறு எண்ணியதைச் செயலாக்குவதில் அவர் காட்டும் அபூர்வமான சக்தியும் நம் எல்லாருக்கும் அற்புதமான உதாரணங்களாகும்.

அவர் மூப்படைந்தவர் என்று மக்கள் சொல்லுகிறார்கள். ஆனால் எனக்கோ அவரைவிட வயதில் சிறிய நம்மில் பலர் அவரைவிட உண்மையில் மூப்புத் தட்டிப் போனவர்கள் என்று தோன்றுகிறது. ஏனெனில், அவர் வயதில், அவர் ஆற்றும் பணியை நம்மால் இன்று செய்ய இயலாது.

இத்தகைய சக்தியும் அவருக்குத் தமது இலட்சியங்களிலிருந்தும், ஆன்ம பூரணத்துவத்திலிருந்தும்தான் கிடைக்கிறது. ஆதலின் இந்தியாவின் உண்மைச் சித்திரத்தைக் காணும் ஓர் இந்தியர் அவர். அவருக்கு நம் பாராட்டைத் தெரிவிக்க வேண்டுமானால் அவருடனேயே நம்மை சாம்யப் படுத்திக் கொண்டு அவர் காணும் இலட்சிய பாரதக் காட்சியில் ஒன்றுவதே வழி.

அவர் இன்னும் எத்தனை எத்தனையோ ஆண்டுகள் வாழ வேண்டும் என்று நான் பிரார்த்திக்கிறேன்; நம்புகிறேன். இல்லாவிடில், நம் நாடு அநாதை போலாகும்.

வானொலியில் பேசியோர் அ[illegible] இடையறாது சக்தியை வளர்த்துக் கொண்டிருக்கும் [illegible] மூலம் ஆண், பெண், குழந்தை அடங்கலாக மக்கள் அனைவருக்கும் உதவ வேண்டும் என்பதே என் பிரார்த்தனை.



# மாதர் மன்றம்

அன்று அலமேலு மாமி மங்களம்மாள் வீட்டுக்கு மிகுந்த ஆத்திரத்தோடு வந்தாள். அது அந்த அம்மாள் வந்த நடையின் வேகத்திலேயே தெரிந்தது. அவ்வளவு ஆத்திரத்துக்கும் காரணத்தை வந்ததும் வராததுமே கொட்டி விட்டாள்.

''இந்த அக்கிரமத்தைப் பார்த்தீர்களோ! காய்கறி விலையெல்லாம் யானை விலை, குதிரை விலையாக ஏறிப் போச்சு! மார்க்கெட்டுக்கு ஒரு ரூபாய் எடுத்துக் கொண்டு போனால் ஒன்றுமே வாங்கும்படியாக இல்லை. எல்லாமே ஒரு ரூபாய்க்கு மேலே இருக்கு!'' என்றாள்.

''நீங்கள் வீசைக் கணக்கிலே விசாரிப்பீர்கள்! எல்லாம் கிலோ கணக்கிலே கேட்டிருந்தீர்களானால் சல்லிசாக இருந்திருக்கும். ஒரு கிலோ பீன்ஸ் ஐம்பது பைசா, ஒரு கிலோ கோஸ் தொண்ணூறு பைசா என்று சொல்லியிருப்பார்களே!'' என்று குறும்புப் புன்னகையுடன் மங்களம்மாள் சொன்னாள்.

''ஆமாம், இந்தக் கிலோ கணக்கு வேறே வந்து மூளையைக் குழப்புகிறது!'' என்றாள் அலமேலு மாமி.

அதற்குள் மங்கையர்க்கரசி அம்மாள், ''அன்றைக்கு மாம்பலம் பனகல் பார்க் மார்க்கெட்டிலே பீன்ஸ் வாங்கினேன். விலை விசாரிக்கிறச்சே, வீசைக் கணக்கிலே கடைக்காரர் பதில் சொன்னார். தராசு நிறுத்துப் போடும் போது தட்டிலே மூணு படிக்கல் இருந்தது! 'என்னப்பா?' என்று விசாரித்தால் 'முந்நூறு கிராம் படிக்கல்லு அம்மா!' என்றார். 'நீ சொன்னது வீசைக் கணக்கிலே! ஆனால் கிராம் கணக்கிலே நிறுத்துத் தர்றேயே?' என்றேன். அதற்கு அந்தக் கடைக்காரர் என்ன பதில் சொன்னார் தெரியுமோ?' என்று சொல்லி நிறுத்தினாள்.

''என்ன சொல்லியிருப்பார், 'இஷ்டமிருந்தால் வாங்கிக்கோ, கஷ்டமாயிருந்தால் போயேன் அம்மா' என்று சொல்லியிருப்பார். வேறு என்ன?'' என்று சுபத்ரா டக்கென்று சொன்னாள்.

மங்கையர்க்கரசி அம்மாள், ''அதெப்படி அவ்வளவு கரெக்டா சொன்னாய்? நீயும் அந்தக் கடைக்காரனிடம் வாவு வாங்கிக் கொண்டு வந்தாயோ?'' என்று உண்மையான ஆர்வத்தோடு கேட்டாள்.

மற்றவர்களுக்குப் பெரும் ஹாஸ்யமாக இருந்தது. 'கொல்' என்று சிரித்து விட்டார்கள்!

மங்களம்மாள் அந்த விஷயத்தை அங்கேயே விடவில்லை. ''சென்னை அரசாங்கம் பங்களாத் தோட்டங்களில் காய்கறிப் பயிர் செய்யச் சொல்வதற்கு ஒரு கமிட்டி போட்டிருக்கிறதாமே!'' என்றாள்.

மங்கையர்க்கரசி அம்மாள், ''இதற்கும் ஒரு கமிட்டியா?'' என்றாள்.

''ஆமாம், இந்தக் கமிட்டியினர் வீட்டுக்கு வீடு தொண்டர்களை அனுப்பி வீட்டைச் சுற்றியுள்ள காலி மனையில் காய்கறித் தோட்டம் போடச் சொல்லி ஊக்குவிக்கப் போகிறார்களாம்!'' என்றாள் மங்களம்மாள்.

''யோசனை யெல்லாம் பிரமாதம்தான்; ஆனால் இந்த மாதிரி பங்களாவில் விளைந்து வரும் கத்திரிக்காய் ஒரு வீசை பத்து ரூபாயாக இருக்கும். அதைப் பார்க்கும் போது மார்க்கெட்டிலே ஏகத்தாளுக விற்கும் கத்திரிக்காயும் வெண்டைக்காயுமே சல்லிசு என்று ஆகிவிடும்'' என்றாள் மங்கையர்க்கரசி.

''இது என்ன கூத்தாக இருக்கிறது?'' என்றாள் அலமேலு அம்மாள்.

''ஆமாம், பங்களாவிலே வசிக்கிறவர்களா தோட்ட வேலை செய்யப் போகிறார்கள்! ஐம்பது ரூபாய் அறுபது ரூபாய் என்று சம்பளம் கொடுத்து ஒரு தோட்டக்காரனை வைத்து வெண்டைக்காயும் கத்திரிக்காயும் அவரைக்காயும் விளைவித்தால் அது வீசை பத்து ரூபாய் என்ன, முப்பது ரூபாய் கூட ஆகும்!'' என்று கணக்குச் சொன்னாள் மங்களம்மாள்.

''நம்ம நாட்டுப் புருஷர்கள், படித்த பெண்கள் வீட்டு வேலை செய்யக் கூச்சப்படுகிறார்கள் என்று ஓயாமல் குறை சொல்லுகிறார்கள். படித்த புருஷர்கள் மட்டும் என்ன வாழ்ந்தார்களாம்? அவர் அவர்கள்





வீட்டுக் கொல்லையிலே காலையிலும் மாலையிலும் தினம் இரண்டு மணி நேரமாவது கொத்தி வேலை செய்தால் வீட்டுக்கு வேண்டிய காய்கறியும் கிடைக்கும். மார்க்கெட்டிலேயே காய்கறி விலையும் குறையும்'' என்றாள் சுபத்ரா.

''மேனாட்டிலே எல்லாம் காலேஜுக்குப் போய்ப் படித்து விட்டு வந்தால் உடல் உழைத்துத் தோட்ட வேலை போன்ற வேலை செய்வது இழிவு என்று நினைக்கிறதில்லை. ஏன் நம் நாட்டுக்குப் போன மாசம் நெதர்லண்ட்ஸ் தேசத்துப் பட்டத்து இளவரசி பியாட்ரிக்ஸ் வந்திருந்தாளே, அவள் சாதாரணப் பிரஜையைப் போல் வளர்ந்தவளாம். சாதாரணப் பள்ளிக்கூடத்தில் இந்த இளவரசி சேர்க்கப்பட்டாளாம். அங்கு மாணவ மாணவிகளுக்குக் கல்வி மட்டுமின்றித் தரையை மெழுகுவது, அறையைக் கூட்டுவது போன்ற வேலைகளும் கற்றுக் கொடுக்கப்பட்டனவாம்'' என்றாள் கலோசனா.

''நெதர்லண்ட்ஸ் - ங்கிறது....'' என்று இழுத்தாள் பூகோளத்தில் கொஞ்சம் வாசிப்பே பழக்கப்பட்ட சுபத்ரா.

''நெதர்லண்ட்ஸைத்தான் நாம் ஹாலந்து ஹாலந்து என்று சொல்கிறோம். நிஜத்திலே ஹாலந்து நெதர்லண்ட்ஸின் இரண்டு மாகாணங்களின் பெயர்தான். இப்படித்தான் தேச எல்லைகளைப் பல நிஜசாகக் குறுக்கியும் பெருக்கியும்...'' என்று கூறிய கலோசனா சீனாவின் எல்லை விஸ்தரிப்புத் திட்டம் நினைவு வந்தவளாக யோசனையில் ஆழ்ந்தாள்.

அலுமேலு அம்மாள் நினைவும் அதே திசையில்தான் பாய்ந்தது. ''அது சரி, சீன யுத்தம் எப்படி இருக்காம்?'' என்றாள்.

''சண்டை என்றதும் நம்ம வீரர்களின் திறமை உடனே ஞாபகம் வருகிறது. நேப்பாப் பகுதிக்கே போய்ப் போர்முனையைப் பார்வையிட்ட அமெரிக்கப் பிரிட்டிஷ் ஜெனரல்களே நம்ம ஜவான்களின் போர் ஆற்றலை எவ்வளவு பாராட்டியிருக்கிறார்கள்! இந்த வீர சேவையிலே தமிழ் நாடும் சளைத்து விடவில்லை என்பது எவ்வளவு பெருமையாயிருக்கு'' என்றாள் சுபத்ரா.

''அந்தக் கிருஷ்ணமூர்த்தி ஒருத்தர் போதுமே! அவர் செய்த சாகசச் செயலை ஜெனரல் திம்மையா கண்கள் பனிக்கச் சொன்னது நினைவுக்கு வருகிறது'' என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

''அது என்ன அம்மா?'' என்று ஏக காலத்தில் எல்லோருமே கேட்டனர்.

''லடாக்கின் வட மேற்குப் பகுதியான அக்ஸாய் சின்னில் சீனர்கள் சாலைகள் அமைத்து வருகிறார்கள் என்ற விவரங்கள் பத்திரிகைகளில் சில ஆண்டுகளுக்கு முன்பு வந்து கொண்டிருந்தன அல்லவா? அது உண்மையா, அல்லது வெறும் கட்டுக் கதைதானா என்பதை நேரில் பார்த்து விட்டு வரவேண்டும் என்று தீர்மானமாயிற்று. கிருஷ்ணமூர்த்தி என்ற ஜவான்தான் இதைச் செய்ய முன் வந்தார். அவர், கூட இருபது பேருடன் பல நாட்கள் மலைகளிலும் காடுகளிலும் கஷ்டப்பட்டு நடந்து அக்ஸாய் சின் பிரதேசத்தில் சீனர்கள் சாலை போடும் பகுதிக்கே போய்ச் சேர்ந்தார். வந்த கதைகள் கட்டுக் கதைகள் அல்ல, உண்மையே என்பதை அறிந்தார். ஏனெனில் அவர் அச்சாலையிலேயே நின்று கொண்டிருந்தார்! உடனே அவரைச் சீனப் படை வீரர்கள் சூழ்ந்து கொண்டு விட்டார்கள். சீனப் பகுதியில் பிரவேசித்ததாகக் கையெழுத்துப் போடும்படி சீனர்கள் வற்புறுத்தினார்கள். எவ்வளவு மிரட்டியும் அவர் பணியவில்லை. அவரைச் சில காலம் தனியாகச் சிறைப்படுத்தி வைத்தார்கள். அப்போதும் அவர் பணியவில்லை! கடைசியில் 'நான் என்னுடைய நாடு என்று உறுதியாகக் கருத, சீனர்கள் தங்கள் நாட்டைச் சேர்ந்த பகுதி என்று நினைக்கும் பிரதேசத்தில் இருக்கிறேன்' என்று சாமர்த்தியமாக எழுதிக் கொடுத்தார். அதற்குப் பிறகுதான் அவரை விடுதலை செய்தார்களாம்'' என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

''இதைக் கேட்கும் போது நமக்குக் கூடத்தான் நெஞ்சம் நெகிழ்கிறது. இப்படிப் பட்ட வீரப் புதல்வனைப் பெற்ற மகராசியை நினைத்துக் கையெடுத்துக் கும்பிடத் தோன்றுகிறது!'' என்றாள் மங்களம்மாள்.

''பஞ்சாபிலே ஓர் அம்மா, இப்போதுதான் தன் புருஷனைப் போரிலே இழந்திருக்கிறாள்! அந்தத் துக்கம் தீருவதற்கு முன்பு தன் பிள்ளையையும் படையில் சேர அனுப்பி விட்டாளாம்! எவ்வளவு நெஞ்சுரம் இருக்க வேண்டும்!'' என்றாள் சுபத்ரா.

''இன்று மாலை பாரதியாரின் 81-வது பிறந்த நாள் விழா நடக்கிறது! போகலாமா?'' என்றாள் மங்களம்மாள்.

''அப்படியானால் இப்பவே அவரவர்கள் வீட்டுக்குப் போய்க் காரியங்களைப் பார்த்தால் தான், இராத்திரி விழா முடிந்து வீட்டுக்கு வந்தால் சௌகரியமாக இருக்கும்'' என்று கூறி எழுந்திருந்தாள் மங்கையர்க்கரசி. அனைவரும் கலைந்தனர்.

—இந்துமதி

நம்முடைய நாட்டில் உள்ள மக்கள் நல்வழியில் நின்றாலே தான் நம்முடைய முயற்சிகள் பயன் அடைந்து நாடு செழிக்கும். நல்வழி என்பது சமூக ஒத்துழைப்புக்கு இன்றியமையாதது. நல்வழி இல்லையேல் ஒத்துழைப்புக்கு இடமில்லை. சந்தேகம், மோசம், சுயநலக் கவலை, திருட்டு இவைதான் மிஞ்சும். நல்வழிக்கு இன்றியமையாத வாய்க்கால் தண்ணீர் தெய்வ பக்தி. இதைத் தான் நான் வற்புறுத்தி வருகிறேன். கையை மேலே தூக்கி 'இது சத்தியம்! சத்தியம்!' என்கிறேன்.

—ராஜாஜி




# நோபின்

சொறிசிரங்குகள், பருக்கள், கொப்புளங்கள், கட்டிகள், புண்கள், காயங்கள் முதலியவற்றிற்கு

# மார்க்வென்டம்

நீம் க்ரீம்




CF-8TH-4

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை-1

---



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி

தபால் பெட்டி நெ. 414, மதராஸ்-5

தந்தி: 'EVERMANS' போன்: 85834

சேரக் கடைசி தேதி 13-12-1962 ... முதல் ஏலத் தேதி 15-12-1962

**25 மாதங்கள்** — **மாதாந்திரச் சீட்டுகள்** (3-வது சனிக்கிழமை ஏலங்கள்) — **25 அங்கத்தினர்கள்**

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

டெல்லி கிளை ஆபீஸ்கள்: கான்லைன் ஹவுஸ், 1/24, ஆஸப் அலி ரோடு, புது டில்லி-1 ★ பாலுஸேரி பில்டிங் 14-A/4, W.E.A. கரோல்பாக், புது டில்லி-5 ★ 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டில்லி-3 பெங்களூர் கிளை ஆபீஸ்: 185, முதல் மாடி, ஆறுவது கிராஸ், காந்தி நகர், பெங்களூர்-9 ★ பம்பாய் கிளை ஆபீஸ்: "விஜய விஹார்" 17-A, ஸயான் மாதுங்கா எஸ்டேட் (கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்) பம்பாய்-22 ★ கல்கத்தா கிளை ஆபீஸ்: 48, லேக் பிளேஸ், கல்கத்தா-29

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

# கவிஞன் கொட்டும் போர்முரசு

அகிலன்

நமது நாட்டின் வடக்கு எல்லையைச் சிற்றடிச் சீனம் ஆக்கிரமித்துக் கொண்டுள்ள இந்த நெருக்கடியான காலத்தில் கவிஞர் பாரதி உயிருடன் இருந்திருந்தால் அவருக்கு வயது 81 ஆகியிருக்கும். சினத்துடன் சீறி யெழும் வீராவேசக் கவிதைகள் பல பாடி நாட்டு மக்கள் அனைவரையும் திரட்டுவதற்காகப் போர்முரசு கொட்டியிருப்பார்.

ஆனால் மகா கவிகள் எக்காலத்துக்கும் ஏற்ற உண்மைகளை அவர்கள் காலத்திலேயே பாடி விட்டுச் செல்லும் வழக்கம் உடையவர்கள்.

வீரன் சௌரி தன் சேனைகளுக்கிடையில் நின்று சங்க நாதம் செய்வதுபோல் இந்த நாட்டு இளைஞர்களுக்காக வீர முழக்கம் செய்கிறார் கவிச்சக்கரவர்த்தி பாரதியார்.

**"ஜய ஜய பவானி! ஜய ஜய பாரதம்!"**

எடுத்த எடுப்பிலேயே கவிஞனின் குரலில் வெற்றி முழக்கம் கேட்கிறது. பாரத நாட்டின் வெற்றிக்காகப்



மகாகவி பாரதியார் தம் வாழ்நாளில் பட்ட கஷ்டங்களைப் பற்றிச் சிலர் அடிக்கடி பேசுகிறார்கள். அது தேவையில்லாத பேச்சாகும். அடர்த்தியான ஆலமரம் மக்களுக்குக் குளுமையையும், நிழலையும் தருகிறது. ஆனால் தானே வெய்யிலில் காய்கிறது. இந்த ஆலமரத்தின் சுபாவம்தான் மகான்களின் சுபாவமும். பிறர் சுகப்படுவதற்காக அவர்கள் கஷ்டப்படுகிறார்கள். ஆலமரம் வெயிலில் நிற்கிறதே என்று நாம் புலம்புவதனால் என்ன பயன்?

—ராஜாஜி

பவானிக்கு வாழ்த்துக் கூறிவிட்டுத் தமது கவிதையைத் தொடங்குகிறார்.

"பாரத பூமி பழம்பெரும் பூமி,
நீரதன் புதல்வர் : இந்நினைவகற்றாதீர்!
பாரத நாடு பார்க்கெலாம் திலகம்,
நீரதன் புதல்வர்; இந்நினைவகற்றாதீர்!"

தேசபக்தியும் நாட்டைத் தாய்க்குச் சமமாக நினைக்கும் உணர்வும் இல்லாதவர்களால் தேசத்தின் வெற்றிக்காக முழு மூச்சோடு போராடத் திரண்டெழ முடியாது. உள்ளத்திலே பாசமும், பக்தியும் இருந்தால்தான் மெய்யான போராட்ட உணர்ச்சி மக்களிடம் ஏற்படும். ஆகவே தான் தாய்த்திருநாட்டின் பெருமையை விரிவாய்க் கூறும் கவிஞர் 'நீரதன் புதல்வர் இந்நினைவகற்றாதீர்!' என்று பல முறை மீண்டும் மீண்டும் வலியுறுத்திக் கூறுகிறார்.

அத்தகைய பெருமை வாய்ந்த நாட்டுக்கு இப்போது அநீதி இழைக்கப்படுகிறது. நிலைமையைக் கண்டு பொங்கி எழுகிறார் கவிஞர் பாரதியார்.

"தாய்த்திரு நாட்டைத் தறுகண்மிலேச்சர்
பேய்த் தகை கொண்டோர்...பகைவர்,
வானகம் அடக்க வந்திடும் அரக்கர்போல்
இந்நாள் படை கொணர்ந்து
இன்னல் செய்கின்றார்"

உலகம் முழுவதுமே அமைதியாக வாழ வேண்டும் என்ற பெரு நோக்கம் படைத்த ஒரு நாட்டின் மீது வேண்டுமென்றே பகைமை கொண்டு போர் தொடுக்கத் துணிந்தவன் எத்தகைய பேய்க் குணம் கொண்டவனாக இருப்பான்! — படையெடுப்பும் நடந்து விட்டது. இன்னல்களும் தொடர்ந்து விட்டன.

"மக்களாய்ப் பிறந்தோர் மடிவது திண்ணம்!
ஆனெனப் பெறுவோம்! அன்றி நாம் இறப்பினும்
வானுறு தேவர் மணியுலகடைவோம்!"

நெஞ்சிலே வீரத்தின் வித்தை ஆழமாக ஊன்றிவிடுகிறார் கவிஞர். 'ஆறிலும் சாவு நூறிலும் சாவு' என்பதை நினைவூட்டி இந்தப் போரில் இறக்க நேர்ந்தால் அங்கே வீர சுவர்க்கம் காத்திருக்கிறது என்கிறார்.

ஆகவே,

"போர் எனில் இது போர்
புண்ணியத் திருப் போர்!
பாரினில் இது போல்
பார்த்திடற்கு எளிதோ?"

போர் முரசு கொட்டி விட்டான் வீரத் திருமகன். கவிக் குரலில் இடி இடிக்கிறது. புயல் சீறுகிறது. மின்னல்கள் பாய்கின்றன.

"தாய்த் திருநாட்டைத்
தகர்த்திடு மிலேச்சரை
மாய்த்திட விரும்பான்
வாழ்வுமோர் வாழ்வுகொல்?

தாய்பிறன் கைப்படச்
சகிப்பவனாகி
நாயென வாழ்வோன்
நமரிலிங் குளனோ?"

'தாய்த்திரு நாட்டைத் தகர்த்திடு மிலேச்சரை மாய்த்திட விரும்பாதவன் வாழ்வு ஓர் வாழ்வில்லை; தாய்நாட்டைக் காக்க முன் வாராதவன் நாயினும் கீழ்ப்பட்டவன். ஆகவே அனைவரும் திரண்டு வாரீர்' எனக் கூவுகிறான்.

"வெள்ளியில் இது போல்
வெள்ளிபொன் றில்லை!
தவத்தினில் இதுபோல்
தவம் பிறிதில்லை!"

கவி பாரதியாரின் வீரப் போர்முரசை மீண்டும் செவிமடுத்து ஊக்கமும் உளவலியும் போராட்ட உணர்ச்சியும் பெறவேண்டிய அவசியம் இன்றைக்கு நமக்கு வந்து விட்டது.

இந்தச் சவாலை நாம் ஏற்றுக் கொண்டு இனி என்றுமே எந்தப் பகைவருமே நமது எல்லைக்குள் கால் வைக்கத் துணியாத அளவு வலிமையை நாம் வளர்த்துக்கொள்வோமாக! — பாரதியாரின் போர் முரசம் என்றும் ஒலித்துக் கொண்டே இருக்கட்டும்; என்றுமே நாம் விழிப்புடன் இருப்போம்.



# மரத்தைச் சேலையாக மாற்றுகிறோம்!

மாயாஜாலமோ என மலைக்கவும் வேண்டாம். சாதாரண விஞ்ஞான வித்தைகளில் ஒன்று தானே என்று அசிரத்தையாக இருக்கவும் வேண்டாம். விஞ்ஞானிகளின் வேலைத் திறனை அறிந்துகொள்வது நல்லது. வெறும் கட்டை, கரி, கல் ... இவற்றிலிருந்து கயிறு திரிக்கும் ஆற்றலுள்ளவர்கள் சாதாரணக் கயிறு? அதுதானில்லை. பட்டைப்போன்ற மெல்லிய நூலிழைகளாக மாற்றிவிடுவார்கள். இந்த நூலிழைகளிலிருந்துதான் பிபின் ஸில்க் மில்லிலுள்ள நாங்கள் துணிகளை நெய்கிறோம். கண்கவர் வனப்பும், நம்பவே முடியாத உறுதியுமமைந்த, பட்டுக்கீடான செயற்கைப் பட்டுப் பொருள்கள்!

பிபின் ஸில்க் மில்ஸ் கம். ப்ரை. லிட்.,  12, தாதர் ரோட், பம்பாய்—14.

இது ஒரு ரோஹித் க்ரூப் ஸ்தாபனம்.

# பல்லாண்டு வாழ வேண்டும்

## பி. டி. ராஜன்

இருபதாம் நூற்றாண்டில் வாழ்பவர்களை ஒரு வகையில் அதிர்ஷ்டசாலிகள் என்றே கருத வேண்டும். ஏனெனில் இந்த நூற்றாண்டில் புதிய உலக வரலாறு உருவாகும் ஒவ்வொரு கட்டத்தையும் நேரில் பார்க்கும் வாய்ப்புப் பலருக்கும் அதில் பங்கெடுத்துக் கொள்ளும் வாய்ப்புச் சிலருக்கும் இருக்கிறது.

இராஜாஜி பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிறந்தவர் எனினும் இருபதாம் நூற்றாண்டிற்குத்தான் அவருடைய சேவைகள் பரிபூரணமாகக் கிடைத்திருக்கின்றன. உலக வரலாற்றில் இருபதாம் நூற்றாண்டே பல வகைகளிலும் முக்கியத்துவம் பெற்றது. பல பெரிய நிகழ்ச்சிகளும் மாற்றங்களும் இக் காலத்தில்தான் நடைபெற்றுள்ளன.

1962 டிசம்பர் 8-ந் தேதி இராஜாஜியின் 85-ஆம் பிறந்த நாளாகும். நாட்டில் உள்ள நெருக்கடி நிலையை எண்ணித் தமது பிறந்த நாளைக் கொண்டாட வேண்டுமென்ற பொது மக்கள் விருப்பத்துக்கு இராஜாஜி சம்மதம் கொடுக்கவில்லை. ஆகையால் அவருக்குப் பிறந்த நாள் வாழ்த்துக்களைக் கல்கியின் சிறப்பு மலர் மூலம் பலர் தெரிவித்துக் கொள்கின்றனர்.

இராஜாஜி இந்திய மக்களுக்கும் உலக மக்களுக்கும் செய்து வரும் சேவையை நாம் சீர்தூக்கிப் பார்க்கும்போதுதான் இந்தியத் தலைவர்கள் வரிசையில் மட்டுமின்றி உலகத் தலைவர்கள் வரிசையிலும் அவருக்கு ஓர் இடம் உண்டு என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

இதிகாசங்களிலும் புராணங்களிலும் கூடக் கண்டறியாத அளவில் இரண்டு பெரிய உலகப் போர்கள் நடைபெற்றன. விஞ்ஞானத்தின் பல துறைகளில் முன்னேற்றம் பெற்று இன்று பிரம்மாண்டமான அணு சக்தியையும் கண்டுபிடித்து அதைப் பயன்படுத்தும் ஆற்றலையும் மனிதன் பெற்று விட்டான். இரண்டு மகா யுத்தங்களின் விளைவாக உலகில் பல முடியரசுகள் மறைந்தன. எனினும் பெரிய முடியரசுகளில் இங்கிலாந்தும் ஜப்பானும் நிலைத்திருக்கின்றன. ஆசிய - ஆப்பிரிக்கக் கண்டங்களில் அந்நியர் ஆட்சியின் கீழ் இருந்த பல நாடுகள் சுதந்திரம் பெற்றன. பொதுவாக உலகத்தில் மனித உரிமைக்கும் நாகரிகத்துக்கும் ஏற்பட்ட ஒரு பெரிய ஆபத்துத் தவிர்க்கப் பெற்றது. இதற்கு மூல காரணம் பிரிட்டிஷ் பிரதமர் சர்ச்சிலின் ஆற்றலே என்று கூறலாம். இந்தச் சாதனையில் அவருக்குப் பெருந் துணையாக இருந்தவர்கள் ரூஸ்வெல்டும் ஸ்டாலினும் ஆவர்.



முதல் மகா யுத்தம் சிறு நாடுகளின் சுய நிர்ணய உரிமைகளையும் அவைகளின் சுதந்திரங்களையும் காப்பதற்காக நடைபெற்றது. அதன் விளைவாக யுத்த முடிவில் சர்வ தேச சங்கம் (League of Nations) என்ற ஒரு நிறுவனம் தோற்றுவிக்கப்பட்டது. அதற்கு மூல கர்த்தாவாக இருந்தவர் அப்போது அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த உட்ரோ வில்சன் ஆவார்.

இரண்டாவது மகா யுத்தம் மனித இனத்தின் அடிப்படை உரிமைகளைக் காப்பதற்காக நடைபெற்றது. பேச்சு உரிமை, சமய உரிமை, வறுமையின்மை, பயமின்மை ஆகிய நான்குமே அவ்வுரிமைகளாகும். இதை வகுத்தவர் அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ரூஸ்வெல்ட் ஆவார். இரண்டாவது யுத்தத்துக்கு முன்பே சர்வ தேச சங்கம் வலுவிழந்து மறைந்தது. ஆயினும் அதன் இடத்தில் ஐக்கிய நாட்டு சபை (U. N. O.) தோன்றிற்று: இச்சபையின் நோக்கம் மேற்கண்ட நான்கு உரிமைகளையும் காப்பதேயாகும்.

மூன்றாவது உலகயுத்தம் எதுவும் ஏற்படக் கூடாதென்பதற்கு ஐக்கிய நாட்டுச்சபை பெரு முயற்சி எடுத்து வந்தாலும் சில நாடுகளின் விஞ்ஞான வளர்ச்சியினால் யுத்த பயம் உலகமெங்கும் இன்று பரவியிருக்கிறது: முதல் மகா யுத்தத்தில் குண்டுகளால் சிறிய அளவில் குறித்த இலக்குகளையே அழிக்க முடிந்தது: இரண்டாவது யுத்தத்தில் குறிப்பிட்ட நகரங்களை ஒரு வினாடியில் அழிக்க முடிந்தது: இன்று ஒரு நொடியில் ஒரு பரந்த நாட்டையே அழிக்கக் கூடிய சக்தி வாய்ந்த அணு குண்டுகளையும், நீரகக் குண்டுகளையும் ஏராளமாகத் தயார் செய்திருக்கின்றனர். மனிதனுடைய நன்மைக்காக விஞ்ஞானத்தைப் பயன்படுத்துவதை விட்டு மனிதனுடைய அழிவுக்கே அதைப் பயன்படுத்துவது குரங்கு கையில் கொடுத்த கொள்ளிக்கட்டை போல இருந்து வருகிறது: இரண்டாவது மகா யுத்தத்தின் முடிவில் சுதந்திரம் பெற்ற நாடுகளில் நமது நாடும் ஒன்று. முதல் மகா யுத்தம் நடக்கும் பொழுது தான் நமது சுதந்திரப் போராட்டம் வலுப்பெற்றது: 1920-ல் காந்திஜி சுதந்திரப் போராட்டத்தின் தலைமையை ஏற்றுஅப் போராட்டத்துக்கு ஒரு திருப்பத்தைக் கொடுத்தார்: அஹிம்சா முறையில் ஒத்துழையாமை, வரி கொடாமை, சட்ட மறுப்பு முதலிய இயக்கங்களைத் தோற்றுவித்தார். காந்திஜியின் இயக்கங்களுக்கெல்லாம் உறு

துணையாக இருந்தவர்களில் இராஜாஜி முக்கியமானவர். தம் மனத்துக்குச் சரி என்று பட்டதை நிலைநிறுத்துவதற்காக இராஜாஜி சில சமயங்களில் காந்திஜியையும் எதிர்த்து வாதாடும் உறுதி பெற்றவராயிருந்தார். பாகிஸ்தான் பிரச்னையிலும் 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்திலும் காங்கிரஸின் கொள்கைக்கு விரோதமாகத் தம் கருத்தை வெளிப்படையாக வற்புறுத்தினார். அதனால் காங்கிரஸ்காரர்களின் பெரும் அதிருப்திக்கு ஆளானார். எனினும் காந்திஜி இராஜாஜியின் ஆழ்ந்த அனுபவத்துக்கும் கூரிய அறிவுக்கும் தீர்க்கதரிசனத்துக்கும் ஆலோசனைகளுக்கும் எப்பொழுதும் மதிப்புக் கொடுத்து வந்தார். சில சமயங்களில் இராஜாஜியின் அறிவு நலனும் தீர்க்கதரிசனச் சிந்தனைகளும் நன்கு படித்தவர்களால் கூடப் புரிந்து கொள்ள முடியாத நுணுக்கமும் வேகமும் நிறைந்தவையாயிருக்கும்; காந்திஜிக்கும் இராஜாஜிக்கும் இருந்த தொடர்பினால்தான் அவர் காங்கிரசிலிருந்து வெளியேறாது தொடர்ந்து பணியாற்றி வந்தார். அதன் காரணமாகவே மேற்கு வங்காள ராஜ்யத்துக்கு ஒரு நெருக்கடியான சமயத்தில் கவர்னரானார். சுதந்திர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரல் பதவியையும் ராஜாஜி பெற்றார்; பின்னர் மத்திய அரசாங்கத்தில் சில காலம் மந்திரி பதவியும் வகித்தார். அதன் பின் இப் பதவியிலிருந்து விலகி ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார். காங்கிரஸில் தாம் ஒரு நாலணா அங்கத்தினர்கூட அல்ல என்று காந்திஜி ஒரு முறை கூறியுள்ளதையும், தேசிய இயக்கமாகிய காங்கிரஸ் இந்திய சுதந்திரத்துக்குப்பின் அரசியல் கட்சியாக இயங்க வேண்டிய அவசியமில்லாததால் அதைக் கலைத்துவிட வேண்டுமென்று மற்றொரு சமயம் கூறியுள்ளதையும் இங்கு குறிப்பிடலாம்.

இராஜாஜி மத்திய அரசாங்க மந்திரி பதவியிலிருந்து விலகி ஓய்வு பெற்றிருந்த சமயம் இந்தியாவில் எல்லா மாகாணங்களிலும் பொதுத் தேர்தல்கள் நடைபெற்றன. சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் மந்திரி சபை அமைப்பதற்குப் போதுமான அளவு எண்ணிக்கை இல்லை. எதிர்க் கட்சிகளும் ஒன்றுசேர்ந்து ஒரு மந்திரி சபை அமைக்க முடியாமலிருந்தன. காங்கிரஸ்காரர்கள் வேறு வழியில்லாது கடைசியில் ராஜாஜியை அணுகி மந்திரி சபை அமைக்கும்படி கேட்டுக்கொண்டனர்.

அப்பொழுது கவர்னராக இருந்த ஸ்ரீபிரகாசா அவர்கள் மரபுப்படி சட்ட சபையில் உள்ள கட்சிகளில் அதிக உறுப்பினர்களைக் கொண்ட காங்கிரஸ் கட்சியின் சார்பில் மந்திரி சபையை அமைக்கும்படி இராஜாஜியைக் கேட்டுக் கொண்டார். இராஜாஜியும் முன்வந்து மந்திரி சபையை அமைத்தார். எனினும் அது வெகு நாட்கள் நீடிக்கவில்லை. அதற்குக் காரணம் அவருடைய திறமைக் குறைவோ கடமை உணர்ச்சியின்மையோ என்று கூற முடியாது. நாட்டின் நலத்தை மறந்து சுயநலத்திலும் சிறிய விவகாரங்களிலும் ஊறியிருந்த கட்சி சகாக்களைத் திருப்தி செய்வதைப் பார்க்கிலும் பதவியை விட்டுப் பெருமையோடு விலகுவதே மேல் என்று இராஜாஜி கருதினார்.

இராஜாஜி பதவி வகித்தது குறுகிய காலமேயாயினும் காங்கிரஸ் கட்சிக்கும், அரசாங்க நிர்வாகத்துக்கு அவர் செய்த சேவை மகத்தானதாகும். 1937-ம் ஆண்டு பொதுத் தேர்தலைச் சென்னை மாகாணத்தில்தான் முதலில் நடத்தினார்கள். அதற்குக் காரணம் சென்னையில் காங்கிரஸ் கட்சி பெரும் அளவில் வெற்றி பெற்று மற்ற மாகாணங்களுக்கு வழிகாட்டியாயிருக்கும் என்று எதிர்பார்த்ததேயாகும். எதிர்பார்த்தபடியே காங்கிரசுக்கு அமோகமான வெற்றி கிடைத்தது. 1952ம் ஆண்டு தேர்தலிலும் இதுபோன்றே பெரும் வெற்றியைச் சென்னையில் காங்கிரஸ்காரர்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் அதற்கு நேர்மாறாகத் தேர்தல் முடிவு இருந்தது. காங்கிரஸ் கட்சி பலவீனமடைந்த நிலைக்குப் போய் விட்டது. அந்நிலையில்தான் இராஜாஜி முன்வந்து மந்திரி சபை அமைத்துக் கட்சியின் பலத்தையும் செல்வாக்கையும் பழைய நிலைமைக்குக் கொண்டு வந்தார். சீர்குலைந்த நிர்வாகத்தை ஒழுங்குபடுத்தி உற்சாகமிழந்த அதிகாரிகளுக்குப் புது ஊக்கத்தையும் அளித்தார் இராஜாஜி. அதுசமயம் உலகில் பொதுவுடைமையர் செல்வாக்கு மிகுதியாக வளர்ந்து வந்ததால், இந்தியாவில் அவர்களைப் பற்றிய அச்சமும் பீதியும் நிலவி வந்தன. அச்சத்தையும் பீதியையும் நீக்குவதற்காக முதன் முதலில் இராஜாஜிதான் 'பொதுவுடைமையரே என் முதல் எதிரி' என்ற ஒலியைச் சென்னை சட்டசபையில் சங்கநாதம் செய்தார்.

பதவிகளில் இராஜாஜி வெகு காலம் நீடித்திருக்கவில்லை என்பதைப் பற்றி நான் ஆச்சரியப்படவில்லை. ஏனெனில் அவருடைய சுபாவத்துக்கும், புத்திக்கூர்மைக்கும் கட்டுப்பாடுகள் நிறைந்த எந்தப் பதவியிலும் அவர் தொடர்ந்து இருக்க முடியாது. பதவியில் இருக்கும் காலம் வரை அவர் கூண்டுப் பறவை போல் இருந்து வந்தார். கூண்டுப் பறவைக்கு எவ்வளவு சௌகரியங்கள் இருந்தாலும் அது வெளியில் இருப்பதைத்தான் விரும்பும். இராஜாஜியின் விருப்பமும் அது போன்றதேயாகும்.

பல பதவிகளை வகித்து இராஜாஜி செய்த தொண்டுகளைவிட அவர் பதவியை விட்ட பின் நாட்டுக்கும் மக்களுக்கும் செய்து வரும் தொண்டுகள் மகத்தானவை என்றும் மறக்கத் தகாதவை என்றும் நான் கருதுகிறேன்.

ஓய்வுபெற்று எழுத்துப் பணியில் ஈடுபட்டிருந்த இராஜாஜியை மறுபடியும் பொதுச் சேவையில் ஈடுபடும்படி செய்யும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இதை நான் என் பெருமைக்காகச் சொல்கிறேன் என்று யாரும் நினைக்க வேண்டாம்.

மதுரைத் தமிழ்ச் சங்கப் பொன் விழாவைத் தொடங்கி வைப்பதற்காக நான் இராஜாஜியை அழைத்த பொழுது அவர்கள் முதலில் 'எனக்குத் தமிழில் அவ்வளவு பாண்டித்தியம் இல்லையே' என்று கூறினார்கள். ''அதை முடிவு செய்ய வேண்டியது தாங்கள் அல்ல; நாங்கள்தான்'' என்று நான் பதில் சொன்னேன். மேற்கொண்டு, தம் உடல் நிலை சரியில்லை என்ற காரணத்

தைக் கூறினார். அதற்கு ''இது என் வேண்டுகோள் அல்ல; சொக்கநாதர் கட்டளை'' என்று கூறினேன்.

''அவ்வளவு பெரிய பெயரைச் சொல்ல வேண்டாம். நான் விழாவுக்கு வருகிறேன்'' என்றார் இராஜாஜி. அதற்கொப்ப அவரும் மதுரைக்கு வந்து பொன் விழாவைத் தொடங்கி வைத்து, சொக்கநாதர் அருளால் ஒரு குறையுமில்லாமல் நான் முன்பே அவரிடம் சொன்னபடி நலமாகச் சென்னை திரும்பினார்.

அடுத்து அரசினரின் நிலவரம்புக் கொள்கைக்குச் சரியான ஓர் எதிர்ப்பை உருவாக்குவதற்குத் தகுந்த தலைவர் இராஜாஜி அவர்களே என்று கருதி இவ்விஷயத்தில் அவருடைய உதவியை நாடவேண்டுமென்று சில நண்பர்கள் என்னிடம் கூறினார்கள். அதற்கிணங்க இராஜாஜியை நான் அணுகிய பொழுது ஒரு தடையும் கூறாது மகிழ்ச்சியுடன் அவர் அந்த வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார். அதையடுத்து மொழிப் பிரச்னையில் ஆங்கிலமே ஆட்சி மொழியாக வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்த இந்தியா முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்து பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கினார் இராஜாஜி.

மக்களாட்சி முறைக்கு இன்றியமையாத சரியான ஓர் எதிர்க்கட்சி நமது நாட்டில் இல்லாததால், ஆளும் கட்சியான காங்கிரஸ் கட்சி சர்வாதிகார ஆட்சிப் பாதையில் சென்று கொண்டிருந்தது. அப்போக்கைத் தடுப்பதற்காக அகில இந்திய ரீதியில் ஓர் எதிர்க்கட்சியை இராஜாஜி தோற்றுவித்தார். அதுவே சுதந்திரக் கட்சியாகும். தொடக்கத்தில் அவர் முயற்சியைப் பலர் எள்ளி நகையாடினர் என்றாலும், அவருடைய சலியாத உழைப்பாலும் குன்றாத ஊக்கத்தினாலும் அக்கட்சி நாளும் வளர்ந்து இன்று நாட்டிலுள்ள சட்ட சபைகளில் பெரும்பான்மையானவற்றில் எதிர்க் கட்சிகளில் முக்கிய இடம் பெற்று விட்டது. இன்றைய நிலையில் இப்படி ஓர் எதிர்க்கட்சியை இவ்வளவு குறுகிய காலத்தில் உருவாக்கும் மகத்தான ஆற்றல் பெற்றவர் இந்நாட்டில் இராஜாஜியைத் தவிர வேறு யாரேனும் இருக்க முடியுமோ? இப்பெரும் சாதனையின் மூலம் இராஜாஜி நமது நாட்டில் மக்களாட்சியை நிலைபெறச் செய்துள்ளார் என்பதை எவரும் மறுக்க முடியாது.

இரண்டாவது மகாயுத்தம் வரை உலக நாடுகளின் சமநிலை ( Balance of Power ) ஐரோப்பிய வல்லரசுகளின் கைகளில் இருந்தது. அதற்குப்பின் இச்சம நிலை அமெரிக்கா ருஷ்யா ஆகிய இரு வல்லரசுகளின் கைகளுக்கு மட்டும் மாறிவிட்டன. இவ்விரு நாடுகளுக்கிடையே நம்பிக்கை இன்மையாலும் பயத்தினாலும் ஒன்றுக்கொன்று போட்டி போட்டுக் கொண்டு உலகையே அழிக்கும் சக்தி பெற்ற அணுகுண்டுகளையும் நீரகக் குண்டுகளையும் ஏராளமாகத் தயாரித்து வருகின்றன. அத்துடன் தொடர்ந்து அக்குண்டுகளை வெடித்து ஆராய்ச்சிகள் நடத்தியும் வருகின்றன. அதன் பயனாக உலகில் இன்று வாழும் உயிர் இனங்கள் மட்டுமல்லாமல் இனித் தோன்றப் போகும் பல தலைமுறைகளும் அங்க ஹீனமும் நோயும் பெற்று நாளடைவில் அழிந்து போகும் நிலைமை ஏற்படும். ஆகவே இவ்வாராய்ச்சிகளை உடனே தடுக்க வேண்டுமென்று உலக அறிஞர்கள் பலர் வலியுறுத்தினர். நமது நாட்டிலிருந்து இராஜாஜியும் இதை வன்மையாகக் கண்டித்தார். உலக வல்லரசுகளுக்கு அணுச் சோதனையின் தீமைகளை விளக்கி அழிவுப் பாதையில் செல்ல வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார். மேலும் அமெரிக்க ஜனாதிபதியையும், பிரிட்டிஷ் பிரதமரையும் நேரில் கண்டு பேசுவதற்காக, இதுவரையில் வெளிநாடே சென்றிராத இராஜாஜி இந்த வயதில் தம் உடல் நிலையையும் பொருட்படுத்தாமல் விமான மூலம் அந்நாடுகளுக்குச் சென்றார். அங்கு அந்நாட்டு அரசாங்கத் தலைவர்களையும், பல பிரமுகர்களையும் சந்தித்துத் தம் கருத்தை வலியுறுத்தினார். அவர்கள் இராஜாஜியின் வாதத்தில் உள்ள நியாயத்தை ஒப்புக் கொண்டார்களெனினும் அதை நடைமுறைக்குக் கொண்டு வருவதில் அவர்களுக்குள்ள பல இடையூறுகளைத் தெரிவித்தனர். இந்த விஷயத்தில் முக்கியமான தடை அமெரிக்க மக்களுக்கு ருஷ்யா மீதுள்ள பயமும் நம்பிக்கைக் குறைவுமே என்று நாம் நினைக்க வேண்டியிருக்கிறது.

தாம் எடுத்துக் கொண்ட முயற்சியில் வெற்றி பெறுவதற்காகப் போப் ஆண்டவரின் ஆசியையும், ஆதரவையும் நாடி, இராஜாஜி வரும் வழியில் ரோமாபுரிக்குச் சென்றார். போப் ஆண்டவரைச் சந்தித்துத் தாம் எடுத்துக் கொண்ட காரியம் வெற்றியடைவதற்காக ஆண்டவனிடத்தில் பிரார்த்திக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். கத்தோலிக்கரல்லாத ஒருவருடைய இந்த நம்பிக்கையைக் கண்டு போப் ஆண்டவர் உளமகிழ்ந்து அவ்வாறே செய்வதாகக் கூறி இராஜாஜியை ஆசீர்வதித்தார். தம்முடன் வைத்து ஒரு புகைப்படமும் எடுத்துக் கொண்டார். அங்கு இராஜாஜிக்குக் கொடுக்கப்பெற்ற வரவேற்பையும் மரியாதையையும் பொதுவாக ஒரு நாட்டின் தலைவர்களே பெறுவது வழக்கம். இவ்வாறு மேல்நாடுகளில் சென்ற இடங்களிலெல்லாம் இராஜாஜிக்குக்கிடைத்த வரவேற்பிலிருந்து அவர் உலகத் தலைவர்களில் ஒருவர் என்பது உறுதியாகி விட்டது.

தாம் மேற்கொண்ட புனிதப் பயணத்தினின்று இராஜாஜி இந்தியாவுக்குத் திரும்பி வந்தவுடன், நிருபர்கள் அவரைச் சந்தித்து, நமது எல்லையில் சீனப் படையெடுப்பைப் பற்றி அவர் கருத்தைக் கேட்டார்கள். அவர் உடனே பதில் சொல்லாது முழு விவரமும் தெரிந்தபின் கூறுவதாகச் சொன்னார். இராஜாஜி வெகு காலமாகப் பொதுவுடைமை நாடுகளுடன் நமது நாடு உறவு கொள்வதில் மிகவும் ஜாக்கிரதையாயிருக்க வேண்டுமென்று கூறி வந்தவர் என்பதை நாம் அறிவோம். முக்கியமாகச் சீனாவுடன் வெகு கவனமாக நடந்து கொள்ள வேண்டுமென்று எச்சரித்து வந்துள்ளார். மறுபடியும் நிருபர்களைச் சந்தித்துப் பதில் சொல்லும் பொழுது இராஜாஜி மூன்று விஷயங்களைக் குறிப்பிட்டார். முதலாவது தற்காப்பு இலாகாவை உடனடியாகப் பிரதமர் நேரு மேற்கொள்ள வேண்டுமென்றும், இரண்டாவது நம்முடைய போர் முயற்சிகளில் இந்

நியப் பொதுவுடைமையாளர்களைச் சேர்க்கக் கூடாதென்றும், மூன்றாவது நமது நாட்டுக்கு அநுகூலமான எல்லா நாடுகளிலிருந்தும் போர்க் கருவிகளையும் மற்ற உதவிகளையும் கேட்டுப் பெற வேண்டுமென்றும் கூறினார். இந்த யோசனைகளை இந்திய அரசு உடனடியாக ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் இன்று இந்திய அரசு மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளைக் கவனித்தால் அவர்கள் இராஜாஜி கூறிய மூன்று யோசனைகளையுமே அநேகமாக நிறைவேற்றி விட்டார்கள் என்பது தெரியும். இதிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டியது என்னவெனில், இந்த யுத்தம் முடியும் வரை அவ்வப்பொழுது இராஜாஜி கூறும் கருத்துக்களைக் கவனித்து நமது அரசு செயல்படுமாயின், உறுதியாக நாம் விரைவில் வெற்றி பெறுவோம் என்பதேயாகும்.

இன்று நமது நாட்டிலேயே சிறந்த தலைவர் இராஜாஜி என்று சொல்லுவது மிகையாகாது. இந்த முதிர்ந்த வயதிலும் அவருடைய புத்திக் கூர்மை எவ்வகையிலும் குறையவில்லை. அதற்குப் பதிலாக வயது ஆக ஆகத்தான் அவருடைய புத்திக் கூர்மையும் அறிவும் வளர்ச்சி பெற்று வருகின்றன. இராஜாஜியினிடம் மனத்தைக் கவரும் பெருந்தன்மையையும் காணலாம். ஒரு சமயம் நான் அவர் இல்லத்துக்குச் சென்றிருந்தேன். என்னுடன் வந்திருந்த இராஜா சிதம்பரமும் டாக்டர் சுப்பராயனும் அவரைக் காண எனக்கு முன்னே உள்ளே சென்றனர். அவர் என்னை உள்ளே கூப்பிடச் சிறிது நேரமாயிற்று. என்ன காரணம் என்று விசாரித்த பொழுது என்னைக் காணுவதற்காக ராஜாஜி மேல் உடை அணிந்து கொண்டிருக்கிறார் என்று கூறினர். நான் அந்தப் பண்பை வியந்தேன். பின்பு என்னை அன்புடன் வரவேற்று உரையாடினார். நான் விடை பெற்று எழுந்தபோது தாமும் என்னுடன் கீழே வந்து என்னை வழியனுப்ப எழுந்தார். உடனே நான் அவரிடம் 'வயது முதிர்ந்தவராகிய நீங்கள் எனக்கு இவ்வாறு எல்லாம் அதிக மரியாதை செய்தால் நான் மறுமுறை உங்கள் வீட்டுக்கு வரமாட்டேன்' என்று கூறி மேல்மாடியில் இருந்தபடியே அவரிடம் விடைபெற்றுக் கொண்டேன். இச்சந்திப்பு நடப்பதற்குச் சில நாட்களுக்கு முன்புதான் என் கட்சியைத் தாக்கியதற்காக ஒரு பொதுக் கூட்டத்தில் நான் இராஜாஜியைப் பலமாகக் கண்டித்துப் பேசினேன். அவ்விவரமும் அவருக்குத் தெரியும். இருப்பினும் அவர் என்னிடம் பண்புடன் நடந்து கொண்டது அவருடைய பெருந்தன்மையைக் காட்டுவதாகும்.

சிறந்த புத்திக் கூர்மையிலும் உலக விவகாரங்களின் ஆழ்ந்த அனுபவத்திலும், விஞ்ஞானம் கலந்த ஞானத்திலும் இராஜாஜியைப் பண்டைய யவன நாட்டு தெண்டருக்கும் நமது நாட்டுப் பிராசீன பீஷ்மபிதாமகருக்கும் ஒப்பிடலாம். இது தமிழ் நாட்டிற்கே ஒரு பெருமையாகும். நம் நாட்டில் குடியாட்சி நல்ல முறையில் நடைபெறவும், உலகில் அணு ஆயுதங்களின் பயம் நீங்கிச் சமாதானம் நிலவவும் இராஜாஜி நம்மிடையே இன்னும் பல்லாண்டு வாழ்வதற்கு ஆண்டவன் அருள்புரிவாராக.

# விடாக்கண்டர்

**குறும்பன்**

பெமயின் வயலில் மாயவரத்துக்கும் சிதம்பரத்துக்கும் இடையே உள்ள ரயில்வே ஸ்டேஷன் அது. ஸ்டேஷனுக்கு அருகிலேயே ஊர். கால அட்டவணைப்படி எந்த ரயில் எத்தனை மணிக்கு வரும் என்ற கணக்கு அந்த ஊர் மக்களுக்கு அத்துபடி.

அவ்வூர்வாசிகளுக்கு உற்றார் உறவினர்கள் பெரும்பாலும் தெற்கே இருந்து வந்து போகிறவர்கள்தான். வடக்கேயிருந்து வருகிறவர்கள் வெகு அபூர்வம்.

தெற்கே இருந்து இரவு நேரத்தில் வடக்கே போகும் வண்டிகளில் இரண்டுதான் அவ்வூர் ஸ்டேஷனில் நிற்கும். ஒன்று மாலை ஆறரை-ஆறேமுக்காலுக்கு அவ்வூரைத் தாண்டும். இன்னுமொன்று ஒன்பது ஒன்பதரைக்கு அவ்வூரைக் கடக்கும்.

அவர்கள் அவசரம் அவசரமாக ஆறரை மணிக்குள்ளேயே உணவை முடித்துத் திண்ணைக்கு வந்து விடுவார்கள். அது மட்டுமல்ல; படுக்கையைத் தட்டிப் போட்டுக் கொண்டு படுத்தும் விடுவார்கள்.

ஆயினும் அத்தனை சீக்கிரமே தூக்கம் வருமா? ஏதாவது வம்பு அடித்துக் கொண்டிருப்பார்கள். "ஏன்டா, சாமா! வடக்கே போகிற வண்டி போய் விட்டதோடா?" என்று கேட்பார் ஒருவர், தாம் வரச் சற்றுத் தாமதமாகி விட்டால்.

"இல்லை, இன்னும் காணோம்!" என்பான் சாமா.

அதற்குள் வண்டி சத்தம் கேட்டு விடும். உடனே வம்புப் பேச்சு 'கம்'மென்று அடங்கிவிடும். அவர்கள் படுக்கையில் முடங்கி விடுவார்கள்.

பதினைந்து, இருபது நிமிஷங்கள் அந்த மௌனம் நிலவியிருக்கும். அப்புறம் ஒருவர், "உங்கள் வீட்டில் என்ன சமையல்?" என்று கேட்டுப் பேச்சைத் தொடங்கி வைப்பார். அந்தப் பேச்சு அடுத்த வண்டி வந்து போகும் வரை நீடிக்கும். அதற்குப் பின் இருபது நிமிஷங்கள் அதே மௌனம் நிலவும்.

எல்லோரும் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டு, "இனி ஒருவரும் வர மாட்டார்களே?" என்று கேட்டு விட்டு வெற்றிலைச் சீட்டை வைத்துச் சீட்டுக்கூட ஆட ஆரம்பித்து விடுவார்கள். சீட்டாட்டம் பதினொன்று பன்னிரண்டு மணி வரைகூட நீடிக்கும்.

வெளியூரிலிருந்து வருபவர்கள் என்னதான் நேரமாக்கினாலும், அவ்வூருக்குள் இருபது நிமிடங்களுக்குள் வந்துவிட முடியும். அவர்கள் வரும்பொழுது திண்ணையில் படுத்திருப்பவர்கள், குறட்டை கூட விடுவார்கள். விருந்தாளிகளாக வருபவர்கள் யார் வீட்டுக்காவது வந்தால், அவ்வீட்டார்களைத் தட்டித்தான் எழுப்ப வேண்டும். அவர்களும் அப்பொழுதுதான் விழித்துக் கொள்பவர்களைப் போல், "அட, நீங்களா? வாருங்கள்! வாருங்கள்!" என்று வரவேற்பார்கள் வாய் நிறைய. அப்புறம், "சாப்பாடு ஆகிவிட்டதோ? இல்லை, உள்ளே கூப்பிட்டுச் சமைக்கச் சொல்லட்டுமா?" என்று உபசாரம் செய்வார்கள்.

வரும் விருந்தினர்கள் பட்டினியாயிருந்தாலும், பிறருக்குச் சிரமம் தரக் கூடாதே என்பதற்காக, "மாயவரத்துக்கு ஒரு வேலையாக வந்திருந்தேன். அப்படியே 'காளியாகுடி'யில் சாப்பிட்டு விட்டுத்தான் வருகிறேன்!" என்று சொல்லிச் சமாளித்துக் கொள்வார்கள். அதோடு திண்ணையில் வைத்திருக்கும் தண்ணீரிலிருந்து ஒரு தம்ளர் எடுத்துப் பருகிவிட்டு, துண்டை விரித்து அவர்களோடு படுத்து விடுவார்கள். அன்று சீட்டாட்டம் இராது. எல்லாரும் உம்மென்று பேசாமல் உறங்கப் போய் விடுவார்கள்.

காரக்குடி கப்பண்ணா அந்த ஊரில் பெண்ணைக் கொடுத்தவர். இப்படி நாலு மாதங்களுக்கு ஒரு தரம், ஆறு மாதத்துக்கு ஒரு தரம் பெண்ணைப் பார்த்துப் போவதற்காக வருவார். அது மட்டுமா? அநேகமாக இராப்பட்டினி கிடந்து விட்டுப் போவார். ஆறரையில் வந்தாலும் இப்படி, ஒன்பதரையில் வந்தாலும் இப்படி என்றால்....? தாங்குறாஞ்சிக்காரப் பயல்கள் இருக்கும் ஊரில் போய்ச் சம்பந்தம் செய்து கொண்டோமே என்று வருந்தினர். அந்த ஊருக்குப் போகாமலே இருந்து விடலாம் என்றால், பெற்ற பாசம் கேட்கிறதா? ஆடிக்கு ஒரு முறை ஆவணிக்கு ஒரு முறையாவது போய்ப் பெண்ணைப் பார்த்து வரத்தானே தோன்றுகிறது!

அன்றும் அப்படித்தான். ஏதோ காரியமாக மாயவரத்துக்கு வந்தவர், 'பெண்ணைப் பார்க்க ரயில் ஏறி விட்டார். ஒன்பதரை போய் அரை மணிக்கு மேலாகி யிருக்கும். "இனிமேல் யாரும் வர மாட்டார்களே! ஆரம்பிக்கலாமா நம் ஆட்டத்தை!" என்றார் ஒருவர். அடுத்த கணமே, சீட்டாட்டத்துக்கு எல்லோரும் உட்கார்ந்து விட்டனர். சீட்டும் கலைத்துப் போட்டாகி விட்டது.

"நம்ம ஊருக்குள்ள வசதியே தனி! எந்தப் பயல் வந்தாலும் சாப்பாடு போடாமல் தட்டிக் கழிக்கும்படியாக ஸ்டேஷன் அமைந்து விட்டது!" என்று யாரோ கூறவும், "என்ன?" என்று கூறிக் கப்பண்ணா கனைக்கவும் சரியாயிருந்தது. அவ்வளவுதான், எல்லோரும் அரண்டு விட்டனர்.

"எனக்குத் தெரியாதா, எச்சில் கையால் காக்காய் ஓட்டாத பயல்களா! வருகிற விருந்தினர்களுக்குச் சாப்பாடு போடக் கூடாது என்று ரயில் போகும் பொழுதும் வரும் பொழுதும் தூங்குவது போலப் பாசாங்கு செய்துவிட்டு ஆட்டம் போடுகிறீர்களா? உங்கள் குட்டை உடைப்பதற்காகவேதான் இன்று அரை மணி ஸ்டேஷனிலேயே தங்கி விட்டு வந்தேன். சம்பந்தி! இன்றைக்கு இரவு ஒரு மணியானாலும் சரி, பாயசம், வடையோடு சாப்பிடாமல் விடப்போவதில்லை!" என்றார் கப்பண்ணா. எல்லோருக்கும் திருடனுக்குத் தேள் கொட்டிய கதையாகி விட்டது.

## முட்டுக்களில் வாத சம்பந்தமான வலியா? சருமத்தின் மீது வீக்கமா, கட்டி வரும்போலிருக்கிறதா? நரம்புவலியா? தசைப்பிடிப்பா, நரம்புப்பிடிப்பா? முதுகுவலியா? வீக்கமா?

உபாதையினின்று விரைவில் நிவாரணம் பெற

# ஜான்ஸன்ஸ்
# பெல்லடோனா பிளாஸ்டரை

**உபயோகியுங்கள்!**

ஜான்ஸன்ஸ் பெல்லடோனா பிளாஸ்டர் அப்படியே, சுலபமாக உபயோகிக்கத் தயாராய் இருக்கிறது—சுடவைப்பதோ, துணியின் மேல் தடவிப்போடுவதோ போன்ற கஷ்ட வேலை இல்லை. இதை உபயோகிப்பதற்கு உங்களுக்கு எந்த வித பயிற்சியும் தேவை இல்லை. மேலே இருக்கும் பிளாஸ்டிக் காகிதத்தை நீக்கிவிட்டு பிளாஸ்டரை வலியுள்ள இடத்தில் போடவேண்டியது தான். பிளாஸ்டரின் மேலுள்ள துவாரங்களின் மூலமாக சருமத்தில் காற்று புகுவதற்கும் வசதி யிருப்பதால் வலியுள்ள இடத்திற்கு அதிக இதமாயிருக்கும்.

**எப்பொழுதும்
ஜான்ஸன்ஸ்
பெல்லடோனா
பிளாஸ்டரை
வீட்டில்
வைத்திருங்கள்!**



ஜான்ஸன் & ஜான்ஸன் ஆஃப் இந்தியா லிமிடெட்

JWT-JJ 4346

# மழட்டிதாசன்





மதுசூதன செட்டியார் தனவந்தர். பழைய காலத்து நற்குணங்களும் ஆசாரங்களும் அவரிடம் நிறைய உண்டு. அவர் இருப்பிடம் ரயிலுக்குப் பத்து மைல் தூரத்தில் மூங்கில்பேட்டை என்று ஒரு சிறு ஊர்.

அதற்கும் மூன்று மைல் தூரத்தில் ஸ்ரீனிவாசபுரம் என்ற ஒரு பிராமண அக்கிரகாரம். அங்குள்ள பங்குதாரர்கள் எல்லாரும் ஏழைகள். அதிகக் கடன்பட்டுப்போயிருந்தார்கள். அக்கிரகாரத்துப் பங்காளிகள் ஒருவர் ஒருவராகத் தத்தம் பங்குகளை மதுசூதன செட்டியாருக்கு விற்றுவிட்டு முடிவில் முழு அக்கிரகாரத்தையும் செட்டியார் தலையில் கட்டி விட்டார்கள்.

செட்டியார் கடைசியாகக் கையிலிருந்து கொடுத்த ரொக்கம் ரூபாய் பன்னிரண்டாயிரம்; அதற்கு முன் கடனுக் கொடுத்தது மொத்தம் ரூபாய் இருபத்து நாலாயிரம்.

செட்டியார் அக்கிரகாரத்தை விலைக்கு வாங்கின இரண்டாவது ஆண்டில் புதுச் சட்டம் ஒன்று வந்தது. அதன்படி சர்க்கார் மதுசூதன செட்டியாருடைய அக்கிரகாரத்தைப் பறிமுதல் செய்து விட்டார்கள்.







அக்கிரகாரத்து நிலங்கள் எல்லாம் அவற்றை உழுது கொண்டிருந்த குடியானவர்களுடையது என்று தீர்ப்புச் செய்து விட்டார்கள். நஷ்டஈடாகச் செட்டியாருக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் உத்தரவிடப்பட்டது.

''இந்தப் பிச்சை ரூபாய் இரண்டாயிரத்து ஐந்நூறு நஷ்டஈடாவது, நஷ்டஈடு!'' என்று செட்டியார் தாசில்தாரிடம் கோபமாகச் சொல்லி, சர்க்கார் தரும் பணம் வேண்டாம் என்று முதலில் மறுத்தார். பிறகு, அது ராஜத் துரோகமாகும் என்று தாசில்தார் சொல்லவே பணத்தைப் பெற்றுக் கொண்டார்.

அந்த அக்கிரகாரத்தைச் சேர்ந்ததும் ஊருக்குக் கொஞ்சம் எட்டியிருந்ததுமான குளம் ஒன்று; அதற்குப் பக்கத்தில் ஒரு சந்நியாசி ஆசிரமம் அமைத்து வசித்துப் பரமபதம் அடைந்தார். அவருடைய பிருந்தாவனத்துக்கு ஒரு கோயில் கட்ட இந்த இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாயையும் செலவழித்து விட்டார் மதுசூதன செட்டியார். மேலும் ரூபாய் பதினையாயிரம் சேர்த்துக் கோயிலை நன்றாக நிருமாணித்து விட்டார்.

ஃ ஃ ஃ

அந்தக் கோயிலைக் கட்டும்போது கடைகால் தோண்டிய இடத்தில் ஒரு குப்பைக் குழியைக் கண்டார்கள். அதில் நிறையச் சாம்பலும் குப்பையும் கூளமும் கூடவே சில தங்கம், வெள்ளி நகைகளும் கிடந்தன. அந்தத் தங்கம் வெள்ளிச் சாமான்களை யெல்லாம் செட்டியார் சர்க்காரிடம் ஒப்படைத்து விட்டார்.

''இது நமக்கு வேண்டாம்'' என்று அதிகாரிகளை வரவழைத்து இடத்தைக் காட்டிச் சோதித்து எடுத்துப் போங்கள் என்று சொல்லி விட்டார். சட்டத்தின் படி அவர் செய்ததே சரி. அதன் மூலம் சர்க்காருக்கு ஆயிரத்து ஐந்நூறுரூபாய் வந்தது !

ஃ ஃ ஃ

இந்த விநோதக் குப்பையைப் பற்றி விசாரித்ததில் பலர் பலவிதமாகச் சொன்னார்கள். முடிவில் அக்கிரகாரத்தில் வயது ஆனவர்களை எல்லாம் கேட்டுத் தெரிந்த விஷயத்தை எழுதுகிறேன்.

ஃ ஃ ஃ

அவ்விடம் குடிசையில் ஆசிரமவாசம் செய்து வந்த சந்நியாசி நடக்கும்போதெல்லாம் அடிக்கொரு தடவை ''நாராயண'' என்பார். அதனால் தான் அவருக்கு நாராயண சந்நியாசி என்று பெயர் வழங்கி வந்தது. அவருடைய பூர்வாசிரம ஊர் தக்ஷிண கோட்டை என்ற தெற்குச் சீமை ஊர். அவருக்கு ஒரு தாசன் பணிவிடை செய்து வந்தான். ஊரார் அவனுக்கு வைத்த பெயர் மமுட்டி தாசன். அவன் எப்போதும் ஒரு சிறிய 'மமுட்டி' எடுத்துப் போவான். சந்நியாசி பிக்ஷைக்கு வெளியே சென்றால் இவன் முன்னால் செல்வான். வழியில் குப்பை எச்சில் எது இருந்தாலும் மமுட்டியில் எடுத்து அப்புறப்படுத்தி வழியைச் சுத்தம் செய்வான். ஊரில் வேறு யாருடனும் அவன் பேச மாட்டான். சந்நியாசியிடம் மட்டும்தான் பேசுவான். இதனால் அவனை ஊமை என்று முதலில் எல்லாரும் எண்ணினார்கள். பிறகு அவன் தன் குருநாதனிடம் பேசுவதைக் கண்ட சிலர் அவன் ஊமையல்ல, மௌன விரத



சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

> **தெய்வ பக்தி**
>
> மக்கள் தெய்வத்தைத் தேடுவதும் பராசக்தியை நாடுவதும் ஒரு இயற்கை வேகம். காந்தம் இரும்பை இழுப்பதுபோல், கற்பூரம் நெருப்பைத் தேடுவது போல், மின்சக்தி எப்போதும் பூமியில் குதித்து மறையக் காத்திருப்பது போல், உயிரானது தான் பிரிந்த தெய்வத்தைத் தேடுகிறது. இதுவும் ஒரு இயற்கைப் பசி.
>
> — ராஜாஜி

பிரம்மச்சாரி என்று அறிந்து கொண்டார்கள்.

ஃ ஃ ஃ

ஒரு நாள், "நாராயணா! நாராயணா!" என்று சொல்லிக் கொண்டே சந்நியாசி பிக்ஷைக்கு வெளியே புறப்பட்டார். வழக்கம்போல் பக்தர்கள் இவர் வருவதையறிந்து, முன்னுடியே பிக்ஷை வைத்துக் கொண்டு நின்றார்கள்.

பிரம்மசாரி ஒரு சோளக் காட்டில் வழியில் கிடந்த கந்தல் துணியோ கயிறோ போலிருந்த ஒன்றைப் பார்த்தான். அதைத் தன் மழுட்டியால் எடுத்துத் தூர வீசி எறிந்தான். ஒரு கருநாகப் பாம்பு. விசிறி எறியப் பட்ட பாம்பு படம் எடுத்துச் சீறிப் பையனை நோக்கிக் கோபக் குறி காட்டிற்று. சந்நியாசி "நாராயணா!" என்றார். பாம்பு அவர் பக்கம் திரும்பிப் படத்தைத் தாழ்த்தி நகர்ந்து போய் விட்டது. அப்படியே பக்கத்தில் ஒரு பாழியில் புகுந்து மறைந்தது.

சந்நியாசி பையனுடைய தலையில் கை வைத்து, "நாராயணா!" என்று சொல்லி விட்டுப் போக வேண்டிய பாதையில் மேலே நடந்து சென்றார்.

ஃ ஃ ஃ

"நீர் சொல்லுவதைப் பார்த்தால் இந்தப் பையன் ஒரு யோகியாக இருக்க வேண்டும். நான் நம்பவில்லை; இந்த மாதிரி மோசக்காரர்கள் பலரை நான் பார்த்திருக்கிறேன்!" என்றார் குப்புசாமி நாயுடு.

"உங்களுக்குத் தெரியாது அண்ணா! இந்தச் சந்நியாசியும் அந்தச் சீடனும் பரம வைராக்கியர்கள். அதிலும் இந்த மழுட்டிதாசன் பரம யோக்கியன். அநேக வியாதிகளை அவனுடைய தெய்வீக சக்தியால் சொஸ்தம் செய்திருக்கிறான். ஒரு பைசா யாரிடமும் வாங்க மாட்டான்" என்றான் வாசுதேவ மூர்த்தி — இவன் நாயுடு அவர்களுடைய நண்பர் ஹனுமந்தராயரின் மகன். பள்ளிக்கூடப் படிப்பு பிடிக்க வில்லை என்று விட்டு விட்டவன்.

"ஒரு வேடிக்கை செய்யலாம்!" என்றார் குப்புசாமி நாயுடு. அவர் கோயமுத்தூரில் ஒரு பெரிய மில் முதலாளி.

"என்ன அது? சொல்லுங்கள்" என்று நாயுடுவிடம் கேட்டான் வாசுதேவமூர்த்தி.

இருவரும் தங்களுக்குள்ளே பேசிக் கொண்டார்கள்.

ஃ ஃ ஃ

அடுத்த நாள் நாராயண சந்நியாசி வழக்கம்போல் பிக்ஷைக்குச் சென்றார். முன்னால் மழுட்டி எடுத்துக் கொண்டு வழக்கம் போல் பிரம்மசாரியும் சென்றான். வழியில் ஒரு வாடிய புஷ்பமும் அதில் பளபள வென்று ஒரு தங்க மோதிரமும் கிடந்தன. பையன் அதை மழுட்டியால் வாரி எடுத்து அப்படியே தன்னுடைய குருவுக்கு எடுத்துக் காட்டினான்.

"ஏன் காட்டுகிறாய்? தூரப் போடு. இந்தக் குப்பை அந்தப் பாம்பைவிடக் கடும் விஷம்" என்றார் நாராயண சந்நியாசி. மழுட்டிதாசன் அவர் சொன்னது போல் ஓரமாய் வீசி எறிந்துவிட்டான். இருவரும் பழையபடி பிக்ஷைக்குச் சென்றார்கள்.

ஃ ஃ ஃ

"பார்த்தீரா!" என்றான் வாசுதேவ மூர்த்தி.

"இப்படியும் சில மகான்கள் இருக்கிறார்கள். அதனால்தான் மழை பெய்கிறது!" என்றார் குப்புசாமி நாயுடு.

"நான் பரீட்சை செய்தது குற்றம்" என்று சொல்லி ஆசிரமத்துக்குப் போய் சந்நியாசியை மிக்க பக்தி சிரத்தையுடன் நமஸ்கரித்து விட்டுத் திரும்பினார்.

ஃ ஃ ஃ

"இவர் நாராயண என்று ஒவ்வொரு தடவை சொல்லும்போதும் மகாவிஷ்ணு அதைக் கேட்டு வந்துவிடுவார் போலவே தோன்றுகிறது. அடுத்து நிற்கும் நண்பனையோ, தாயாரையோ கூப்பிடுவது போல் தொனிக்கும்படி இவர் நாராயண என்கிறார்."

இப்படிக் குப்புசாமி நாயுடு சொன்னதற்கு வாசுதேவமூர்த்தியும், "ஆமாம், ஆமாம்! நாம் நாராயணா என்பதற்கும் இந்தச் சுவாமி சொல்வதற்கும்

Khira

கீரா ஸ்டீல் காபினெட்

உங்கள்

# வீட்டுக்கும்...

மற்றும்

# ஆபீஸுக்கும்

யூட்டிலிட்டி பீரோ:
78"x36"x19"

## ரூ. 250.00

(உள்ளூர் வரிகள் தனி)

**உடனே கிடைக்கும்**

Khira

கீரா ஸ்டீல் ஒர்க்ஸ்
பிரைவேட் லிட்.,
பம்பாய்-54

எங்கள் முக்கிய இடங்களிலும் கீராவின் அதிகாரம் பெற்ற வியாபாரிகளால் விற்பனை செய்யப்படுகின்றன



அங்கீகாரம் பெற்ற டீலர்களும் ஸ்டாக்கிஸ்டுகளும்

சென்னை: வில்லியம் ஜாக்ஸ் அண்டு கோ., லிமிடெட் மகமத் இப்ராஹிம் & கோ., பிரைவேட் லிமிடெட்; இந்தியன் ரேடியோ ஹவுஸ்; ஆம்லன் & கோ.,

கோயமுத்தூர், ஈரோடு, சேலம்: ராயல் டிரேடிங் கோ.

எர்ணாகுளம், திருச்சூர்: 'சாகோலன்' சி. பி. ஜோணப்பன் அண்டு சன்ஸ்

திருநெல்வேலி, நாகர்கோயில்: ஏ.ஆர். ஏ. செண்பக நாடார்
பி.வி.பி. சுப்ரமணிய நாடார் அண்டு கோ.

ஆலப்புழை, கோட்டயம்: வாசன் அண்டு கோ

கும்பகோணம், மதுரை, திருச்சிராப்பள்ளி: ஸ்ரீ கணேஷ் ஸ்டோர்ஸ்

விசாகப்பட்டினம்: காலியர் ஏஜன்சீஸ்

விஜயவாடா, ராஜமகேந்திரபுரம்: ஸ்ரீ ராமா கார்ப்பொரேஷன்

பாண்டிச்சேரி: இந்தியன் ரேடியோ ஹவுஸ்

கன்னிக்கோட்டை: பார்த்தசாரதி அண்டு சன்ஸ்

மற்றும்

பெங்களூர், கன்னிக்கோட்டை, மங்களூர், மைசூர், பாலக்காடு, கொல்லம் முதலிய இடங்களிலும் உள்ளனர்

வித்தியாசம் அதுதான். நாம் சும்மா கொட்டாவி விடுவதுபோல் 'கோவிந்தா' 'ராமா' என்கிறோம். இவர் பக்கத்தில் நிற்கும் ஒருவனை அழைப்பது போல் அழைக்கிறார்'' என்றார்.

ஃ ஃ ஃ

பிச்சையரிசியைச் சமைத்துக் கொஞ்சம் உப்புப் போட்டு சந்நியாசிக்குப் பரிமாறுவது பிரம்மசாரியின் வழக்கம். அந்த ஆசிரமத்தண்டை ஒரு நாய் வந்து தவறாமல் படுக்கும். அதற்குப் பிடிப் பிடியாக முதலில் சமைத்த அன்னத்தைப் போடுவது சந்நியாசியின் வழக்கம். ''நாராயணா!'' என்பார். அது கணக்குப்படி தினமும் அந்த வேளையில் வந்து நிற்கும். கல்லின் மேல் பிரம்மசாரி போட்ட சோற்றை மிக ஆவலாகத் தின்னும். ''போதுமா?'' என்பார். அது வாலை அசைத்து அவன் காலை நக்கிவிட்டுப் போய்விடும். அதன்பிறகே சந்நியாசியும் சீடனும் மிகுந்த பொங்கலைச் சாப்பிடுவார்கள்.

முதலில் சில பிராமணர்கள் இதைக் கண்டு வெறுத்தார்கள். நாய்க்குப் போட்ட மிச்சத்தை இவர்கள் சாப்பிடுகிறார்களே என்று ஆட்சேபித்தார்கள். ஆனால் தங்களுக்குள்ளேயே விவாதித்தார்கள். சந்நியாசியிடம் சொல்லப் பயந்தார்கள்.

ஒரு நாள் அவரே இதற்குச் சமாதானம் சொன்னார்.

''சந்நியாசிக்கு ஒரு நியமமும் கிடையாது. உங்களுக்குத் தெரியாததா? நாயும் பகவான் சொரூபம்தான். அதற்குப் போடுவது பகவத் ஆராதனமாகும்'' என்றார்.

பிராமணர்கள் அதற்கு மேலே ஆட்சேபிக்கவில்லை. சமாதானமடைந்தார்கள்.

ஃ ஃ ஃ

சுற்றிலும் உள்ள கிராமங்களைச் சேர்ந்த குடியானவர்களுக்கு மமுட்டி தாசனிடம் மிகவும் பக்தி. அவர்களுடைய குழந்தைகளுக்கு ஏதேனும் நோய் கண்டால் வந்து அவனுக்குச் சொல்லுவார்கள். அவனும் மிக்க அன்புடன் ''நாராயணா, நாராயணா'' என்று மந்திரம் சொல்லிக் குழந்தையைத் தடவிக் கொடுத்து அனுப்புவான். வெற்றிலைபாக்கில் கொஞ்சம் பணமோ தங்கமோ காணிக்கை வைத்துவிட்டுப் போவார்கள். ''அதைத் திருப்பித் தருவது சரியல்ல'' என்று சந்நியாசி ''குப்பையில் அழுக்கோடு அழுக்காகப் போட்டு விடு'' என்று பிரம்மசாரிக்குச் சொன்னார்.

அவனும் அவ்வாறே குழியில் சாம்பல் குப்பை வாரிப் போடுவதோடு இந்த நகைகளையும் காசுகளையும் போட்டுக் கொண்டு வந்தான்.

இதுதான் மதுசூதன செட்டியார் அவர்கள் கண்ட புதையல்!

ஃ ஃ ஃ

ஒருநாள் மார்கழி முழுமதி இரவு சந்நியாசி பரமபதம் அடைந்தார். அக்கிரகாரத்தார் வந்து பக்தியாரவாரத்துடன் அடக்கம் செய்து ஒரு பிருந்தாவனமும் கட்டினார்கள்.

அதன்பின் பிரமசாரியையும் நாயையும் எங்கேயோ காணவில்லை. சிலர் ''அவன் வடக்கே காசி சென்றுவிட்டான், நாயும் அவனுடன் போய்விட்டது'' என்றார்கள். சிலர் ''இல்லை, இல்லை! அவன் மனிதன் அல்ல, நாயும் நாயல்ல. அவன் தரும தேவதையின் அவதாரம். சந்நியாசி மறைந்ததும் இவனும் நாயுடன் மறைந்து போய்விட்டான்'' என்றார்கள்.

ஃ ஃ ஃ

எப்படியாயினும் மதுசூதன செட்டியார் கட்டுவித்த கோயிலின் ஒரு தூணில் நாயின் சிற்பம் ஒன்று காணப்படுகிறது. மக்கள் அதைத் தரும தேவதையாகவே வைத்து வணங்குகிறார்கள்.

## அச்சமில்லை

'அச்சமில்லை', 'ஜயமுண்டு', 'சங்கு', 'ஜயபேரிகை' முதலிய விடுதலைப் பாட்டுக்களை, அவைகளிலுள்ள ஆழ்ந்த பொருளை நிதானமாக யோசித்துத் தெரிந்துகொண்டு நிறுத்திப் பாடினால் அதுவும் வேதாந்தமே. வேதாந்த விதையை அனைவருக்கும் தந்து நாட்டைப் பண்படுத்தி விலையுயர்ந்த பயிரை வளர்க்கவே பாரதியார் பழைய வேதாந்தத்தைத் தேசியப் புதுமணத்துடன் கலந்து அந்த அற்புதமான பாட்டுகளைப் பாடித் தந்தார்.
— ராஜாஜி



# அச்சமில்லை

அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே

இச்சகத்து ளோரெலாம்
எதிர்ந்து நின்ற போதினும்,
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே.

துச்சமாக வெண்ணி நம்மைத்
தூறு செய்த போதினும்,
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே.

பிச்சைவாங்கி யுண்ணும்வாழ்க்கை
பெற்று விட்ட போதினும்,
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே.

இச்சைகொண்ட பொருளெலாம்
இழந்து விட்ட போதினும்,
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே.

நச்சை வாயிலே கொணர்ந்து
நண்ப ரூட்டு போதினும்,
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே.

பச்சையூ னியைந்த வேற்
படைகள் வந்த போதினும்,
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே.

உச்சி மீது வானிடிந்து
வீழுகின்ற போதினும்,
அச்சமில்லை யச்சமில்லை
அச்சமென்ப தில்லையே.

—மகாகவி பாரதியார்



# ஹெலிகாப்டர்

யுத்த அரங்கம்

காரங்களை அசைத்துக் கொண்டு கலவரத்துடன் ஓடி வந்தார் அந்த ராணுவ அதிகாரி. விமானப் படையைச் சேர்ந்த அந்த ஹெலிகாப்டர் ஓட்டி 'என்ன விஷயம்?' என்று பரபரப்புடன் கேட்டார். சீனர்களின் தாக்குதலுக்கு உட்பட்ட டிலங்தர் என்னுமிடத்தில் மூன்று பாரதச் சிப்பாய்கள் படுகாயப்பட்டுக் கிடக்கிறார்கள் என்றும் அவர்களுள் ஒருவரது நிலை கவலைக்கிடமாக உள்ளதென்றும் தெரிவித்தார் அதிகாரி.

விமான பைலட்டுக்கு அந்த அதிகாரி தம்மிடம் எதைக் கேட்கிறார் என்று புரிந்து விட்டது. ஹெலிகாப்டரில் டிலங்தருக்குப் போக வேண்டும். காயம் அடைந்தவரை ஏற்றிக் கொண்டு ஜும்புவுக்குச் செல்ல வேண்டும். அங்கே உள்ள நடமாடும் ஆஸ்பத்திரியில் அவரைச் சேர்ப்பித்து விட்டுத் திரும்ப வேண்டும்.

விமானி நிலைமையை ஆராய்ந்தார். அவரது ஹெலிகாப்டரில் ஏதோ பழுது நேர்ந்திருந்தது. அதைச் சரிசெய்து விட்டதாக என்ஜினியர்கள் சில விநாடிகளுக்கு முன்னர் தான் வந்து கூறினார்கள். எனினும் எஞ்சின் இப்போது சரியாக இயங்குகிறதா என்று அவர் இன்னும் பரீட்சித்துப் பார்க்கவில்லை. அதற்குள் இப்படி ஓர் அவசரப் பிரயாணம் குதிர்ந்திருக்கிறது. சிப்பாய் அடிபட்டு விழுந்து கிடக்கும் இடமோ கடல் மட்டத்திலிருந்து பதினோராயிரம் அடி உயரத்தில் இருந்தது. பகல் நேரத்திலேயே மலைப் பாங்கான அந்தப் பிரதேசத்தில், வெண்பனிக் காட்டில் ஹெலிகாப்டரை இறக்குவது எளிதான காரியமல்ல. இப்போதோ வேகமாக இருட்டிக் கொண்டு வந்தது.

எமனுடன் போராடும் சகோதரச் சிப்பாயின் வேதனை பிரதிபலிக்கும் முகம் விமானியின் எதிரே தோன்றியதுதான் தாமதம், புகைத்துக் கொண்டிருந்த சிகரெட்டைத் தரையில் போட்டுக் காலால் மிதித்து அணைத்துவிட்டு நெஞ்சுறுதியுடன் கிளம்பி விட்டார் அவர். தமது உயிரைப் பற்றி அஞ்சாமல் விமானத்திலேறி அதனைச் செலுத்தத் தொடங்கினார். டிலங்தரை அடைந்ததும் சர்வ ஜாக்கிரதையாகச் சுற்றுப்புற அடையாளங்களை ஞாபகப்படுத்திக் கொண்டு மெல்ல ஹெலிகாப்டர் விமானத்தை இறக்கினார்.

ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்லப்பட வேண்டியவரை ஹெலிகாப்டரினுள்ளே படுக்க வைத்தார்கள். இதற்குள் நாலாபுறமும் கும்மிருட்டு சூழ்ந்து விட்டது. விமானியினால் தன் எதிரே உள்ள விமான உபகரணங்களைக் கூடப் பார்க்க முடியவில்லை. இரவு நேரத்தில் செலுத்திப் போவதற்கான வசதி ஏதும் அந்த ஹெலிகாப்டரில் இல்லை. விநாடிப் பொழுது யோசித்து விட்டுத் தரையில் நின்ற ஒருவரிடமிருந்து டார்ச் லைட் ஒன்றினைக் கடன் வாங்கிக் கொண்டார் விமானி. அதனைப் பொருத்தித் தமது முழங்கால்களுக்கிடையில் இடுக்கிக் கொண்டார். பெட்ரோலின் அளவு, பறக்கின்ற உயரம், செல்கின்ற திசை போன்றவற்றைக் குறிக்கும் 'கேஜு'களை டார்ச் விளக்கின் மங்கலான ஒளியில் கூர்ந்து கவனித்துக் கொண்டு விமானத்தை ஓட்டினார். எவ்வித ஆபத்துமின்றி ஹெலிகாப்டர் ஜும்புவை வந்தடைந்தது. பாரத நாட்டின் வீரப் புதல்வர்களுள் ஒருவர் எமனுடைய பிடியிலிருந்து மீட்கப்பட்டார்.

போர்க்களத்தில் அடிபட்டவர்களுக்கு உதவி அளிப்பதில் ஹெலிகாப்டருக்கு ஈடு இணையே கிடையாது. சமய சஞ்சீவி என்கிற பெயர் அதற்கு மிகப் பொருத்தமானது. இதைத் தவிர யுத்த அரங்கில் அதற்கு வேறு பல அலுவல்களும் உண்டு. கடலில் தத்தளிப்பவர்களைக் காப்பாற்றுதல், ஒரு கப்பலிலிருந்து மற்றொரு கப்பலுக்குத் தளபதிகளை ஏற்றிச் செல்லுதல், வீரர்களைப் போர்முனைக்குக் கொண்டு சேர்த்தல், முன்னணியில் சண்டையிடுவோருக்கு ஆயுத தளவாடங்களையும் உணவுப் பொருட்களையும் எடுத்துச் செல்லுதல், எதிரியின் நடவடிக்கைகளைக் கண்காணித்தல் போன்ற காரியங்களைத் தவிர நீர்மூழ்கிக் கப்பல்களுடன் நடக்கக் கூடிய போராட்டங்களில், அவை இருக்குமிடங்களைக் கண்டுபிடிப்பதிலும் ஹெலிகாப்டருக்கு முக்கிய பங்கு உண்டு.

இப்படிப் பலப்பல விதங்களில் உதவும் வகையில் அது சிறப்புற்றிருப்பதன் ரகசியம் என்ன? எத்தகைய சூழ்நிலையிலும் உலவி வரக் கூடிய திறமை பெற்றிருப்பதுதான். ஆகாய விமானத்துக்குத் தேவைப்படுவது போல் ஹெலிகாப்டருக்கு விமானக் கூடம் வேண்டாம். இறங்கி ஏறுவதற்கு நீளமானதும் இடமானதுமான பாதைகள் அவசியமில்லை. காடுகளுக்கிடையிலும் பள்ளத்தாக்குகளிலும் ஆற்றங்கரைகளிலும் எங்கு வேணுமானாலும் அது கீழே இறங்கும், ஏறும். மேலே சுற்றுகிற அதன் விசிறி இடைடா



இருக்க அதன் நீளத்துக்கு ஏற்றாற்போல் கொஞ்சம் இடைவெளி வேண்டும். அவ்வளவு தான்! சக்கரங்கள் ஊன்றக் கொஞ்சம் சம தரை கிடைத்து விட்டால் போதுமானது.

ஹெலிகாப்டர் நின்ற இடத்திலிருந்து நேர் மேலே ஏறிச் செல்லும், கீழே இறங்கும். ஆகாயத்தில் பறக்கையில் முன்னும் பின்னும் செல்வதோடு பக்கவாட்டிலும் நகரும். இதெல்லாம் வேண்டாம்; அந்தரத்தில் அப்படியே நிற்க வேண்டும் என்றால், அதற்கும் தயார்தான்.

இவை யெல்லாம் எப்படிச் சாத்திய மாகின்றன? ஹெலிகாப்டருக்கு மேலே உள்ள விசிறியை ஓர் எஞ்சின் சுழல வைக்கிறது. இந்த விசிறியின் அலகுகள் உயரே வெளிப் பக்க மாய்ச் சற்று வளைந்திருக்கும். இதனால் விசிறி சுழலும் போது மேலே உள்ள காற்று வேக மாய் அகன்று சென்று விடுகிறது. அப்போது அங்கே காற்றின் அழுத்தம் குறைகிறது. இவ்வாறு ஹெலிகாப்டருக்கு மேலும் கீழும் உள்ள காற்றின் அழுத்தத்தில் ஏற்படும் வித்தியாசத்தினால் ஹெலிகாப்டர் மேலே எழும்புகிறது. அந்தரத்தில் நிலையாக நிற்க வேண்டும் என்னும் போது விசிறி சுழலும் வேகத்தைச் சற்றுக் குறைப்பதன் மூலம் மேலே தூக்கிச் செல்கிற சக்தியும் பூமியின் ஈர்ப்புச் சக்தியும் சம அளவில் இருக்குமாறு செய்கிறான் விமானி. கீழே இறங்க வேணு மானால் விசிறி சுழலும் வேகத்தை இன்னும் சற்றுக் குறைக்கிறான். அப்போது தூக்குச் சக்தியைக் காட்டிலும் ஈர்ப்புச் சக்தி இலே சாக அதிகமாக விமானம் கீழே இறங்கு கிறது. விசிறி சுழலுகிற கோணத்தை மாற்றி னால் விமானம் அந்தத் திக்கில் விரைகிறது. சுழலுகிற விசிறியை முன்னுக்குச் சாய்த் தால் முன்புறமும் பின்னுக்குச் சாய்த்தால் பின்புறமும் பக்கவாட்டில் சாய்த்தால் அத் திசைகளிலும் விமானம் நகருகிறது. மணிக்கு 150 மைல் வேகத்தில் பறக்கக் கூடிய ஹெலிகாப்டர்கள் உள்ளன.

ஹெலிகாப்டரை உருவாக்குகிற எண்ணம் மனிதனுக்கு இன்று நேற்று ஏற்பட்டதல்ல. 1500-லேயே லியானர்டோ டாவின்ஸி ஹெலிகாப்டரின் மாதிரிகளைத் தயாரித் தார். ஆனால் அவற்றைச் செலுத்த எஞ்சின் தான் அன்று அவரிடம் இல்லை! ஹெலிகாப் டரின் வளர்ச்சியில் பலர் பங்குபற்றியுள் ளார்கள் என்றாலும் பெருமளவுக்கு அதன் பெருமை யெல்லாம் அமெரிக்கப் பிரஜை யாக மாறிய ருஷ்யர் ஜகார்ஸிகார்ஸ்கியைச் சேரும். ஆராய்ச்சியாளருக்குத் தலைவேதனை அளித்து வந்த எதிர்ச் சக்தி சங்கடத்தைச் சமா ளித்து வெற்றி காண வழி வகுத்தவர் அவரே.

ஹெலிகாப்டர் விமான விசிறிகள் இட மிருந்து வலமாய்ச் சுழன்றபோது இந்த எதிர்ச் சக்தி இயற்கை நியதிப்படி உருவாகி விமானத்தையே எதிர்த் திசையில் அதாவது வலமிருந்து இடமாகச் சுழலுமாறு இழுத் தது! ஜகார் இதனை நிவர்த்தி செய்யத் தமது ஹெலிகாப்டரின் இடப் புறத்தில் வாலுக்கருகே ஒரு சிறிய விசிறியைப் பூமி மட்டத்துக்குச் செங்குத்தாகச் சுழலுமாறு அமைத்தார். இது உருவாக்கிய சக்தி எதிர்ச் சக்தியை ஈடு செய்தது. விமானம் தடை ஏதுமின்றிப் பறக்க உதவியது.

யுத்த களத்தில் காயம் அடைந்தவர்களை ஆஸ்பத்திரிகளுக்கு அப்புறப்படுத்தும் வேலை யில் ஹெலிகாப்டர் ஒரு புதிய சகாப்தத் தையே உருவாக்கி விட்டதெனலாம். ஏனெனில் இது ஆபத்தான நிலையில் உள்ள சிப்பாயை வெகு சீக்கிரத்தில் ஆஸ்பத்திரிக் குக் கொண்டு சேர்க்கிறது. ஆம்புலன்ஸ் லாரி களில் செல்லும்போது குண்டும் குழியுமான சாலைகளில் விழுந்தெழுகையில் வேதனைக்கு மேல் வேதனையாக இருக்கும் சிப்பாய்க்கு. ஹெலிகாப்டரில் இது தவிர்க்கப்படுவது மட்டுமல்ல, குலுக்கிப் போடாமல் அமைதி யாகப் பறப்பதால் ஏராளமாக ரத்தம் இழந்தவர்கள் உடலில் உடனுக்குடன், விமானத்திலேயே ரத்தம் ஏற்றுவதும் சாத்தியமாகிறது. ஆகாய மார்க்கமாய்ச் செல்வதால் எதிரியின் தாக்குதலால் அவ னுக்கு நேரக் கூடிய துன்பம் இல்லை.

ஆனால் இவற்றுக்கெல்லாம் மிக முக்கிய மான ஒரு நிபந்தனை உண்டு. அதுதான் விமான பலம். எதிரியின் யுத்த விமானங் களை ஹெலிகாப்டரினால் சமாளிக்க முடி யாது. நம்முடைய விமானங்கள் அதற்குப் பக்கபலமாய் இருந்து விட்டாலோ அது கணக்கற்ற வழிகளில் பிரயோஜனப்படும். ஓர் அவசரத்துக்கு லாரிகளையும், பீரங்கிகளை யும், ஏன், டாங்குகளைக்கூட ஒவ்வொன்றாக அது கட்டித் தூக்கிக் கொண்டு அவற்றால் கடக்க முடியாத பிரதேசங்களையும் ஆகாய மார்க்கமாகத் தாண்டி அப்பால் இறக்கி விட்டு விடும் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

இலகுவாக இயங்குகிறபடியினால் ஹெலி காப்டரை ஓட்டுவது எளிதென்று எண்ணிவிட வேண்டாம். கைதேர்ந்த ஆகாய விமான பைலட் கூடப் பல மணி நேரப் பயிற்சிக்குப் பின்னர்தான் ஹெலிகாப்டரை 'ஒழுங்காகச் செலுத்த முடியும்!




அத்தியாயம் 30

## சித்தம் கலங்கியது

**ம**லாயாத்தீபகற்பத்திலிருந்து பினாங்குத் தீவைப் பிரித்து வைத்த குறுகலான கடற்பரப்பில் நீராவிப் படகுகளின் போக்குவரத்து மிகவும் அதிகமாக இருந்தது. வெள்ளையரைக் கூட்டம் கூட்டமாகப் பினாங்கிலிருந்து வெளியேற்றிக் கொண்டிருந்தது அரசாங்கம். பலர் கப்பலேறித் தாய் நாட்டுக்கே திரும்பினர். அல்லது தற்போதைய ஆபத்திலிருந்து தப்பச் சிங்கப்பூரைக் கடல் மார்க்கமாகவே சென்றடைந்தனர். வேறு பலர் படகுகளில் ஏறி அக்கரை சேர்ந்து அங்கிருந்து தரை மார்க்கமாய்த் தெற்கு நோக்கிப் பயணமாயினர்.

''ஜப்பானியரின் கோரப்பசிக்குப் பினாங்குத் தீவை இரையாக்கத் தீர்மானித்து விட்டார்கள் போலிருக்கிறதே!'' என்றான் வடிவேலு மைக்கேலைத் திரும்பிப் பார்த்து.

''ஆமாம், இன்னும் இரண்டொரு நாட்களில் இங்கே ஜப்பானியரின் ஆட்சி தொடங்கி விடும்.''

எதிரே படகுகளில் வந்துகொண்டிருந்தவர்களை வடிவேலு மீண்டும் கவனித்தான். வீடு வாசல்களைத் துறந்து சொத்துக்களையெல்லாம் இழந்து அகதிகளாகப் பயந்தோடும் அவர்களை அனுதாபத்தோடு நோக்கினன்.

''என்ன பார்க்கிறாய் வடிவேலு? பெரும்பாலோர் ஐரோப்பியர்களாகவே இருக்கிறார்களே என்றா?''

உண்மையில் அத்தகைய எண்ணம் ஏதும் அதுவரை வடிவேலுவின் மனத்தில் எழவில்லை. ஆனால் இப்போது மைக்கேல் ஒரு பிரச்னையைக் கிளப்பி விட்டபிறகு அவனும் அதைக் குறித்துச் சிந்திக்கலானான்.

''ஜப்பானியர் வந்து விட்டால் இங்குள்ள ஐரோப்பியரைப் படாத பாடு படுத்தி வைத்து விடுவார்கள் என்பதால் படகுகளிலும் கப்பல்களிலும் வெள்ளையர்களுக்கே முதலிடம் தருகிறார்களோ?''

''அது ஒரு காரணம். ஏராளமான ஆசியர்களை ஏற்றிச் செல்லப் படகு, கப்பல், வாகன வசதிகள் ஏதுமில்லை. சிங்கப்பூரில் ஜனத்தொகை அதிகமாவதையும் ஆட்சி பீடம் அவ்வளவாக விரும்ப வில்லை, ஆகவே ஐரோப்பியர் மட்டுமே கம்பி நீட்ட அனுமதிக்கப்படுகிறார்கள்....''

''....ஆசியர்கள் எதிரிகளிடம் அகப்பட்டுக் கொண்டு திண்டாடுமாறு விடப்படுகிறார்கள்'' என்று எரிச்சலுடன் கூறினன் வடிவேலு.

''நான் இங்கே வந்தது அதற்காகவும் தான். பினங்கில் எனக்கு இரண்டொரு இந்திய நண்பர்கள் உண்டு. அவர்கள் பத்திரமாகச் சிங்கப்பூர் போய்ச்சேர ஏற்பாடு செய்ய வேண்டும்.''

பேசிக் கொண்டே இருக்கையில் படகு ஜியார்ஜ் டவுன் துறையில் கரை தட்டி நின்றது. மோட்டார் காரைக் கிளப்பினன் வடிவேலு. சக்கரங்கள் சாலையில் உருள ஆரம்பித்ததும் வேகத்தை அதிகரித்தான். நகரின் மையத்துக்குப் போவதற்குள் நரக லோகத்துக்கே வந்து சேர்ந்து விட்டோமோ என்று நினைக்கும்படியாகிவிட்டது. கைக் குட்டையை எடுத்து மூக்கை மறைத்துப் பொத்திக்கொண்டான் மைக்கேல். வடிவேலுவுக்கோ காரைச் செலுத்த இரண்டு கரங்களும் தேவைப்பட்டன. முகத்தைச் சுளுக்கிக் கொண்ட அவனுக்குத் துர் நாற்றம் எங்கிருந்து எழுகிறது என்று கண்டு பிடிப்பதும் கடினமாக இல்லை. ஜப்பானியக் குண்டுகளுக்குப் பலியான பலர் சாலை ஓரங்களில் தாறுமாருக விழுந்து கிடந்தார்கள். சொறி பிடித்த நாய்கள் அந்தப் பிரேதங்களைச் சந்தேகப் பார்வையுடன் வளைய வந்தன. எங்கு நோக்கினும் வீடுகளுக்குப் பதில் குட்டிச்சுவர்களே காட்சி யளித்தன. அவற்றைச் சுற்றிலும் இடிந்த பகுதிகள் கல்லும் மண்ணுமாகக் குவிந்து கிடந்தன. இந்தப் பயங்கரத் தோற்றங்கள் எல்லாம் மிகுந்த மனச் சோர்வு உண்டு பண்ணவே வடிவேலு தலையை இப்படி அப்படி அசைக்காமல் தனக்கு நேர் எதிரே இருந்த சாலையை மட்டுமே பார்த்தபடி காரை ஓட்டிப் போனன்.

''கிறிஸ்துமஸ் சமயத்தில் நடக்குமே வாண வேடிக்கைகள்; பினங்கில் குண்டு வீசுவதென்பது ஜப்பானியருக்கு அத்தகையதொரு கொண்டாட்டமாகத்தான் இருந்திருக்கும்'' என்றான் மைக்கேல். ''விமானங்களைச் சுட்டு வீழ்த்தும் பீரங்கி ஒன்றுகூட இங்கே கிடையாது! எதிர்ப்பு பற்றிய கவலையே துளிக்கூட இல்லாததால் நம்முடைய பகைவருடைய 'பாம்பர்'கள் இந்த நகரைச் சர்வ நாசமாக்கி விட்டுப் போயிருக்கின்றன.''

அருவருப்பிலே வடிவேலுவுக்கு உடல் முழுதும் ஒரு விதக் கூச்சம் பரவியது. 'சே! என்ன அக்கிரமம் இது! யுத்த வெறி கொண்ட ஒன்றிரண்டு பித்தர்களுக்காக ஒரு பாபமும் அறியாத எத்தனை எத்தனை அப்பாவி மக்கள் படு கொலைக் குள்ளாகிறார்கள்' என்று வருந்தாமல் இருக்க முடிய வில்லை அவனல்.

இந்தச் சமயத்தில் மைக்கேல் ஒரு வீட்டைச் சுட்டிக் காட்டினன். ''அதோ தெரிகிறதே, அந்த விளக்குக் கம்பத்தினருகில் சற்று நிறுத்திக்கொள். அங்கேதான் என்னுடன் நெருங்கிப் பழகியுள்ள ஓர் இந்தியக் குடும்பம் வசிக்கிறது'' என்றான்.

வண்டியை விட்டு இறங்கி வடிவேலுவையும் பின்னேடு வரச்சொல்லி விட்டு, குண்டு வீச்சிலே பெருமளவு தகர்ந்து போயிருந்த அந்தக் கட்டிடத்தினுள் நுழைந்தான். வீட்டில் உருப்படியாக நின்ற இரண்டு அறைகளுள் ஒன்றிலிருந்து யாரோ விம்மி அழும் ஓசை கேட்டது.

வினடிப் பொழுது தயங்கிய மைக்கேல் ஏதோ தீர்மானத்துக்கு வந்தவனக மேலே நடந்தான்.

மேஜை மீது மடித்துப் போட்டிருந்த மென் கரங்களில் முகத்தைப் புதைத்துக் கொண்டு நெஞ்சு வெடித்துவிடும் போல் மேனி குலுங்க விக்கித்து அழுது கொண்டிருந்தாள் ஒருத்தி. காலடி ஓசை கேட்டு நிமிர்ந்த அவள் முகத்தைக் கண நேரம்தான் காண முடிந்தது. சட்டென்று தன் தலையை முக்காடிட்டிருந்த புடவைத் தலைப்பை முன்னுக்கு இழுத்து விட்டு முகத்தை மறைத்துக் கொண்டாள் அவள்.

**வ**டிவேலு துணுக்குற்று ஓர் அடி பின்வாங்கினான். முகத்துக்குத் திரையிட்டுநின்ற அந்த முஸ்லிம் மங்கையை இதற்கு முன்னால் எப்போதோ எங்கேயோ பார்த்திருப்பது போல் அவனுக்கு ஒரு ஞாபகம்.

'இது என்ன அசட்டுத்தனம்?' என்று தன்னைத் தானே கோபித்துக் கொண்டான் அவன். 'முகத்திரையிட்ட முஸ்லிம் பெண்கள் எத்தனையோ பேர்களை நீ இதுவரை சந்தித்திருப்பாய். நேற்று பார்த்த முகமே இன்று நினைவிருப்பதில்லை என்றால் நாளுக்குநாள் மாறக் கூடியமுகத்திரைகளைக்கொண்டு ஒருபெண்ணை எவ்வாறு அடையாளம் சொல்வது?'

''வடிவேலு! இவளுக்குச் சரியாக ஆங்கிலம் பேச வராது. என்ன நடந்தது என்று விசாரி. தமிழ் நாட்டைச் சேர்ந்தவள்தான் இவள்.''



''அம்மா!'' என்று அந்த முஸ்லிம் பெண்ணைப் பரிவுடன் அழைத்தான் வடிவேலு. ''காப்டனுக்கு உங்கள் குடும்ப நலனில் மிகுந்த அக்கறை உண்டு என்று உங்களுக்கு ஏற்கனவே நன்கு தெரிந்திருக்கும். உங்களுக்கு என்ன வேண்டுமோ, தயங்காமல் சொல்லுங்கள்.''

''என் கணவர்.... என் குழந்தை....என் குழந்தை....'' மேலே பேச முடியாமல் துடிதுடித்துத் தரையில் விழுந்து கரங்களை ஒன்று சேரப் பிசைந்தாள் அவள்.

'யுத்த அரக்கனே! சண்டாளப் பாவி! மழலை மாருத பிள்ளையின் குருதியைக் குடிக்கவா ஆசை கொண்டாய் நீ?' வடிவேலுவை வேதனை குடைந்தது. வீட்டின் ஒரு பகுதி வெறும் மண்மேடாக விளங்குகிற கண்ணராவிக் காட்சியும், தாயின் துன்பக் கோலமும் அவனை வேறுவிதமான முடிவுக்கு வர விடவில்லை.

''என்ன? என்ன?'' என்று மைக்கேல் அவனை உலுக்கிக் கேட்டான்.

தலைவனுக்குச் சரியான பதிலளிக்க வேண்டிய தன் கடமையை உணர்ந்து வடிவேலு மீண்டும் அந்தப் பெண்ணிடம் வினவினான். ''அம்மா! உங்கள் கணவருக்கும் குழந்தைக்கும் என்ன நேர்ந்தது?''

அவள் பதில் அளிக்காமல் விசும்பல் ஒலியுடன் மெல்ல எழுந்து நடந்தாள். பாழடையாதிருந்த மற்றோர் அறைக்குப் போனாள். செல்வ மிக்க தொரு குடும்பத்தினர் வாழும் நல்ல தொரு இல்லம் அது என்பதை அந்தப் படுக்கை அறை ஒன்றே நன்கு நிரூபித்தது. அதில் ஒரு மூலையில் இருந்த சாய்ந்தாடும் நாற்காலியில் சுவரைப் பார்க்க ஒருவன் அமர்ந்து முன்னுக்கும் பின்னுக்குமாய் அசைந்து கொண்டிருந்தான்.

குடும்ப நண்பன் என்கிற உரிமையோடு மைக்கேல் சகஜமாகப் படுக்கை அறைக்குள்



புகுந்து சென்றான். ஓரத்தில் சாய்ந்தாடிக் கொண்டிருந்தவன் தலை திருப்பவே இல்லை. அவன் இந்த உலகத்தில் இருப்பதாகவே தோன்றவில்லை.

மைக்கேல் அவன் தோள்களில் கரம் பதித்து, ''நண்பரே!'' என்று அன்புடன் அழைத்தான். பதில் இல்லை.

காப்டன் நாற்காலியையே மெல்லத் திருப்பினான்.

சோகமே உருவான ஒரு முகம் இப்போது மைக்கேலைப் பரிதாபமாகப் பார்த்து விழித்தது. பரட்டைத் தலை, குழி விழுந்த கண்கள், சுருக்கங்கள் நிறைந்த நெற்றி, வாய் திறந்திருக்கத் தொங்கிய முகவாய், தொய்ந்து போன தோள்கள்... அவன் தன் கையில் ஒரு குழந்தையைப் பற்றி அணைத்திருந்தான்.

'நல்ல வேளை! நாம் பயந்ததுபோல் தந்தைக்கும் குழந்தைக்கும் உயிருக்கு ஆபத்து ஒன்று மில்லை!' வடிவேலு இவ்வாறு எண்ணி அடைந்த நிம்மதி நீண்டபொழுது நிலைக்கவில்லை. எதிரே இருந்தவனுடைய முகத்தை அவன் உற்றுப் பார்த்தான். 'ஆ! இதில் சந்தேகமே கிடையாது! இவனை நிச்சயமாக இதற்கு முன்னால் எங்கேயோ பார்த்திருக்கிறோம். எங்கே?'

''ஜமால்!'' நண்பனைப் பெயர் சொல்லி அழைத்தான் மைக்கேல்.

'ஆம் ஜமால்தான்!' என்று தனக்குத் தானே கூறிக் கொண்டான் வடிவேலு. 'ஏதோ ஒரு கடுமையான நோயில் அடிபட்டவனைப் போல் முகத் தோற்றத்தில் மாறுதல்கள் ஏற்பட்டிருந்தாலும் தன்னுடைய ஜன்மப் பகைவனை அதே ஜமால்தான் இவன் என்பதில் சந்தேகமே இல்லை!' முதலில் ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து மீண்டதும் வடிவேலுவின் ரத்தம் கொதிப்படைய ஆரம்பித்தது.

அதற்குள், ''ஜமால்! குழந்தையை இவனிடம் கொடு, உம், கொடுத்து விடு'' என்று மைக்கேல் அதட்டவே, ஜமால் பக்கமாகத் தன் கரங்களை நீட்டினான் வடிவேலு.

முன்வரிசைப் பற்கள் முழுதும் தெரிய இளித்தான் ஜமால். உடலை இடப் பக்கமாகப் பின்னுக்கு இழுத்துக் கொண்டதுடன் குழந்தையைப் பற்றியிருந்த கரங்களையும் அத்திசையிலேயே மடக்கி, முடக்கிக் கொண்டான்.

சட்டென்று வடிவேலுவின் மூளைக்கு ஒரு விஷயம் எட்டியது. 'பைத்தியம்!'

அவனிடத்தில் பொங்கிய கோபமெல்லாம் எங்கோ ஓடி ஒளிந்துகொள்ளப் பச்சாத்தாபம் மிகுந்தது.

பைத்தியம் குழந்தையை மார்புறத் தழுவிக் கொண்டது. ''நான் தரமாட்டேன். ஏன் தெரியுமா? அது ராஜத் துரோகமாகி விடும்! எனக்கு இடப்பட்டிருக்கும் கட்டளையை நான் நிறைவேற்றியே தீருவேன்! அரும்பாடுபட்டு அளவுகடந்த ஆசையோடு நான் வளர்த்து வந்ததை யெல்லாம் என்னுடைய கைகளால் நானே அழிக்க வேண்டும்! அதுதான் உத்தரவு!''

மின்னல் வேகத்தில் இயங்கிய மைக்கேலின் கரம் ஜமாலின் நெற்றிப் பொட்டுக்குச் சற்று மேலே பலமாகத் தாக்கியது. பக்கத்தில் நின்ற அவன் மனைவி வீரிட்டு அலறினாள். ஜமாலின் கை நழுவக் கீழே விழப் போன குழந்தையை வாரி எடுத்து அதன் அன்னையிடம் தந்தான் வடிவேலு. மயக்கமடைந்து சுருண்டு விழவிருந்த ஜமாலை மைக்கேல் தாங்கி மெல்லப் படுக்க வைத்தான். பாலகனை வாங்கிக் கொண்டவள் ஒரேயடியாக அழுது புலம்பினாள்.

''வடிவேலு! இவளை அஞ்ச வேண்டாம் என்று சொல்லு. இன்னும் அரை மணி நேரத்தில் இவளையும் இவள் கணவனையும் அழைத்துப் போக ஆட்கள் வருவார்கள் என்றும் மறுப்புக் கூறாமல் அவர்களுடன் இவள் செல்லவேண்டும் என்றும் கூறு. ஜமாலை அவர்கள் ஆம்புலன்ஸில் ஆஸ்பத்திரிக்கு ஏற்றிச் செல்வார்கள். இன்றிரவு சிங்கப்பூருக்கு ஒரு கப்பல் புறப்படுகிறது. அதில் இவளையும் ஒரு பிரயாணியாக இருக்க அனுமதிப்பார்கள். பினாங்கில் இனிமேல் இவள் தங்கி இருப்பது ஆபத்து. குழந்தையின் நலனைக் கருதி இவள் கணவனை விட்டுத் தற்போதைக்குப் பிரிந்து போகத்தான் வேண்டும். ஆட்கள் வரும் வரையில் ஜமாலைச் சமையல் அறையில் கிடத்திக் கதவைப் பூட்டியும் வைக்க வேண்டும். இவன் மயக்கம் தெளிந்து எழுந்ததும் எப்படி நடந்துகொள்வானோ!''

மைக்கேல் கூறினவற்றை யெல்லாம் அவளுக்கு மொழிபெயர்த்து விளக்கி வைத்தான் வடிவேலு.

''ஐயா! என் கணவருக்கும் சேர்த்து நான் உங்களிடம் மன்னிப்புக் கோருகிறேன்'' என்றுகூறிய அவள் குழந்தையை அவன் காலடிகளில் கிடத்தி விட்டு பூட்ஸ் அணிந்த பாதங்களைத் தொட்டுத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள். ''என்னுடைய பரிதாபகரமான நிலையைப் பாருங்கள். பார்த்து மனமிரங்கி அவரை மன்னித்ததாய்ச் சொல்லுங்கள். வேண்






PEPS
for






Hadensa

டாம். வாய்விட்டு அப்படிச் சொல்வது உங்களுக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். அதை நான் எதிர்பார்ப்பதும் தவறு. மனத்துக்குள்ளாகவேனும் அவரை மன்னித்து விட்டதாக நினைத்துக் கொள்ளுங்கள். அதுவே போதும். உங்களுடைய மன்னிப்புக் கிடைத்தால் கடவுளும் அவரிடம் கருணை காட்டுவார். சுய புத்தியைச் சீக்கிரமாகத் திரும்பப் பெறச் செய்வார்.

''ஐயா! எனக்காக இல்லாவிட்டாலும், இந்தக் குழந்தையின் எதிர்காலத்தைக் கருதியாவது அவரை மன்னித்து விடுங்கள்.''

''மனப்பூர்வமாக நான் அவனை மன்னித்து விடுகிறேன், அம்மா!'' என்று நாத் தழுதழுக்கக் கூறிவிட்டுக் கண்ணீரை அவளிடமிருந்து மறைப்பதற்காகச் சட்டென்று வடிவேலு காரை நோக்கி நடந்தான்.

## அத்தியாயம் 31

# ஆசைத் தீ

யோசிக்க யோசிக்க வடிவேலுவுக்கு ஜமாலின் போக்கு விந்தையாகத்தான் இருந்தது. சொந்தக் குழந்தையின் வாழ்வுக்கு முடிவு கட்ட நினைக்கும் தகப்பனும் உலகில் உண்டா? மைக்கேலிடம் இதைப் பற்றிக் கேட்டான் அவன். காப்டன் கூறிய செய்தி அவனை உணர்ச்சிக் குவியலாக்கி உடல் சிலிர்க்க வைத்தது.

ஜப்பானியரின் குண்டு வீச்சினால் பாழானது போதாதென்று பினாங்கில் எஞ்சியிருந்த பலப் பல தொழிற்சாலைகள், முக்கியமான காரியாலயங்கள், உணவுக் கிடங்குகள் போன்ற எல்லாவற்றையும் இடித்துத் தரை மட்டமாக்கிவிட வேண்டுமென்று பிரிட்டிஷ் அரசாங்கமே முடிவு கட்டியிருந்தது. பினாங்கைக் கைப்பற்றி வெற்றிக் கொடி நாட்டும் ஜப்பானியருக்கு நிலவளம், தொழில் வளம் நிறைந்த பிரதேசத்தை விட்டுச் செல்லக் கூடாது; சாம்பல் குவியல்களையும், தெருப் புழுதியையும்தான் அவர்கள் ஆளவந்தவர்களாயிருக்க வேண்டும். அவ்வாறின்றித் தொழிற் கூடங்களை அப்படி அப்படியே விட்டு வைத்துப் பின் வாங்கினால் மேற்கொண்டு போர் தொடுக்கவும், மலாயாவில் தெற்கு நோக்கி முன்னேறவும் ஜப்பானியருக்குப் பிரிட்டிஷாரே துணை புரிந்ததாகும். ஜப்பானியனின் யுத்த முயற்சிகளுக்கு அந்தத் தொழிற்சாலைகள் பெரிதும் உதவும்.

பல கட்டிடங்களை வெடி மருந்து வைத்துத் தகர்ப்பது என்று தீர்மானமான பிறகு அதனை எப்படி நிறைவேற்றுவது என்ற கேள்வி எழுந்தது. சிப்பாய்கள் அனைவருக்கும் ஜப்பானியருடன் சண்டை போடுகிற வேலையே சரியாக இருந்தபடியால் அவர்களை இந்தக் காரியங்களில் ஏவிவிட முடியாது. எனவே அந்தந்தத் தொழிற்கூடங்களின் அதிபர்களும் நிர்வாகிகளுமே தங்கள் கட்டிடங்கள், இயந்திரங்கள் முதலியவற்றுக்கு வெடி வைத்துத் தூள் தூளாக்க வேண்டுமென்று கட்டளை பிறப்பித்தார்கள்.

பினாங்கில் குடியேறியபிறகு ஜமால் யுத்த மேகங்கள் குமுறுவதைக் கண்டு புத்திசாலித்தனமாக ராணுவத்தினருக்குப் பயன்படக் கூடிய சில உபகரணங்களைத் தயாரிக்க ஆரம்பித்தான். சிறிய அளவில் தொடங்கப்பட்ட அவனது தொழிற்கூடம் நெருக்கடி நிலை காரணமாக வெகு சீக்கிரத்தில் மிகப் பெரிதாக விருத்தியடைந்து விட்டிருந்தது.

ஆனால் திடீரென்று இப்போது நிலைமை மாறி விட்டது. அவன் ஆசையோடு வளர்த்துவந்த தொழிற்கூடம்-வேகமாக விரிவடைந்து, சிறப்புடன் திகழ்ந்த ஒரு நிலையம்; கண்ணை இமை காப்பது போல் அவன் அன்பு செலுத்தி இரவு பகலாக உழைத்து உருவாக்கிய ஒரு ஸ்தாபனம் — அதனை அவனே தன் கரங்களால் வெடி மருந்து வைத்துத் தரை மட்டமாக்க வேண்டும். இந்த முக்கியமான வேலையை அவன் வேறு யாரிடமும் ஒப்படைக்கக் கூடாது. அவனே அருகிலிருந்து நிறைவேற்றி வைக்க வேண்டும்!

ஜமாலினால் இந்தப் பேரதிர்ச்சியைத் தாள முடியவில்லை. ராஜ விசுவாசத்துக்காகவோ அல்லது அரசாங்கத்தின் தண்டனைக்குப் பயந்தோ அவன் எப்படியோ தன் கடமையைச் செய்து விட்டான். அவன் சித்தமும் அதே நேரத்தில் கலங்கி விட்டது.

''தன் குழந்தையிடம் வைத்திருந்த பாசத்துக்கு இணையாகத் தான் தனியொருவனை மிகவும் சிரமப்பட்டுத் தோற்றுவித்திருந்த அந்த ஸ்தாபனத்தின் மீதும் அவன் அன்பு செலுத்தி வந்தானோ?'' என்று வடிவேலு கேட்டான்.

''அப்படித்தான் இருக்க வேண்டும்'' என்ற மைக்கேல் காரை விட்டுக் கீழே இறங்கி ராணுவக் காரியாலயம் ஒன்றினுக்குள் புகுந்து சென்று ஜமாலுக்கும் அவன் மனைவிக்கும் தேவையான உதவி கிடைக்க ஏற்பாடு செய்து விட்டு வந்தான்.

திரும்பவும் காரில் ஏறி அமர்ந்து கொண்ட அவனை, ''எத்தனை நாட்களாக ஜமாலை உங்களுக்குத் தெரியும்?'' என்று கேட்டான் வடிவேலு.

''சிங்கப்பூருக்கு மாற்றலாவதற்கு முன்னால் பினாங்கில் இரண்டு வருஷங்கள் நான் வாழ்ந்தேன். அப்போது இங்குள்ள துருப்புகளுக்குப் பொழுதுபோக்காகவும் உற்சாகப் படுத்துவதற்கும் நாடகங்கள் ஏதேனும் ஏற்பாடு செய்வேன். அவற்றில் நடிப்பதற்கென்று ஜமால் ஒரு நாடகக் காரியை அழைத்து வருவான். அந் நாட்களில்தான் எனக்கு அவனுடன் பழக்கம் ஏற்பட்டது. இப்படிப்பட்ட நிலையில் அவனைப் பார்க்க நேரிடும் என்று நான் கனவு கூடக் காணவில்லை. இதைக் காட்டிலும் அவன் குண்டு வீச்சிலே இறந்தே போயிருக்கலாம்.''

''யாரோ ஒரு நடிகையைப் பற்றிக் குறிப்பிட்டீர்களே அவளும் தமிழ் நாட்டைச் சேர்ந்தவள்தானா?''

''ஆமாம், எதற்குக் கேட்கிறாய்?'' மைக்கேல் அவனைக் கூர்ந்து நோக்கினான்.

''ஒன்றுமில்லை'' என்ற வடிவேலு மௌனமாகக் காரோட்டிச் சென்றான்.

ஐந்து நிமிஷங்களுக்குப் பின்னர் பினாங்குத் தீவின் மேற்கு எல்லையில் ஒதுக்குப்புறமான இடத்தில் அமைந்திருந்த ஒரு வீட்டின் எதிரே மோட்டார் நின்றது. ''இங்கேயே இரு. இதோ வந்து விடுகிறேன்'' என்று வடிவேலுவிடம் சொல்லி விட்டு மைக்கேல் கீழே இறங்கிப் போனான்.

அப்போது நன்றாக இருள் கவிந்து விட்டது. சிகரெட் ஒன்றைப் பற்ற வைப்பதற்காகத் தீக்குச்சியை உரசிக் கொளுத்தினான் வடிவேலு. சற்று நேரம் அந்தத் தீப் பிழம்பையே பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு காலத்தில் அந் நெருப்பு ஜ்வாலையைப் போலவே ஒருத்திக்காகத் தன் மனத்தில் ஆசைத் தீ கொழுந்து விட்டதை எண்ணினான்.

அந்த மோகத் தீ அபரிமிதமாகப் பற்றி எரிகிறது. பெரு நெருப்பாக மூண்டு விடுகிறது. அதன் தீ நாக்குகள் சகலத்தையும் காவு கொள்கின்றன. சொத்து, சுதந்திரம், உற்றார் உறவினர், பந்த பாசம், குடும்ப கௌரவம் போன்றதெல்லாம் அந்தத் தீயினால் பொசுக்கப்படுகின்றன.

அந்த ஆசைத் தீயை அவனிடத்தில் மூட்டி விட்டவளுக்காக, குறைவற்ற செல்வத்துக்கு அதிபதியாகத் திகழ வேண்டியவன் பக்கத்து டவுனில் ஆரம்பப் பாடசாலையில் இரண்டாம் வகுப்பு ஆசிரியனாகப் பதவி ஏற்கிறான்.

ஆனால் இதையெல்லாம் அந்தச் சக்கு பெரிதாகக் கருதியதாகத் தெரியவில்லை. தன் பொருட்டு அவன் செய்துள்ள தியாகங்களை எண்ணி எக்களிப்பு அடைவதற்குப் பதிலாக ஏமாற்றத்துக்கு இடமளித்து ஏங்குகிறாள் அவள். ஆடம்பரமாக வாழலாம் என்று மனப்பால் குடித்து வந்தவளுக்கு ஏழைமையில் புரளுவது மனத் திருப்தி அளிக்கவில்லையென்பதை வடிவேலு கண்டு கொள்கிறான். அப்போது அவனுக்கு உண்டாகிற மனத் தாங்கல்... 'காதலும் பிரேமையும் காசு உள்ள வரைதானா?' என்று மனம் நொந்து அவன் உருகியது அவனுக்கு மட்டுமே தெரியும். ஆயினும் அவனால் அந்த மோக வலையிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள முடியவில்லை. ஆசைத் தீயை அணைத்துவிட அவனுக்கு வழி தெரியவில்லை.

அவர்கள் வசித்த சின்னஞ்சிறு இல்லத்தின் எதிர்ப் புறத்தில் காலியாக இருந்த மற்றொரு ஓடு வேய்ந்த வீட்டுக்கு ஜமால் தன் மனைவியுடன் குடியேறுகிறான். அவனும் அவனைப் பின் தொடர்ந்து முகத்திரையிட்ட அவன் மனைவியும் மாட்டு வண்டியை விட்டு இறங்குவதைத் திண்ணையில் இருந்தபடி காண்கிறான் வடிவேலு. பார்வை சற்றுத் திரும்புகிற போது சக்குவும் ஜன்னல் வழியே புதிதாக வந்திருப்பவனைக் கவனிப்பது தெரிகிறது.

அன்றைக்கே பள்ளி செல்கையில் ஜமாலைக் கூப்பிட்டு எச்சரிக்கிறான் வடிவேலு. வாய் விட்டுச் சிரித்து அவன் பயத்தைப் போக்குகிறான் ஜமால். ''சக்குவை வைத்துக்கொண்டு நான் நடத்திய நாடகப் பிழைப்புக்கு நீ முற்றுப் புள்ளி வைத்து விட்டாய். இனி என் வயிற்றுப்பாட்டை வேறு விதத்தில் நான் கவனித்தாக வேண்டும் பார்! மளிகை வியாபாரம் செய்யத் தீர்மானித்திருக்கிறேன். கிராமப் புறங்களிலிருந்து மளிகைச் சாமான்களை மலிவான விலைக்கு வாங்கிப் போய் டவுன் பக்கங்களில் நல்ல லாபத்துக்கு விற்று விட்டு வருவேன். நீ ஒன்றும் அநாவசியமான கற்பனைகளில் இறங்கி மனத்

இப்பொழுது நடைபெறுகிறது

சென்னை

ஸ்ரீகிருஷ்ணா · பாரகன்

உமா · நூர்ஜஹான்

மற்றும் தென்னகமெங்கும்




டைரக்ஷன் - கே. சங்கர் ✦ தயாரிப்பு - பி.எஸ். வீரப்பா

தைத் துன்புறுத்திக் கொள்ளாதே'' என்கிறான்.

உற்சாகம் என்பதே சிறிதுமற்ற நாட்கள் மெல்ல நகருகின்றன. சுமார் ஒரு மாதத்துக்குப் பிறகு வியாபாரத்தில் ஏராளமான நஷ்டம் என்றும், கடன்காரர்களின் கண்களில் மண்ணைத் தூவிவிட்டுத் தான் சிங்கப்பூருக்கு ஓடிவிடப் போவதாகவும் ஜமால் ரகசியமாகக் கூறக் கேட்டு வடிவேலு மன நிம்மதி பெறுகிறான்.

ஒரு நாள் பள்ளி விட்டதும் கிளம்பி வீடு நோக்கி நடக்கையில் எதிரே மாட்டு வண்டி ஒன்று 'ஜல் ஜல்' லென்று சதங்கை ஒலி 'எழுப்பிக் கொண்டு வருவதைக் காண்கிறான். வண்டியில் ஜமாலும் முகத் திரையிட்டிருக்கும் அவன் மனைவியும் அமர்ந்திருக்கிறார்கள். அந்த ஸ்திரீ அந்நிய ஆடவனைக் கண்கொண்டு பாராது இயல்பாக வேறு புறம் திரும்பித் தலை குனிந்து உட்கார்ந்திருக்கிறாள்.

''எவ்வளவு தூரம்?'' என்று ஆவலுடன் வடிவேலு வினவுகிறான்.

''இரண்டாயிரம் மைல்!'' என்று பதில் கிடைத்ததும் மகிழ்ச்சிப் புன்னகை மலருகிறது அவன் முகத்தில். ''நான்தான் உனக்கு முன்னமேயே சொல்லி யிருக்கிறேனே வியாபாரம் படுத்து விட்ட தென்று'' என்கிறான் ஜமால். வண்டி நிற்கவில்லை; நகர்ந்து கொண்டே இருக்கிறது. தலைக்கு மேலே கரம் குவித்து அந்தத் திக்குக்கே பெரிய கும்பிடாகப் போடுகிறான் வடிவேலு.

எதிர் வீட்டில் பூட்டிக் கிடக்கும் முன் வாசலைப் பார்த்து ஆனந்தப் பட்டுக் கொண்டே சக்குவை அழைக்கிறான். பதிலில்லை.

அவன் புருவங்கள் நெரிகின்றன. நெஞ்சு வேதனையுடன் படபடக்கிறது. வழக்கம் போல ஆற்றங் கரைக்குக் குளிக்கப் போயிருப்பாள், வந்து விடுவாள் என்று சமாதானப் படுத்திக் கொள்கிறான். பெரிய பூட்டாகப் போட்டிருக்கும் எதிர் வீட்டை மீண்டும் ஒரு முறை பார்த்துத் தெம்பு பெறுகிறான்.

நிமிஷங்கள் ஓடுகின்றன. எதிர் வீட்டினுள்ளிருந்து யாரோ ஓரேயடியாகக் கூப்பாடு போடுகிறார்கள். கிராமத்தார் பலர் வீதியில் கூடி விடுகிறார்கள். பூட்டுஉடைக்கப்படுகிறது.

வடிவேலு விரைந்து சென்று அவர்களுக்கு உதவுகிறான். பூட்டு பிளக்கிறது. கதவைத் தள்ளித் திறந்து கொண்டு அவன் உள்ளே நுழைகிறான். அங்கு ஜமாலின் மனைவி அலங்கோலமாக விழுந்து கிடந்து புலம்பிக் கொண்டிருக்கிறாள். வடிவேலுவைக் கண்டதும் அவள் அவசரம் அவசரமாய்ச் சேலைத் தலைப்பால் தன் முகத்தை மறைத்துக் கொள்கிறாள். வடிவேலு ஸ்தம்பித்து நிற்கிறான். (தொடரும்)

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

## சிவப்பு லேபில்

இருமல், ஜலதோஷம், இன்ப்ளூவென்ஸா
மூச்சுக்குழல் தொற்றுநோய்கள்
காசநோய் ஆகியவற்றிற்குச் சிறந்தது.

**வெறும் மருந்து மட்டுமல்ல நம்பிக்கைக்குப் பாத்திரமான டானிக்கும் இதுவே.**




காலத்தால் தேறிக் கைவந்த மருத்துவ நிபுணர்களுக்கு இணங்கத் தயாரிக்கப்படும், நம்பிக்கைக்குரிய டானிக்காகிய வாட்டர்பரீஸ் காம்பவுண்ட், மருத்துவத் துறையினர்களால் பெரிதும் சிபார்சு செய்யப்படுகின்றது

**மருந்தாகப் பயன்படும்:** இருமலையும், ஜலதோஷங்களையும் சட்டென்று வன்மையாகக் கண்டித்து... நுரையீரல்களைத் தெளிவுறச் செய்யும் கபமறுக்கும் மருந்துகளாகிய கிரியோஸோட், குவயகால் ஆகிய இரண்டும் வாட்டர்பரீஸ் காம்பவுண்டிலே அடங்கியுள்ளன.

**டானிக்காகவும் உதவும்:** நோய்களை எதிர்க்கும் சக்தியை உடம்பு தானாகவே உண்டுபண்ணிக்கொள்ளுமாறு உதவுவதோடு மீளமீளத் திரும்பிவரும் தொற்றுநோய்களிலிருந்து திண்ணிய பாதுகாப்பை அளிக்கிறது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்; பசியைத் தூண்டி, ஜீரண சக்திக்குத் துணைபுரிந்து, இரத்தபுஷ்டியளித்து, இழக்கநேர்ந்த தாதுப் பொருள்களுக்கு ஈடுசெய்கிறது.

வார்னர்-லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. வில் இணைக்கப்பெற்றது)

WCRY-I-TAM



# இந்தியா.

சனிக்கிழமைதோறும் வெளியாகும்.



1. பாரதியார் நடத்திய 'இந்தியா' பத்திரிகையின் முதல் பக்கம்
2. அமரகவி பாரதியார்
3. பாரதியாரின் குடும்பமும் அவர் நண்பர்களும்
4. பாரதியார் அமரரான திருவல்லிக்கேணி இல்லம்





## முயன்றால் முடியாததுண்டோ ?

✿ ரமணி பொருட்காட்சிக்குச் சென்றான். அங்கு ஓர் அழகான பொம்மையைக் கண்டான். அதைத் தன் தங்கை உஷாவுக்கு வாங்கித்தர நினைத்தான். கடைக்காரரிடம் அதன் விலையைக் கேட்டான். கடைக்காரன் ரமணியைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே, ''உன்னிடம் எவ்வளவு இருக்கிறது? அதைச் சொல். பிறகு நான் பொம்மையின் விலையைச் சொல்லுகிறேன்'' என்றான். ரமணி தன் பையில் கையை விட்டுக் காசை எடுத்துக் கடைக்காரன் முன் நீட்டினான். உடனே கடைக்காரன், ''இதைப் போல் ஒரு பங்கும், இதில் பாதியும் இரண்டரை நயாபைசாவும் சேர்த்தால் எவ்வளவு?'' என்று கேட்டான். கணக்கில் புலியான ரமணி டக்கென்று ''இருபது நயாபைசா'' என்றான். ''அதுதான் இதன் விலை'' என்றான் கடைக்காரன். அப்படியானால் ரமணியின் உள்ளங் கையில் இருந்த காசு எவ்வளவு?

(விடை: 7 ந. பை)

✿ ஒரு தோட்டக்காரனிடம் குப்பன், கப்பன், ராமன் என்ற மூன்று பையன்கள் வேலை செய்தார்கள். மாமரத்திலிருந்து மாம்பழங்களைப் பறித்துக் கொண்டு வந்து ஓர் இடத்தில் குவித்தார்கள். தோட்டக்காரர் அவர்களுக்கு வேறு சில வேலைகளையும் கொடுத்தார். போகும் போது அவர்கள் பறித்துச் சேகரித்த மாம்பழங்களைச் சமமாகப் பங்கிட்டுக் கொண்டு போகலாம் என்று சொன்னார். வேலை முடிந்து முதலில் வந்த குப்பன் அங்கிருந்த மாம்பழங்களில் மூன்றில் ஒரு பாகத்தை, நம்முடையது தானே என்று உரிமையோடு எடுத்து ஒளித்துவைத்து விட்டு ஒரு பழத்தை எடுத்துக் கடித்துச் சுவைத்தபடி போய் விட்டான். அடுத்து வந்த கப்பன் அங்கிருந்த பழங்களைப் பார்த்ததும் குப்பனைப் போலவே மூன்றில் ஒரு பாகத்தை எடுத்து ஒளித்து வைத்து விட்டு ஒரு பழத்தைச் சாப்பாட்டுக்கு எடுத்துக் கொண்டு வெளியேறினான். கடைசியாக வந்த ராமனும் மீதமிருந்ததில் மூன்றில் ஒரு பகுதியை எடுத்து முன்னதாகவே மூட்டைக்குள் பத்திரப்படுத்தி விட்டு ஒரு பழத்தைச் சுவைத்து விட்டு முதலாளியின் வருகைக்காகக் காத்திருந்தான். முதலாளி வந்தார். அங்கிருந்த பதின்மூன்று பழங்களை ஆளுக்கு நான்காகக் கொடுத்து விட்டு மீதி இருந்த ஒரு பழத்தைத் தாம் எடுத்துக் கொண்டு வீட்டுக்குக் கிளம்பினார். மூவரும் பறித்த பழங்கள் எத்தனை?

(விடை: ஐம்பத்தி ஒன்று. குப்பன் 17 + 1 + 4 = 22 கப்பன் 11 + 1 + 4 = 16 ராமன் 7 + 1 + 4 = 12 முதலாளிக்கு ஒன்று. ஆகமொத்தம் 51)

✿ ஒருவர் தம் சொத்தின் மதிப்பில் 15 சத விகிதத்தை யுத்த நிதிக்காகக் கொடுத்தார். அவர் மனைவியோ இரண்டாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள தங்க நகைகளாகவே கொடுத்தாள். நாட்டின் பாதுகாப்புக்கு உதவியது போதாது போல் இருந்தது அவருக்கு. ஆகவே மீதமிருந்த தம் சொத்தில் 10 சதவிகிதத்தை மறுபடி பாதுகாப்பு நிதிக்குக் கொடுத்தார். அது ரூ. 650 என்றால் அவருடைய சொத்தின் ஆரம்ப மதிப்பென்ன?

(விடை: 10,000 ரூபாய்கள். 10 சதவிகிதம் 650 ரூபாயானால் மீதமுள்ள சொத்தின் மதிப்பு 6500. அவர் மனைவி தங்க நகைகளைக் கொடுக்குமுன் அவர் சொத்து 6500+2000-8500. அதாவது 15 சதவிகிதம் கொடுத்தபின் அவர் சொத்தின் மதிப்பு அது. அப்படியானால் முழுச் சொத்தின் மதிப்பு 8500+1500-10000.)

### உங்கள் ஆல்பத்துக்கு

ஸ்பெயின் தேசத்தைத் தாயகமாகக் கொண்டவர்கள் ஸ்பானிஷ்காரர்கள். உணர்ச்சியூட்டும் நடனமாடுவதில் ஸ்பானிஷ்காரர்கள் பேர்போனவர்கள். கால்களும் கைகளில் உள்ள ஜாலரா போன்ற ஒரு வாத்தியமும் தாளமிட அற்புதமாக ஆணும் பெண்ணும் நடனமாடுவார்கள். அத்தகைய ஒரு நடனத்தையே மேலே காணுகிறீர்கள்.

## வளையல் நல்ல வளையல்!

இன்பவண்ணன்

வாங்க வாங்க செட்டியார்!
வளையல் காரச் செட்டியார்!
வாங்கும் விலையைச் சொல்லுவீர்;
வளையல் அடுக்கிச் செல்லுவீர்!

பொன்ன வாரம் போட்டவை,
பொட்டுப் பொட்'டென் றுடைந்தது;
இன்று நல்ல வளையல்கள்,
எடுத்துப் போட்டுப் போமையா!

சின்னச் சின்ன வளையல்கள்;
சிலு சிலு'க்கும் வளையல்கள்;
கண்ணைப் பறிக்கும் வளையல்கள்;
கண்ணாடிப் பொன் வளையல்கள்!

தங்க வளையல் கையிலே,
சங்கு வளையல் போடுவீர்!
சிங்கு சிங்'கென் றொலிக்கவே
சிறந்த வளையல் போடுவீர்!

## இளைய பாரதம்

ரமணியன்

'டப்டப்' 'டப்டப்' நாரையார்
சிப்பாய் போலே நடக்கின்றார்.
'டுப்டுப்' 'டுப்டுப்' துப்பாக்கி
தூக்கிக் கொண்டே ஓடுகிறார்!

காண்டா மிருகத் தளபதியார்
கவசம் மாட்டிக் கொள்ளுகிறார்.
நீண்ட பெரிய பீரங்கி
நீட்டிக் கொண்டே போகின்றார்!

நெட்டைக் காலர் ஒட்டகனார்
நிமிர்ந்து நடந்தே திரிகின்றார்.
பட்டா ளத்துச் சேனைகளைப்
பாது காவல் புரிகின்றார்!

பறவை எல்லாம் 'ஹெலிகாப்டர்'
பண்டம் ஏற்றிச் சென்றனவே!
இரவும் பகலும் பாராமல்
இமயம் நோக்கிச் சென்றிடுமே!

காட்டு நண்பர் எல்லாரும்
காட்டு கின்றார் வீரத்தை!
நாட்டைக் காக்க இப்போதே
நாளும் போனால் என்னம்மா?

## பூ

பி. வி. கிரி

சின்னச் சின்னப் பூவாம்
சிரிக்கும் நல்ல பூவாம்
கண்ணைக் கவரும் பூவாம்
காட்டு மல்லிப் பூவாம்.

பூசை செய்ய உதவிடும்
புத்தம் புதிய பூவாம்
ஆசை யாகக் கழுத்திலே
அணிந்து கொள்ளும் பூவாம்.

தலையில் சூட்டிக் கொள்ளலாம்
தன்னை அழகுப் படுத்தலாம்
மலைமேலே கொண்டு வந்த
மணம் வீசும் பூவாம்.

வெள்ளை சிவப்புப் பூவாம்
நல்ல ரோஜாப் பூவாம்
கொள்ளை இன்பம் தந்திடும்
கொடியில் பறித்த பூவாம்!








## முழுமதி!

விண்ணிலே ஓடிவரும் முழுமதியே — பொழுது
விடிந்ததும் போவதெங்கே முழுமதியே!
பண்ணிலே உனேயமைத்து முழுமதியே — பலர்
பாடுவர் என்றேசென்றும் முழுமதியே! (விண்)

அன்னைமார் பிள்ளைகட்கு முழுமதியே — உன்னை
அழைத்து அமுதளிப்பார் முழுமதியே!
கன்னத்தில் காணு(ம்)மறு முழுமதியே — போல்
களங்கம்நீ கொண்டதேனோ முழுமதியே! (விண்)

எண்ணத்தில் நல்லபல கதைகளையே — தந்து
இன்பத்தை ஊட்டுகின்றும் முழுமதியே!
தன்னந் தனிமையிலே கூடாதென்று — உனை
தாரைகள் சூழ்ந்ததேனோ முழுமதியே! (விண்)

மாதம்ஒரு முறைதான் முழுமதியே — நீ
மலர்முகம் காட்டுகின்றும் முழுமதியே!
சாதம், கறி சமைத்து முழுமதியே — நிலாச்சோறு
சாப்பிட வேண்டுமென்றோ முழுமதியே! (விண்)

— மணவழகன்



## யார் அடித்தார்!

பந்து பந்து என்று சொல்லிப்
பாவம் குழந்தை பாடுது
முந்தி முந்தித் தாவிப் பிடிக்க
முயற்சி செய்து ஓடுது.

அந்த உயரம் பந்தை அடித்த
ஆளைப் பாப்பா தேடுது
எந்த மனிதர் அடித்தார் என்று
என்னை வந்து கேட்குது.

அந்த வானில் பந்தை அடித்த
ஆளைக் கொஞ்சம் காட்டிடு
பந்தை அடித்த ஆளை ஒருகை
பார்க்கி றேனே என்றது.

ஆண்ட வன்தான் அடித்த பந்து
அந்த நிலவு என்றதும்
ஆண்ட வனு! அவரை எதிர்க்க
யாரால் முடியும் என்றதே!

— செல்ல. கணபதி

# இலவசம்

## கவர்ச்சி மிகுந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

தேவைக்கு ஏற்பத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். மன மகிழ்வு பெறலாம்.







ஓ. கே. தயாரிப்புகளின் பரிசுக் கூப்பன்களைச் சேகரியுங்கள்.











★ ஓ. கே. வனஸ்பதி ★ ஓ. கே. டபிள் ரிஃபைண்ட் ஆயில் ★ கோல்டன் ஸாலட் ஆயில் ★ ஓ. கே. சந்தன சோப் ★ ஓ. கே. ஓரியண்டல் ரோஸ் சோப் ★ ஓ. கே. கிரீம் சோப் ★ மியோகே சோப் ★ சோப் சிப்ஸ்

நீங்கள் வாங்கும் ஒவ்வொரு ஓ. கே. தயாரிப்புகளிலும் உள்ள பரிசுக் கூப்பன்களைச் சேகரியுங்கள். அவற்றிற்குப் பதிலாக, உங்கள் அருகிலுள்ள ஓ. கே. வியாபாரியிடமிருந்து, நீங்கள் விரும்பும் அளவிலும், வடிவிலும் கவர்ச்சி மிகுந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்களைப் பெறுங்கள்.

இந்த விசேஷமான பரிசுத் திட்டம் பற்றிய இதர விவரங்களை அறிய உங்கள ஓ. கே. வியாபாரியிடமிருந்து, படங்களோடு கூடிய 'ஃபோல்டரை' (folder) வாங்கிப் பாருங்கள்.







தயாரிப்பாளர்கள் :

**தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், மதராஸ்-1**

சென்னை, மைசூர், கேரள & ஆந்திர ராஜ்யங்களிலுள்ளவர்கள் மாத்திரம் இந்தப் பரிசுத் திட்டத்தில் கலந்துகொள்ளலாம்



# நந்தவனம்

சோமு

## 49. விட்டகுறை!

சித்திரமடலைப் பற்றிய பேச்சு வந்ததும் கல்லூரி மாணவி கண் கலங்கி நிற்பானேன் என்று யோசித்தான் சிவகாமிநாதன்! சிந்தனை செய்து கொண்டே அந்தப் பெண்ணின் அகன்ற விழிகளையும், அவற்றிலே தவழ்ந்த துயர நினைவுகளின் அலைகளையும், கூர்ந்து பார்த்தான் ஓவிய இளைஞன்!

மாணவி அதற்கு மேல் என்ன சொல்லப் போகிறாள் என்று மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்து நின்ற சிவகாமிநாதன் ஏமாற்றம் அடைந்தான். ஏனென்றால் அவளோடு வந்திருந்த மற்ற மாணவிகளிலே வயதிற் பெரியவளான ஒரு மாணவி, இந்தச் சந்தர்ப்பத்தில் பேச்சை இடைமறித்தாள்.



''மாலதி! நாம் இங்கே இப்படிச் சித்திர ஆராய்ச்சியில் ஈடுபட்டுக் கொண்டிருந்தால் எப்படி? ரமணம்மா நம்மைத் தேடிக் கொண்டு இங்கேயே வந்து விடுவார்கள்!''

இவ்வாறு குறுக்கிட்டாள் அந்தப் பெரிய மாணவி.

''ரமணம்மாவா? அவர்கள் யார்?'' என்று கேட்டான் சிவகாமிநாதன், அவள் குறுக்கிட்டுப் பேசியதை விரும்பாதவனாக!

''எங்களுடைய வார்டன்! நேரம் ஆகிறதே என்று அவர் கவலைப்படுவார்!'' என்றாள் அதே மாணவி! மாலதியோ மௌனமாக நின்றாள்!

''உங்கள் ' வார்டனுக்குச் சித்திரங்கள் என்றால் அத்தனை பொறுமைக் குறைச்சலா?'' என்று வியப்புடன் கேட்டான் சிவகாமிநாதன்.



''இல்லை! அப்படி இல்லை. இந்தப் பனிமலை ஓவியங்களை அவர் பல தடவை பார்த்து விட்டார். அதனால்தான் எங்களோடு அவர் வரவில்லை. வெளியே இருக்கிறார். தாங்கள் இங்கே வரும் போதே எச்சரிக்கை செய்தார், மாலதி இங்கேயே நாள் முழுதும் இருந்து விடப் போகிறாள் என்று!''

சிவகாமிநாதனுடைய குழம்பிய முகத் தோற்றத்தைக் கண்டு மாலதி பேசினாள்:

''ஓவியக் கலைஞரே! எங்கள் வார்டனுக்கு என்னிடம் அளவுகடந்த பிரியம்! எங்கே போனாலும் என்னை ஒரு சிறு குழந்தையைப் போல் கண்காணிப்பார்! இவள் சொல்லுவது போல இன்னும் கொஞ்ச நேரத்தில் எங்களைத் தேடிக் கொண்டு இங்கே வந்து விடுவார்!''

இந்த வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டே அங்கிருந்து நகர முனைந்தாள் மாலதி.

தன்னுடைய இதயத்திலிருந்து ஒரு பகுதி பிரிந்து போவது போல் இருந்தது சிவகாமிநாதனுக்கு! அவனுக்கு ஒரு புதிய அனுபவம் அது.

''நாங்கள் மேரி அரசியார் கல்லூரி மாணவிகள். நீங்கள் சென்னைக்கு

வந்தால் எங்கள் விடுதிக்கு அவசியம் வாருங்களேன். என்னிடமுள்ள சில சித்திர மடல்களைப் பார்க்கலாம்!'' என்றாள், மாலதி, கைகூப்பி வணங்கி அவனிடம் விடைபெற்றுக்கொண்டே!

கையில் பிடித்திருந்த இறகோடு மாலதிக்கு வணக்கம் கூறி விடை கொடுத்தான் சிவகாமிநாதன். அந்த மாணவிகள் அனைவரும் அங்கிருந்து புறப்பட்டார்கள். சிவகாமிநாதனுடைய உள்ளத்திலே மாலதி என்ற சித்திரம், பலப்பல சிந்தனை வண்ணங்களோடு சுவர் ஓவியத்தைப் போன்ற ஓர் உணர்ச்சி ஓவியமாகப் பதிந்து விட்டது!

இந்த நிகழ்ச்சி நடந்த மறுநாள் சிவகாமிநாதன் தனது ஓவியப் பணியிலே இன்னும் தீவிரமாக ஈடுபட்டான். கல்கத்தா ஓவியப் பள்ளியின் தலைமை ஆசிரியருக்காக இந்தச் சுவர் ஓவியங்களைக் காகிதத்திலே பெயர்த்து எழுதுகிறோம் என்ற நினைவு மாறி, இப்போது ஒரு புதிய நினைவு உருவாயிற்று! சென்னைக்குச் சென்றதும், இந்தச் சித்திர மடலை மாலதியிடம் காண்பிக்க வேண்டும் என்று ஓர் ஆசை! சித்திர



மடலிலே இத்தனை ஈடுபாடும் ஆர்வமும் நிரம்பி நிற்கிற அந்தப் பூங்கொடியிடம், பனைமலை ஓவியங்களைச் சித்திரமடலாகக் காட்டினால், எத்தனை மகிழ்ச்சி அடைவாள் அவள், என்று எண்ண எண்ணச் சிவகாமிநாதனுக்கு ஒரு புதிய ஊக்கம் பிறந்தது. குழம்பிய மனத்திலே இப்போது ஒரு வேகம் பாய்ந்தது. இந்தச் சித்திரப் பணியை மேற்கொண்டதன் இலட்சியமே பூர்த்தியாகி விட்டது போன்ற ஒரு மனநிறைவு இப்போது உண்டாயிற்று! அந்த நிறைவிலே கற்பனையானது பேராற்றலோடு இயங்கத் தொடங்கியது!

ஒரு வாரத்தில் சிவகாமிநாதன் பனைமலைச் சித்திரங்களையெல்லாம் எழுதி முடித்தான். பூசாரியிடம் விடைபெறும்போது அவர் சாதாரணமாகத்தான் கேட்டார், ''தம்பியை மறுபடியும் எப்போது பார்க்கலாம்?'' என்று.

"இனிமேல் அடிக்கடி பார்க்கலாம்!" என்றான் சிவகாமிநாதன்.

"தம்பி கல்கத்தாவில் இருப்பதாகச் சொன்னீர்களே!"

"ஆமாம். இனிமேல் தமிழ் நாட்டுக்கே வந்து விடலாம் என்று ஒரு எண்ணம்!"

இப்படிச் சொல்லும்போது கற்பனையாகச் சொல்லுவது போலப் படவில்லை சிவகாமிநாதனுக்கு. நடக்கப் போவதை அறிவிப்பது போலவே தோன்றியது அவனுக்கு. இதைக் கூர்ந்து கவனித்தார் பூசாரி. உடனே அவருடைய உள் மனமானது சிந்தனையுலகிலே எதையோ ஆராய்ந்தது.

"தம்பியை அடிக்கடி பார்க்க முடிந்தால் எங்களுக்கு மிகவும் திருப்தியாக இருக்கும். தம்பியைத் தனியாகப் பார்ப்பதைவிடச் சமேதராகப் பார்த்தால் இன்னும் அதிகத் திருப்தியாக இருக்கும்" என்றார் பூசாரி.

இந்தக் கிழவரிடம் இத்தனை குறும்பு இருக்கிறதா என்று யோசித்துக் கொண்டே புன்முறுவல் செய்தான் சிவகாமிநாதன்.

"வேடிக்கைக்குச் சொல்லவில்லை, தம்பி! இது வரை இந்தப் பூசாரியின் வாக்குப் பொய்த்ததில்லை. எனக்குக் கொஞ்சம் சோதிடம் வரும்!"

"சோதிடமா?"

"ஆமாம். சோதிடம், இரேகை சாஸ்திரம், முகக் குறி இலக்கணம்—"

"முகக் குறி இலக்கணமா?" என்று ஆவலோடு கேட்டான் சிவகாமிநாதன்.

"ஆமாம். முகத்தைப் பார்த்து நீங்கள் சித்திரம் எழுதுகிறீர்கள் அல்லவா, அது போல! நீங்கள் எழுதுவது வர்ணச் சித்திரம். நாங்கள் எழுதுவது வாழ்க்கைச் சித்திரம்" என்றார் பூசாரி.

"ஐயா! இந்தப் பத்து நாட்களும் எனக்கு மிகுந்த பரிவோடு உபசாரம் எல்லாம் செய்து, விருந்து மரியாதை நடத்தினீர்கள். உங்களிடமிருந்து பிரியும்போது பணிவுக் குறைவாகப் பேசக் கூடாது. ஆனாலும் சொல்லுகிறேன், எனக்குச் சோதிடம், கை ரேகை, முகக் குறி இலக்கணம் இவற்றில் எல்லாம் நம்பிக்கையே கிடையாது!" என்றான் அவன்.

பூசாரி சிரித்தார். சிரித்துக் கொண்டே மறுமொழி சொன்னார்.

"தம்பி! சோதிடக் கலைகளிலே நம்பிக்கை இல்லாதவர்களில் மூன்று விதம். அரைகுறைச் சோதிடர்களைக் கண்டு அந்த அனுபவத்தினால் நம்பிக்கை இழந்தவர்கள் சிலர். இது ஒரு விதம்! வேறு சிலர் இருக்கிறார்கள். எதிர்காலத்தைத் தெரிந்து கொள்ளவே பயப்படுகிறவர்கள்! இவர்கள் இந்தக் கலையை ஆராய்ந்து பார்க்காமலே இதில் வெறுப்புக் கொள்பவர்கள்! மூன்றாவது விதம் ஒன்று இருக்கிறது. அது தான் மிகவும் பொல்லாத ரகம்!"

"அது என்ன?"

"மனசுக்குள் நம்பிக்கை இருக்கும். ஆனால் அந்த நம்பிக்கையை வெளியிட்டுச் சொல்வதிலே ஒரு வெட்கம்! கௌரவக் குறைவு என்ற எண்ணம். இப்படிப்பட்டவர்கள் பலர் வெளியே யாருக்கும் தெரியாமல் இரகசியமாகச் சோதிடம் பார்ப்பார்கள்! இப்படிப்பட்டவர்கள் பலர் என்னிடம் வந்திருக்கிறார்கள்!" என்று சொல்லி மீண்டும் சிரித்தார் பூசாரி.

"நாலாவது விதம் ஒன்று இருக்கிறது. அதை விட்டு விட்டீர்களே!" என்றான் சிவகாமிநாதன்.




# ஹ்ரயூலெட்ஸ் மிக்சர்

## அஜீரணத்தை விரைவில் அகற்றுகிறது

கட்டிப்போட்டாற்போல், ஒரே இடத்தில் அமர்ந்தவாறே உங்கள் அலுவல்களைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. ஏனெனில் உங்கள் வேலை அப்படியானது. இக்காரணத்தினால் உங்களைப் போன்றவர்கள் அடிக்கடி அஜீரணத்தினால் அவஸ்தைப்பட நேரிடுகிறது. ஆனால் நீங்கள் அவ்வாறு கஷ்டப்படத் தேவையில்லை. ஹ்ரயூலெட்ஸ் மிக்சர் வயிற்று உபாதையை விரைவில் போக்கி, நிரந்தரமாக குணமளிக்கிறது; வலியுண்டாக்கும் அமிலங்களை அகற்றி, ஜீரண கோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற்கேற்ப பாதுகாப்பளிக்கிறது.

ஹ்ரயூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்றுக் கோளாறுகளுக்கும் கூட உத்தமமானது. வயிற்றுப் போக்குக்கு அபினி சேர்ந்த ஹ்ரயூலெட்ஸ் மிக்சர் குணமளிக்கும்.




**ஹ்ரயூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்கு சிறந்தது**

C. J. ஹ்ரயூலெட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
86/A, கைனியப்ப நாயக் தெரு, மதறாஸ்-3

JWT/CJH/1929

''அப்படியா? நாலாவது விதமா?''

''ஆமாம். சோதிடத்தின் பொதுவான உண்மையில் நம்பிக்கை உண்டு. ஆனால் அளவுக்கு மீறி ஆனைக்கும் குதிரைக்கும், பூனைக்குட்டிக்கும் ஜாதகம் பார்க்கிற அளவுக்கு இந்தக் கலையைக் கொண்டு போகின்றார்களே என்று இதில் ஒரு வெறுப்பும் அவநம்பிக்கையும் அடைகிற சிலர் இருக்கிறார்கள். எங்கள் ஆசிரியரான கல்கத்தா ஓவியப் பேராசிரியர் இந்த ரகத்தைச் சேர்ந்தவர்!'' என்றான் சிவகாமிநாதன்.

''ஒரு கலையின் விரிவும், பரப்பும், நுட்பமும் அவரவர் திறமையைப் பொறுத்தது. சிலர் மனசில் தோன்றியதை வரைகிறார்கள். சிலர் பார்த்ததைப் பார்த்தபடி வரைகிறார்கள். ஒரு பெண்மணி அணிந்திருந்த மெட்டியை வைத்துக் கொண்டு அவளுடைய உருவம் முழுவதையும் வரைந்து முடித்த ஓவியர்களும் இருந்திருக்கிறார்கள்! இதெல்லாம் அந்தந்தக் கலைஞர்களின் தனிப்பட்ட திறமையைப் பொறுத்தது. எங்கள் சோதிடக் கலையிலும் அப்படித்தான்!'' என்றார் பூசாரி.

சிவகாமிநாதன் பூசாரியிடம் வாதாட விரும்பவில்லை. ஊருக்குப் புறப்படுகிற நேரத்திலே அவரோடு ஒரு தர்க்கம் எதற்கு என்று எண்ணினான். எனவே அவரைத் திருப்திப்படுத்துவதற்காகப் புன்முறுவலோடு ஒரு கேள்வி கேட்டான்.

''சரி; அப்படியானால் எனக்கு ஒரு குறி சொல்லுகிறீர்களா?''

''நீங்கள் கேட்காமலேயே நான் சொல்லி விட்டேனே! அடுத்த முறை நீங்கள் பவானிமலைக்கு வரும் போது தனியாக வரமாட்டீர்கள்! உங்கள் இருவரையும் பூரண கும்பத்தோடு வரவேற்கப் போகிறேன் நான்!''

''என்ன, என்ன?'' என்று ஆவலோடு கேட்டான் சிவகாமிநாதன். வெறும் ஆவல் மட்டுமில்லை அது. சோதிடம் வேறு எந்த விஷயத்தில் பொய்த்துப் போனாலும், இந்த ஒரு விஷயத்தில் நிச்சயம் உண்மையாகி நடக்க வேண்டும் என்பது போன்ற ஓர் ஆர்வமும் இருந்தது அந்த ஆவலிலே!

''தம்பி! 'விட்ட குறை வந்து தொட்டாச்சு' என்று சித்தன் பாடினான் அல்லவா? மனித வாழ்க்கையில் அப்படிப்பட்ட ஒரு தொடர்பு உண்டு. ஐந்து நிமிஷத்தில் ஐந்நூறு ஜன்மங்களின் தொடர்பு வந்து ஒட்டிக் கொள்ளும். இதெல்லாம் நம்முடைய புண்ணிய நாட்டு மகான்கள் கண்ட இரகசியம். இதற்கு மேல் உங்களிடம் அதிகம் பேசக் கூடாது. வாழ்விலே பல சிக்கல்கள் உண்டு. ஆனாலும் வாழ்த்தி வழியனுப்புகிறேன்!'' என்று சொல்லித் திருநீறு கொடுத்தார் பூசாரி.

மரங்களுக்குச் சூரிய கிரணங்களைப் போல் சிறுவர்களுக்குச் சந்தோஷம் அவசியம். களிப்பின்றிக் குழந்தை வளர முடியாது. வெறும் எண்ணும் எழுத்தும் படிப்பும் போதிப்பது சூரிய வெளிச்சமில்லாத மரத்துக்கு எருப் போடுவது போலாகும்.

—ராஜாஜி

சென்னைக்குத் திரும்பிய சிவகாமிநாதன் சித்திரமடலோடு சென்று மாலதியைக் கண்டான் என்பதைச் சொல்ல வேண்டியதே இல்லை! உண்மையில் பூசாரி அப்படி ஒரு சோதிடம் சொல்லியிருக்காவிட்டாலும்கூட நிச்சயம் சிவகாமிநாதன் மாலதியைச் சந்தித்திருப்பான். இப்போதோ இரட்டிப்பு உறுதியோடு சென்றான். என்றாலும் பூசாரி குறிப்பிட்ட 'சிக்கல்கள்' என்ற சொல் இடையிடையே மனத்தை உறுத்தியது.

இந்நிலையில் மாலதியும், சிவகாமிநாதனும் அடிக்கடி சந்தித்தார்கள்: வீட்டிலே சந்தித்தார்கள். வீட்டுக்கு வெளியேயும் சந்தித்தார்கள். சென்னைக் கடற்கரையிலே நடந்தார்கள்: மணற்பரப்பிலே அமர்ந்தார்கள். சாந்தோம் நெடும் பாதையிலே உலவினார்கள். மேரி அரசியார் கல்லூரிக்கு அருகிலே மட்டுமல்லாமல், அடையாறு வட்டாரத்தில் கடலும் ஆறுமாகக் கைகோத்து நின்ற மணல் எல்லையிலே சிமெண்ட் பெஞ்சுகளில் உட்கார்ந்து அவர்கள் ஓவிய ஆராய்ச்சி நடத்தினார்கள்!

சிங்கம்புத்தூர் ஜமீந்தார் அனவரத புவனபதி, தமது சென்னை மாளிகையை ஓவியப் பள்ளிக்காக நன்கொடையாக வழங்கி விட்டார் அல்லவா? அந்த மாளிகைக்குப் பின்னாலிருந்த கடலின் மணற் பரப்பிலே சிமெண்ட் பெஞ்சிலிருந்து ஒருநாள் நீண்ட நேரம் உரையாடிக் கொண்டிருந்தார்கள் இருவரும்!

''எனக்கு ஓய்வு கிடைக்கும்போதெல்லாம், இந்தச் சித்திரப் பள்ளிக்கூடத்துக்கு வந்து, கொஞ்சம் ஓவியக் கலை படிக்க வேண்டும் எனப் பல தடவை நான் எண்ணியதுண்டு. முடியாமலே போய் விட்டது: ஆனால் இனி அதற்கு அவசியம் இல்லை'' என்றாள் மாலதி.

எதைச் செய்தாலும் அந்தக் காரியத்தைச் செய்வதிலிருந்தே இன்பத்தை அடைவது எப்படி என்பதை நாம் கற்க வேண்டும். உணவைச் சமைக்கும் தாயார் அதைச் சாப்பிடும் குழந்தைகளை விடச் சமையல் செய்வதில் அதிக சந்தோஷம் பெறுகிறாள் அல்லவா?

-ராஜாஜி

''ஏன், ஏன் இனிமேல் அவசியமில்லை?'' என்று வியப்புடன் கேட்டான் சிவகாமிநாதன்.

''இப்போதுதான் ஓவிய ஆசிரியர் கிடைத்து விட்டாரே! இனிமேல் இந்தப் பள்ளிக்கூடத்துக்குப் போய்த்தான் படிக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை அல்லவா?'' என்று கேட்டாள் மாலதி.

''ஓ! அதற்குச் சொல்கிறாயா? அது சரி. ஆனால் இதுவரை ஏன் இந்தப் பள்ளிக்கூடத்தில் படிக்க முடியாமல் போயிற்று?'

''இங்குள்ள ஆசிரியர்கள் யாருக்குமே அத்தனை மனத்திடம் இல்லை. எனக்குச் சித்திரம் சொல்லித் தருவதற்கு வேண்டிய உறுதி யாரிடமும் இல்லை!'' என்று சொல்லிச் சிரித்தாள் மாலதி. அந்தச் சிரிப்பிலே ஒரு துயர மின்னல் துவண்டது.

''மாலதி! என்ன சொல்லுகிறாய் நீ? உனக்குச் சித்திரம் சொல்லிக் கொடுப்பதற்கு ஏன் துணிவு வேண்டும்? அதற்கு ஏன் மனத் திடம் வேண்டும்? உன்னைப் போன்ற ஒரு மாணவிக்குக் கற்பிப்பது மிகவும் எளிதாயிற்றே. சித்திரப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து கற்காமலேயே, சித்திரக் கலையில் இத்தனை நுட்பமான ஆராய்ச்சியும் ஆர்வமும் உனக்கு இருக்கும்போது, ஆசிரியர்கள் ஏன் பயப்பட வேண்டும்?'' என்று கேட்டான் சிவகாமிநாதன்.

அவர்கள் இருவரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த அதே பெஞ்சின் பின்னணியிலே, ஒரு சோக நிகழ்ச்சி புகை போன்று கவிந்திருந்தது என்பது அவர்களுக்குத் தெரியுமா? ஒரு காலத்தில், அதே பெஞ்சில் உட்கார்ந்து கொண்டுதான் முதிய ஓவியரும் அனவரதபுவனபதியும் ஒரு முக்கியமான தீர்மானத்துக்கு வந்தார்கள் என்பதும், அதன் விளைவாகத்தான் வில்வநாதனுடைய வாழ்க்கையிலே பல எதிர்பாராத சம்பவங்கள் நிகழ்ந்தன என்பதும், மாலதிக்கோ சிவகாமிநாதனுக்கோ தெரியுமா? அவர்களுக்குத் தெரியுமோ தெரியாதோ, அந்த நீல வானமும் நெடுங்கடலும் அந்த நிகழ்ச்சிகளுக்குச் சாட்சியாக நின்றன!

ஆம்; செண்பகநாயகி கோவிலிலே உள்ள சுவர் ஓவியங்களைப் புதுப்பிக்கும் புனிதப் பணியிலே, தமக்கு உதவ வேண்டும் என்று ஜமீந்தார் வேண்டுகோள் செய்தாரே, அந்த நிகழ்ச்சி அங்குதான் நடந்தது. ஓவியக் கிழவர் அந்த இடத்தில் உட்கார்ந்துதான் வாக்குறுதி கொடுத்தார். அதே பெஞ்சில் அமர்ந்து கொண்டு பேசும்போதுதான், தமது வாழ்வின் இரகசியத்தை வெளியிட முடியாமல் குமைந்தார் அந்தக் கிழவர்! பிறகு அந்த இடத்திலேதான் அவருடைய முதிய உடல் சரிந்தது. இந்த நிகழ்ச்சிகளின் சோகம் அந்த இடத்தைப் பனிப் படலம் போன்று போர்த்தி நின்றது!

''மாலதி! நான் கேட்ட கேள்விக்கு நீ பதில் சொல்லவில்லையே. ஏன் யோசிக்கிறாய்?'' என்று கேட்டான் சிவகாமிநாதன்.

''எனக்கே தெரியவில்லை, நான் என்ன யோசிக்கிறேன் என்று! ஏன் தயங்குகிறேன் என்று எனக்கே சொல்லத் தெரியவில்லை. நீங்கள் நம்பத் தயாராக இருந்தால் ஒன்று சொல்லட்டுமா ...?''

''மாலதி! என்ன கேள்வி இது? நீ சொல்லுகிற செய்தி எதையும் நான் உதாசீனம் செய்வேனா? உன்னுடைய வார்த்தையிலும்கூட எனக்கு அவநம்பிக்கை உண்டாகுமா?''

''அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை நான். ஏதோ ஒரு விசித்திரமான அனுபவம். அதை வெளியிட்டுச் சொல்லவே வெட்கமாக இருக்கிறது. வேறு யாராவது என்னிடம் அதைச் சொன்னால் நானே நம்ப மாட்டேன். அத்தகைய ஒரு விசித்திர அனுபவம் எனக்கு இப்போது உண்டாகிறது. அதனால்தான் அப்படிச் சொன்னேன்!''

''என்ன அது! சொல்லேன். நான் அவநம்பிக்கை கொள்ள மாட்டேன். உறுதியாக நம்பு. ஏனென்றால்—''

''என்ன? என்ன?'' என்றாள் மாலதி.

''ஏனென்றால் எனக்கும் ஒரு விசித்திரமான அனுபவம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. அதனால்தான் சொல்லுகிறேன்!'' என்றான் சிவகாமிநாதன்.

''இந்தப் பெஞ்சில் வந்து உட்கார்ந்து பேச ஆரம்பித்த விநாடியிலிருந்து, என்னையும் மீறி என் உடம்பெல்லாம் ஒரு மின்சாரம் ஓடுகிறது. இந்தக் கடல் அலைகளின் குளிர்ச்சியும் இந்தத் தண்மையான காற்றும் சேர்ந்து

இப்படி ஒரு நடுக்கத்தைக் கொடுக்கின்றன என்று நினைக்கிறேன். அல்லது நீங்கள் என்னோடு இருந்து பேசுவதால் ஏற்படும் பரவசமாகவும் இருக்கலாம் அது! என்னவென்று சொல்ல இயலவில்லை!'' என்றாள் மாலதி.

''என்ன ஆச்சரியம், மாலதி, எனக்கும் அதே மாதிரி ஒரு நடுக்கம். ஆனால் அதை நடுக்கம் என்று சொல்ல முடியவில்லை. வெறும் குளிர்ச்சியினால் ஏற்படுகிற உடலின் ஆட்டம் என்றால் கையும் காலும் நடுங்க வேண்டுமே. உடம்பெல்லாம் உதறல் எடுக்குமே. இது அப்படியில்லை. உள்ளத்தின் பரவசம் என்றால் அது இந்த ஒரு இடத்திலே மட்டுந்தான் ஏற்பட வேண்டுமா? இல்லை. இதற்கு வேறு ஏதாவது ஒரு காரணம் இருக்க வேண்டும். எனக்கு என்ன தோன்றுகிறது என்றால், நாம் இருவருமே இந்த இடத்தைப் பற்றி ஏதோ ஒரு பழைய நினைவை உள் மனத்துக்குள்ளே புதைத்துக் கொண்டிருக்கிறோம். அதனால்தான் நம்மையும் மீறி நம்முடைய உடம்பு இப்படிப் பதறுகிறது. உள்ளம் பதைபதைக்கிறது!'' என்றான் சிவகாமிநாதன்.

ஓவிய இளைஞன் இவ்வாறு சொல்லி நிறுத்தினானோ இல்லையோ, அப்படியே ஒரு குதி குதித்து மீண்டும் உட்கார்ந்தாள் மாலதி.

''ரொம்ப சரி. அப்படியே சொல்லிவிட்டீர்கள் காரணத்தை. இந்த மாளிகைக்குப் பின்னால் உள்ள மணற்பரப்பைப் பற்றியும் இதில் போடப்பட்டுள்ள சிமெண்ட் பெஞ்சைப் பற்றியும் நான் ஏதோ கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த நிகழ்ச்சி என்னுடைய உள்ளத்தில் என்னையும் மீறி ஏதேதோ எண்ண அலைகளை வீசுகிறது'' என்றாள் மாலதி. உடனே சிவகாமிநாதன் சொன்னான்:

''மாலதி! அது இந்தக் கடற்கரைதானா, அது இதே இந்த சிமெண்ட் பெஞ்சுதானா என்பது எனக்குத் தெரியாது. சிங்கம்புத்தூர் ஜமீந்தார் மாளிகையைப் பற்றியும் அதற்குப் பின்புறம் உள்ள தனியானதோர் இடத்தைப் பற்றியும், நானும் கூட ஒரு முக்கியமான செய்தி கேட்டிருக்கிறேன். அது என் மனத்தின் ஆழத்திலே ஒரு கோடியிலே பொதிந்து கிடக்கிறது. அந்த நினைவுதான் என்னையும், எனது மனநிலையையும் மீறி வந்து இப்படி ஒரு பதற்றத்தைத் தருகிறது. சந்தேகம் இல்லை!'' என்றான் சிவகாமிநாதன்.

''அப்படியா? நீங்களும் அப்படி ஒரு சம்பவத்தைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறீர்களா?''

## விஷயத்தைப் பொறுத்தது

சுதந்திரக் கட்சிப் பிரசார வேலையாக ராஜாஜி சென்னை நகருக்குச் சென்றிருந்த போது, சில கட்சி அங்கத்தினர்கள் ராஜாஜியிடம் பல விஷயங்களைப் பற்றிக் கேள்விகள் கேட்டு விளக்கங்கள் பெற்று வந்தனர். கடைசியில் ஒரு நண்பர் மிகுந்த ஆவலுடன், ''ராஜாஜி! தங்களுக்கு இந்தி பேச வராவிட்டாலும் புரிந்து கொள்ளவாவது செய்வீர்களா இல்லையா?'' என்று கேட்டார்.

''பேசப்படும் விஷயத்தைப் பொறுத்தது அது. பேசப்படும் விஷயம் எனக்கு விரோதமாக இருப்பின் எனக்கு உடனே புரிந்து விடுகிறது!'' என்றார் ராஜாஜி.

''மாலதி! உன் சம்பந்தப்பட்டவரை நீ கேட்டிருக்கிற செய்திக்கும் உனக்கும் என்ன உறவு என்பது எனக்குத் தெரியாது. ஆனால் என் வரையில், என்னோடும், என் வாழ்க்கையோடும் பின்னி நிற்கிற ஒரு நிகழ்ச்சி அது! எனது வாழ்க்கை என்ற சோகச் சித்திரத்திற்கு இறகாக அமைந்தது அந்த நிகழ்ச்சிதான். இத்தனை நாளும் என்னைச் சென்னை நகரத்துக்கு வரவொட்டாமல் தடுத்து நிறுத்தியதும் அந்தத் துயர நிகழ்ச்சிதான்! இந்த ஊரை நினைத்தாலுமே என்னுடைய அன்னையின் உடம்பெல்லாம் பதறியதற்கு அடிப்படையாக அமைந்த காரணம் அந்த நிகழ்ச்சிதான்!''

இப்படிச் சொல்லும்போது சிவகாமிநாதனின் விரல்கள் பதறின. இதைக் கண்டு அந்தப் பதறிய விரல்களைப் பற்றினாள் மாலதி.

''உன்னுடைய உடம்பும் இவ்வளவு நடுங்குகிறதா?'' என்று கேட்டுக் கொண்டே மாலதியின் கரங்கள் இரண்டையும் பிடித்தான் சிவகாமிநாதன்.

''உங்களுக்கு ஆட்சேபம் இல்லையென்றால் நாம் இந்தப் பெஞ்சிலிருந்து எழுந்து சென்று சற்றுத் தொலைவிலே போய் மணற் பரப்பிலே உட்கார்ந்து கொள்ளலாமா?'' என்று கேட்டாள் மாலதி.

''சரி'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தான் ஓவிய இளைஞன்.

மாலதியும் சிவகாமிநாதனும் மணற் பரப்பிலே நடந்தார்கள்! (தொடரும்)

# "அன்பு வேணுமா, அன்பு?"

## ரா. கணபதி

பீரோக்கள், மேஜைகள், நாற்காலிகள் இப்படிப் பல பொருள்களை இழந்த அறைகள் வெறிச்சு, வெறிச்சென்று அமங்கலமாக, சோக மயமாகக் காட்சியளித்தன. அமங்கலத்தோடும் சோகத்தோடும் இனந்தெரியாததோர் அச்சமும் இழைந்தோடியது.

பெரிதாக உள்ள எதைக் கண்டாலுமே ஓர் அச்சம் ஏற்படத்தானே செய்கிறது? சின்னச் சின்னதாகத் தோன்றிய அறைகளெல்லாம் இப்போது பேர்பாதிச் சாமான்களுக்கு மேல் காலியாகி அவை பெரிதாகத் தோன்றுவதால்தான் இந்த அச்சமா?

பெரிதாக உள்ள அன்பிடம் கூட இந்த அச்சம் ஏற்படும் போல் இருக்கிறது என்று எண்ணினான் ராமநாதன். 'தன்னுடைய மாபெரும் அன்புக்கு அஞ்சித்தான் அண்ணன் சபாபதி விலகி விலகிப் போகிறானோ? இப்போது ஒரேயடியாகத் தன்னைப் பிரிந்து தனிக் குடித்தனம் போகிறானோ?'

அந்தத் தோட்டப்புற இடைகழியைப் பார்த்தால் ராமநாதனுக்கு விசித்திரமாக இருந்தது. அது இத்தனை விசாலமானது என்று யாரேனும் எண்ணியதுண்டோ? அது கட்டி முடிந்த நாளாக அங்கு கொலுவீற்றிருந்த இரண்டு பெரும் கொலுப் பெட்டிகளில் ஒன்று இப்போது அங்கிருந்து விடைபெற்றுக் கொண்டு விட்டது.

அப்புறம் அந்த வாசல் வராந்தா! அடேயப்பா, கம்பிக் கதவை மட்டும் சாத்திக் கொண்டு விட்டால், தென்னண்டைக் காற்று வீசும் சித்திரை வைகாசி மாதங்களில் இங்கே ஓர் ஆலே தாராளமாகப் படுக்கலாம் போல் இருக்கிறதே! அந்த ஒரு 'செஸ்ட் ஆஃப் டிராயர்ஸ்' இத்தனை இடத்தையா அடைத்துக் கொண்டிருந்தது? ராமநாதனுக்கு ஆச்சரியமாக இருந்தது.



வீட்டில் ஒரு பாதி காலியாவதாகிக் கொள்ளைக் காரியம் கிடந்தது. என்றாலும் காரியத்தில் மனசு போகாமல் வாசலுக்கும் உள்ளுக்குமாக நடந்து கொண்டிருந்தான் ராமநாதன். எங்குமே சூனியம்தான் கப்பிக் கிடந்தது. அடச் சீ! என்ன அல்ப புத்தி இந்த மனசுக்கு? வாசலில் போட்டிருந்த அந்த பீரோவைக் கூடவா கவனமாக எடுத்து வைத்துக் கொள்ள வேணும்? அது போட்டிருந்த இடத்தில் இப்போது அதே அளவுக்கு ஓர் அழுக்குச் சதுரம். இதே போலத்தான் வீட்டுத் தோட்டத்தில் அம்மி கிடந்த இடத்தில் அதற்கு நினைவுச் சின்னமாக ஓர் அழுக்குத் திட்டு. நுழை வாசலிலிருந்து புறக்கடை வரை இப்படியா ஒருத்தி பார்த்துப் பார்த்துச் சூனியம் செய்வாள்?

இந்தச் சுவர்களைப் பார்க்க வேண்டுமே! படங்கள், துணிமணிகள் மாட்டும் நிலை, கடிகார ஸ்டாண்டு, டென்னிஸ் மட்டை, ஆப்பக் கூடு இத்தியாதி பொருள்களை இழந்து அவை போன போக்கு! அம்மியும், பீரோவும் எடுபட்ட இடங்களில் அழுக்குத் திட்டுக்கள். சுவர்களில் மட்டும் அது இழந்த பண்டங்களின் வடிவத்துக்கேற்ப வெண் துண்டங்கள் காட்சி அளித்தன. அவற்றோடு சுற்றுப்புறத்துச் சுவரை ஒப்பிட்டுப் பார்க்கும் போதுதான் வீட்டுக்குச் சுண்ணாம்பு அடித்து எவ்வளவு காலமாகி விட்டது என்பது ராமநாதனுக்கு நினைவு வந்தது.

'இனி மேல் இந்த வீட்டுக்கு வெள்ளை யடிக்கும் பொறுப்பெல்லாம் தன்னுடையது தான். 'வீடு உனக்கு — வயல் எனக்கு' என்று தான் சபாபதி பாகம் பிரித்துக் கொண்டாயிற்றே!

'அது சரி, வீட்டுக்கு வெள்ளை அடித்துவிடலாம். ஆனால், பாரதி பாடினாரே, அது போல மனசு வெளுக்க என்ன செய்வது? ஞானிகளையும் கவிகளையும் கேட்டால் அன்பி னால்தான் உள்ளம் வெளுக்கும் என்பார்கள். அன்பாம், அன்பின் சக்தியாம்! அன்புக்கு ஏது சக்தி? பிறந்த நாளாக முப்பது வருஷம் நாம் அன்பு செலுத்தும் ஒருவரை நம்முடனேயே இருக்கிக் கொள்ளக்கூட அதற்கு ஆற்றல் கிடையாது. அன்பை யார் லட்சியம் செய்கிறார்கள்? ஒவ்வொருவனுக்கும் தானேதான் மையம்; தானே வட்டம்; தானே பரிதி. தானே மையமாக, வட்டமாக, பரிதியாக வாழ்வதற்கு வலுவளிக்கும் வரையில்தான் பிறரது தொடர்பை யாருமே வேண்டுகிறார்கள். கோமகனாகவே இருந்தாலும் அவனுடைய அன்பை யார் வேண்டுகிறார்கள்? அவன் அளிக்கக் கூடிய அந்தஸ்தைத்தான் வேண்டுகிறார்கள். அன்பை மண்ணாங்கட்டியாகத்தான் நினைக்கிறார்கள்.'

''சாமி, காலையிலேயிருந்து கூடையைச் சுமந்து தலை கழுத்துக்குள்ளாற போயிடும் போல அழுத்துது. போணி பண்ணு ராஜா'' என்ற பெண் குரல் ராமநாதனின் சிந்தனையைக் கலைத்தது. வேர்த்து விறுவிறுத்துப் போன ஒரு பெண் தன் தலையிலிருந்து ஒரு கூடையை இறக்கி ஒட்டுத் திண்ணையில் வைத்தாள்.



"அதென்னம்மா, அப்படி விலை போகாத பண்டம்? அன்பையா வியாபாரம் செய்கிறாய்?" என்று வேதனையுடன் நகைத்தான் ராமநாதன். 'அன்பு வேணுமா, அன்பு?' என்று கூவிக் கொண்டே தான் தெருத் தெருவாகத் தள்ளாடிக் கொண்டு திரிவது போலவும், தன்னை ஓர் ஈ, காக்கை சீந்தாதது போலவும் அவன் மனத்தில் சிந்தனைச் சுருள் சினிமா காட்டிற்று.

"என்னு சாமீ, கேட்டே? மண்ணு வியாபாரமான்னு தானே கேட்டே? ஆமாம் கண்ணு. நல்ல மண்ணுங் கட்டி கொண்டாந்திருக்கேன். சிரிக்காதே ராஜா.... அடுப்பு இடுப்பு போட்டா வெண்ணெய் கணக்கா இருக்கும். ஒனக்கென்ன தெரியும் அதைப்பத்தி? அம்மாவைக் கூப்பிடு.... யோ, அம்மோவ்!"

சிவகாமு வாசலில் பிரஸன்னமாகி விட்டாள். பேரம் ஆரம்பித்தது. என்னதான் ஸ்டவ்வும், குமட்டியும் இருந்தாலும் ஒரு திவசம் திங்களென்றால் புதுக் குடித்தனத்தில் மண் அடுப்பு வேண்டாமா? கடை காலியாயிற்று. கூடைக் காரியின் ஜோல்னாப் பையில் கனம் ஏறிற்று.

"நாளைக்கும் காலமே கமலாவையும், குழந்தைகளையும் அழைச்சிண்டு அங்கேயே சாப்பிட வந்துடுங்கோ" என்று ராமநாதனுக்கு அழைப்பு விடுத்தாள் மதனி சிவகாமு.

அடுப்பை எண்ணிய பின்தான் தனிச் சமையலுக்கு மைத்துனனை அழைக்க வேண்டும் என்ற சம்பிரதாய உபசாரமே அவளுக்கு நினைவு வந்திருக்கிறது.

"வருகிறேனே!" என்றான் ராமநாதன் அசுவாரஸ்யமாக.

சிவகாமு நகரவில்லை. இப்போதெல்லாம் அவள் ஒரு விநாடி அவனிடம் தயங்கி நின்றாலும் புதிதாக ஒரு பொருளுக்கு அடிபோடுவதாகவே இருந்தது. பொருள் போவதைப் பற்றி ராமநாதனுக்கு ஒரு பொருட்டே இல்லை. ஆனால் ஒவ்வொரு பொருளிலும் அடக்கமாயிருந்த நினைவுகள்?

"பெரிய அரிவாள் மணையை எடுத்துக்கலாம்னுட்டு...." என்று இழுத்தாள் சிவகாமு. ராமநாதனை நினைவு அலைகள் இழுத்தன.

அந்த நாளில் — அதெல்லாம் ரொம்ப வருஷத்துக்கு முன்னால் — அம்மாவுக்கு அசௌகரியம் ஏற்படும்போது அப்பா சமைய

இக்கு ராமநாதனும், சபாபதியும்தான் 'உதவியாளர்கள்'. இரண்டு பேரும் போட்டி போட்டுக் கொண்டு இந்தப் பெரிய அரிவாள் மனையில்தான் காய்கறி நறுக்கியிருக்கிறார்கள். ஒரு முறை அரிவாள் மனைக்கு அசைந்து கொடுக்காத ஏதோ ஒரு காயை இருவருமாகப் பிடித்துக் கொண்டு நறுக்கியிருக்கிறார்கள். காயோடு நில்லாமல் தங்கள் விரல்களையும் கூடச் சிறிது நறுக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

காயத்தை வாயில் வைத்து உறிஞ்சினால் கசிவு நின்று விடும் என்று சபாபதிக்குத் தெரியாதோ, அல்லது ரத்தத்தைக் கண்டதில்தான் அவன் திக்பிரமித்து நின்றுவிட்டானோ? ராமநாதன் தயங்கவில்லை. தன் விரலிலிருந்து செந்நீர் சிந்துவதையும் மறந்து விட்டு அண்ணனின் காயத்தை உறிஞ்சி உமிழ்ந்தான்!

எப்போதுமே அப்படித்தான் வழக்கம்! உடம்பில் மட்டுமின்றி, ராமநாதன் மனசில் காயப்பட்டுக் குருதி கசியும் போதும் சபாபதி லட்சியம் செய்ததே கிடையாது. இவனே தன் புண்களையும் மதிக்காது அவனை எத்தனையோ முறை ஆற்றியிருக்கிறான்.

''என்ன? அரிவாள்மனை....'' என்று மீண்டும் தொடங்கிய சிவகாமுவின் குரல் ராமநாதனை நனவுலகுக்கு இட்டு வந்தது.

''எதை வேணுமானாலும் எடுத்துக்கோங்களேன். என்னைக் கேக்கவே வேண்டாம்'' என்றான் அவன் அலுப்புடன்.

அவ்வளவுதான். சிவகாமு சரமாரியாக ஆரம்பித்து விட்டாள்.

''அப்படி ஒரு சொல்லு சொல்லாதேள். எதை வேணுமானாலும் நான் ஏன் எடுத்துக்கறேன்? கமலாவுக்கு வந்த சீர் வரிசையிலே ஒரு செப்பாலடித்த செல்லாத தம்பிடியைக் கூடத் தொட மாட்டேன். உங்க அம்மாவுதுலேதான் கணக்கா என் பங்கை எடுத்துக்கறேன். இந்த அரிவாள்மனை உங்க அம்மாவுதுதான். என் பாத்திரம் பண்டமெல்லாம் வந்தவுடன் அதுகளையே கையாண்டு தன்னுடையதையெல்லாம் உங்கம்மா பெட்டியிலே போட்டுப் பத்திரப்படுத்திட்டாரோன்னோ? என் பாத்திரம் பண்டமெல்லாம் தேஞ்சு மாஞ்சு போயிடுத்து. இன்னிக்கு என் அரிவாள்மனை வெண்ணெயைக் கூட வெட்டாது. அதனாலேதான் அந்தப் பெரிசைக் கேட்டேன். அதுக்காக அப்படிப் பேசாதேள்!''

ராமநாதனின் மூடிய வாய் மூடிய படியேதான் இருந்தது. இத்தனை கூரிய சொற்கள் இருக்கும் போது மதனியாருக்கு அரிவாள்மனை வேறு எதற்கு?

மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்க சிவகாமு பொரிந்து தள்ளிக் கொண்டேயிருக்கையில் மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்க லாரியிலிருந்து இறங்கி வீட்டுக்குள்ளே வந்தான் சபாபதி. அவன் அவசரம் அவனுக்கு! இன்னொரு 'ட்ரிப்' லாரியிலேயே பாக்கிச் சாமான்களை எல்லாம் போட்டுக் கொண்டு அதனுடனேயே மனைவி குழந்தைகளுடன் டாக்ஸியில் பின்தொடர்ந்தால்தான் கடவேளையில் தனிக் குடித்தனத்துக்குப் பால் காய்ச்சிச் சாப்பிட முடியும்!

குடி மாறியவுடன் பண்டங்களை ஒழுங்கு செய்யவே நேரம் சரியாயிருக்குமாதலால் மறு நாள்தான் சமையல் தொடங்க உத்தேசித்திருந்தாள் சிவகாமு. இன்று இரவுக்கென, அவிபக்த குடும்பத்தின் கடைசிப் பரிசாகக் கட்டுச் சாதம் பிசைந்து டிபன் காரியரில் போட்டு விட்டாள். நாளை முதல், அடியிலிருந்து நுனி வரை சமையல் வேலையைத் தானே செய்ய வேண்டுமே என்று எரிச்சல் வந்தது சிவகாமுவுக்கு. இத்தனை காலமாக அடுப்படியில் அவதிப்பட்டுக் கொண்டு ஏற்றி மிறக்குவதெல்லாம் கமலாவின் வேலைதான். கறிகாய் நறுக்குவது போன்ற சுற்றுப்படிக் காரியங்கள்தாம் சிவகாமுவுடையவை. பிரிவினைக்கு மூலகாரணமாக முன் நின்ற சிவகாமுவுக்கே சமையல் பொறுப்பு முழுவதும் தன் மீது விழுவதை மட்டும் தாங்கமுடியவில்லை. அந்த எரிச்சலில் கணவனிடம் மடமடவென்று ஆரம்பித்தாள்:

''என் பாத்திரமெல்லாம் இந்தக் குடும்பத்துக்காக ஓடாகத் தேஞ்சு போச்சேன்னு, எனக்கு உரியதைக் கேட்டாக்கூட தப்பாப் போயிடறதே'' என்று நீட்டி முழக்கிக் கொண்டு தொடங்கினாள்.

ஆனால் சபாபதியோ அவள் சொன்னதைத் துளிகூட லட்சியம் செய்யவில்லை:

''இன்னும் ஐம்பது நிமிஷத்துலே நாம அங்கேயிருக்கணும். பசங்கள் எங்கே? வீட்டை ஒழிக்கிறமேன்னு வெளியிலே விளையாட அனுப்பிச்சுட்டாயா? எல்லாரையும் கூட்டி 'ரெடி' பண்ணு'' என்று அமைதியாக மனைவியிடம் கூறியவன் தம்பியின் பக்கம் திரும்பி, ''இந்தா, இவனே! இந்த இரண்டு ஆள் போறாது. கட்டில் பெஞ்ச் எல்லாத்தையும் எடுத்தாகணும்; நீயும் ஒரு கை கொடு'' என்று சர்வ சகஜமாகச் சொன்னான்.

ராமநாதனின் சிந்தனை ஓடிற்று. 'குணாதிசயம், குணாதிசயம் என்று சொல்கிறார்களே — சபாபதியின் குணம் உண்மையிலேயே அதிசயமானதுதான். தன்னை அவன் அலட்சியப்படுத்துகிறான் என்று கருதுகிறோமே, மன்னியையும்தான் அவன் எப்போதும் அலட்சியப்படுத்தி வருகிறான். ஏன், உண்மையைச் சொன்னால் தன்னிடம் அவனுக்குள்ள அக்கறையைக் கூட அவன் வேறு யாரிடத்தும் காட்டியதில்லை. ஆனால், தான் அந்த வேறு யார் யாரைப் போலவா அவனை நேசிக்கிறோம்? மேரு பர்வதத்தின் அளவுக்கல்லவா அவன் மேல் அன்பு கொண்டிருக்கிறோம்?

'மனைவியின் வார்த்தையைக் கேட்டுக் கொண்டு அவன் தனிக் குடித்தனம் போகவில்லை; கூட்டாக இருப்பதால் அவன் செய்யும் அசட்டுக் காரியங்களைத் தவிர்க்கத்தான் பிரிந்து போகிறான் என்பது நிச்சயம். ஆனால் அதைத் தன்னிடம் வாய் விட்டுக் கூறினால் என்ன வந்துவிடுமாம்? அவனை வெளியேற்றுவதற்கே தன் உதவியை வாய் கூசாது கேட்கிறானே...!'

கனத்த உள்ளத்துடன் கனம் கனமான பொருள்களையெல்லாம் கைகொடுத்து லாரி ஏற்றினான் ராமநாதன். சபாபதியோ இம்மியும் நிலைகுலையவில்லை.

''பிப்பாய் பொதுதான். இருந்தாலும் இப்ப எனக்கு அது தேவை இல்லே. உன் சாமான்கள்தான் அதில் போட்டிருப்பதால் அதை நீயே வைத்துக் கொண்டு விடு. அதில்

# 'அனாசின்'

## வலி நிவாரணத்திற்கு சிறந்தது

ஏனெனில் அது நான்கு வழிகளில் வேலை செய்கிறது

| | |
|---|---|
| வலியைப் போக்குகிறது. | ஜுரத்தைத் தணிக்கிறது. |
| நரம்புகளைச் சமனப்படுத்துகிறது | சோர்வைப் போக்குகிறது. |



அனாசின் அதிலுள்ள மருந்துகளின் சேர்க்கையால் சிறந்த நிவாரணியாகிறது. தலைவலி, ஜலதோஷம், பல்வலி மற்றும் தசைவலி முதலிய எல்லாவிதமான வலிகளுக்கும் அது சிறந்தது. மேலும் அனாசின் ஜுரத்தைத் தணிக்கிறது. நரம்புகளுக்கு சமனூட்டுகிறது. சோர்வைப் போக்குகிறது. ஞாபகமிருக்கட்டும், இரண்டு அனாசின் மாத்திரைகள் வலிகளுக்கு சிறந்த நிவாரணி.



2 மாத்திரைகளுக்கு 13 ந. பைசேதான்.

*Registered User:* GEOFFREY MANNERS & CO. LIMITED.

O-38-TAM

---

# மெரிட்*

## தையல் மெஷின்கள்



சுலபமாக

குறைந்த செலவில்

தைப்பதற்கு

# ஸிங்கர்*

கடைகளிலும் மற்றும் அங்கீகரிக்கப்பட்ட டீலர்களிடம் மட்டுமே கிடைக்கும்

* ஸிங்கர் மானுபாக்சரிங் கம்பெனியின் டிரேட் மார்க்

# உங்கள் வீட்டிற்குப்
## பிரகாசமான புதிய பாஷன்
# ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்



ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஒரு ஆயுட்கால முதலீடு. எளிதில் சுத்தமாக வைத்திருக்கவும், சுத்தப்படுத்தவும் முடிகிறது. அதைக் கழுவி அலம்பி, துடைத்து வைக்கலாம். அவ்வளவேதான். சமையல் செய்வதற்கு ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் மிகச் சிறந்தது. அதற்கென எவ்வித ருசியும் கிடையாது. மேலும் அதன் செம்பாலான அடிப்பாகம் உணவு அடியில் பிடிப்பதையும், தீய்ந்து போவதையும் தடுக்கிறது. உங்கள் ஊரிலுள்ள கடையில் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள் கிடைக்காவிடில், அவை கிடைக்குமிடம் பற்றிய விபரத்திற்குக் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்:

**NICKEL INFORMATION BUREAU PRIVATE LIMITED,**

United Bank of India Building,
Sir Phirozeshah Mehta Road, Bombay I.

உத்தேசமாகப் பாதி விலைக்கு எனக்கு ஒரு 'பீல் ஷெல்ப்' வாங்கிக் கொடுத்து விடு. அவசரமில்லை'' என்றான் தம்பியிடம்.

ஒவ்வொரு பொருளையும் வெறும் ஜடப் பொருளாக மட்டுமே தான் பார்த்தான் சபாபதி. ராமநாதனுக்கோ அங்குள்ள ஒவ்வொரு தூசி, துப்பட்டையிலும்கூட ஜீவ தத்துவம் ததும்பிக் கொண்டிருப்பதாகத் தெரிந்தது. 'ஜீவன் ததும்பும் பழைய நினைவுகளை அவன் எப்படி அவ்வளவு அலாக்காகக் கழற்றி வைத்து விடுகிறான்?'

அப்போது ராமநாதனுக்கு எட்டு வயது இருக்குமோ, என்னவோ? அவனுக்கு எட்டு என்றால் சபாபதிக்குப் பத்துப் பிராயம் இருக்கும். ராமநாதன் 'ஹோம்வொர்க்' செய்யாததால் ஆசிரியர் அவனைப் பெஞ்சி மேல் ஏற்றி நிறுத்தியதை அப்பாவிடம் சொல்லி விட்டான் சபாபதி. அப்போது வந்த கோபத்தில் ராமநாதனை தோட்டு, புத்தகத்துடன் இந்தப் பீப்பாய் மீதுதான் தூக்கி உட்கார வைத்து விட்டார் அப்பா. பிறகு எங்கோ வெளியே போய் விட்டார். ராமநாதன் 'ஹோம் வொர்க்'கை முடித்தபின்பும் அப்பா திரும்பாததால், இறங்கத் தெரியாமல் திண்டாடிக் கொண்டிருந்தான் அவன். அப்போது சபாபதியாகவேதான் ஒரு ஸ்டூலைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு வந்து பீப்பாய் அருகில் போட்டு ராமநாதன் இறங்குவதற்கு உதவினான். ராமநாதனும் சபாபதியும் விளையாடத் தொடங்கினார்கள். அப்பா திரும்பி விட்டார் என்பதும் தெரியாமல் விளையாட்டில் மூழ்கி விட்டார்கள். ராமநாதனை இறக்கி விட்டதற்காக அன்று அப்பா சபாபதியைச் சாத்தியிருக்கிறாரே ஒரு சாத்து! பாவம், விரல் விரலாகத் தழும்புகளுடன் விசித்து விசித்து அழுதபடி படுத்துக் கொண்டிருந்த சபாபதியிடம் தயங்கியபடியே வந்தான் ராமநாதன். 'என்னால்தானே உனக்கு அடிபட்டது?' என்று அண்ணனைத் தொட்டுப் பரிவோடுக் கேட்டான். அவனோ உடம்பைச் சிலிர்த்துக் கொண்டு படுக்கையிலேயே எட்டி நகர்ந்தான்.

சபாபதி கோள் சொன்னதால்தானே முதலில் ராமநாதனை அப்பா தண்டித்தார்? அப்போது சபாபதி சற்றேனும் வருத்தம் தெரிவித்தானோ? பின்னர் ஏன் அவன் ராமநாதனை இறக்கி விட்டான்? அன்பு காரணமாகவா? அல்லது விளையாட்டுக்குக் கூட்டாளி வேண்டுமென்பதற்காக மட்டுமேதானா?

'தன்னோடு அவன் பழகியதெல்லாமே 'விளையாட்டுக்கு'த்தான். உள்ளன்பு என்றுமே அவனுக்கு இருந்ததில்லை.'

முன்பெல்லாம் இப்படி ஓர் எண்ணம் தோன்றினால் அதனை விரட்டப் படாதபாடு படுவான் ராமநாதன். 'உள்ளத்தில் அன்பு இல்லாமலே வெளியில் அன்பு இருப்பதாகப் பலர் நடிக்கவில்லையா? அதே போல, உள்ளத்தில் அன்பு இருந்தும் வெளியில் அன்பு இல்லாத மாதிரி நடிக்கிறான் அண்ணன். அது அவனுடைய சுபாவம்' என்று தன்னையே ஆசுவாசம் செய்து கொள்வான்.

தனிக் குடித்தன எண்ணத்தை சபாபதி செயலாக்கத் தொடங்கியதிலிருந்துதான் அவனுக்குத் தன் மீது அன்பே இருந்ததில்லை என்று ராமநாதனுக்குத் தோன்ற ஆரம்பித்தது. முப்பதாண்டுகள் ஒன்றாக வாழ்ந்து பிரிவதில் அவன் ஒரு லவலேசம் கவலையோ, ஓர் இம்மி வேதனையோ, தினையளவு வருத்தமோ கூடக் காட்டாதது ராமநாதனை உலுக்கி விட்டது.

'பீல் ஷெல்ப்' விஷயத்தை நிதானமாகச் சொல்லி விட்டு வேறு வேலையில் ஈடுபட்டான் சபாபதி. ராமநாதனோ தன் உணர்வுகளையே தாங்க மாட்டாமல் வாசல்புறத்துக்கு வந்து விட்டான். தன் சகாயம் குறைந்து விட்டதால் சபாபதிக்கு வேலை அதிகமானதையும், முதுகிலும், விலாப் பக்கங்களிலும் பெருகும் வேர்வையைத் துடைத்து விட்டுக் கொண்டே அவன் ஓடியாடுவதையும் கவனித்தான் ராமநாதன்.

''அந்த வீடு காற்றுப் போக்காக இல்லை என்றேனே மன்னி! நீ வேணுமானால் ஃபேனைக் கழட்டி எடுத்துண்டு போயேன். நாங்கள் வாசல்புற ரூமில் படுத்துக் கொள்கிறோம்'' என்றான் அண்ணனிடம். அண்ணா மன்னி காலி செய்யும் காற்றுவாக்கான அறையைத் தாங்கள் எடுத்துக் கொள்வதால், தற்போது தாங்கள் உபயோகிக்கும் அறையிலுள்ள மின் விசிறியை அண்ணனுக்கு வழங்க விழைந்தது தம்பி உள்ளம், ஒரு நாளும் அவனது கரிசனம் அவனை விட்டுப் போகாது போலும்!

சபாபதியின் கடினமும் சபாபதியை விட்டுப் போகவில்லை. ''வேண்டாம், வேண்டாம். உன் பொருள் உன்னிடமே இருக்கட்டும். வேறு வாங்கிக் கொண்டால் போச்சு'' என்றான் சுரமில்லாமல்.

சிறிது போது சென்றது.

''இவனே, இதோ கையில் அடிபட்டு விட்டது பார். கொஞ்சம் பென்ஸயின் போட்டுப் பஞ்சு வைத்துக் கட்டிவிடறயா?'' என்று கேட்டபடி, கைவிரலை நீட்டியவாறே தம்பியிடம் வந்தான் அண்ணன். எப்போதோ வாங்கி அடித்த 'டாணு' ஆணியைக்கூட மறக்காமல் சுவரிலிருந்து பிடுங்கும் போது அடிபட்டுக் கொண்டிருக்கிறான்! தம்பியின் நெஞ்சுக்குத் தாளாத அடியைக் கொடுத்து விட்டு, அவனிடமே தன் கையில் பட்ட சிறு அடிக்கு சிகிச்சை தேடி வருகிறான்!

ஏன், சபாபதி பல சமயங்களில் தனது நெஞ்சில் விழுந்த அடிகளைக்கூட ராமநாதனிடம் காட்டிக் கொண்டதுண்டு. அப்போதெல்லாம் ராமநாதன் தனது நேசம் என்ற விரலால் அந்தப் புண்களைத் தடவிக் கொடுத்து, அனுதாபத்தை அஞ்சனமாகப் பூசுவான். அப்படித் தம்பி அளிக்கும் ஆறுதலையும் தான் பொருட்படுத்துவதாகக்

அழகு என்பது அன்பே. உடலின் மெய்யாக நிற்பது குணமே. உடலின் ரூபமும் விருப்பமும் விவாகமாகும் வரையில்தான். விவாகம் முடிந்து இருவர் உள்ளமும் அன்புடன் கூடியதும் முகமும் உடலும் . எங்கேயோ மறைந்து விடும். -ராஜாஜி

> பகவான் இஷ்டம்போல் தாயும் ஆகி விடுவார், தகப்பனும் ஆகி விடுவார். குழந்தையும் ஆகி விடுவார். நாம் எல்லாம் அந்தக் குழந்தைக்கு விளையாட்டுச் சாமான்கள். — ராஜாஜி

காட்டிக் கொள்ள மாட்டான் சபாபதி. அதோடு, ராமநாதன் எவ்வளவு மனமுடைந்து அவனிடம் ஆறுதலுக்கு வந்தாலும் சபாபதியின் வாயிலிருந்து ஓர் அநுதாபச் சொல்கூட வராது. சபாபதியின் பொருட்டே ராமநாதன் அடிபட்ட போதும் கூட அவன் தம்பிக்கு ஆறுதலாகப் பேசியதில்லை. இப்படியிருந்தும், அண்ணனுக்குத் தன் மேல் அன்பு உண்டு என்றே எண்ண முயல்வான் ராமநாதன். 'என் சுகதுக்கங்களில் அவன் அக்கறை காட்டிப் பங்கு கொள்ளாத போதிலும், அவனுடைய சுக துக்கங்களை நான் பகிர்ந்து கொள்வேன் என்று நம்புகிறான்; தனக்கு நேரும் துன்பங்களை என்னிடம் சொல்லிக் கொள்கிறான். அதாவது, தனக்கு அவன் மீதுள்ள ஆழ்ந்த அன்பைப் புரிந்து கொண்டிருக்கிறான்' என்று எண்ணி மகிழ்வான்.

இன்னொரு விசித்திரமான எண்ணமும் ராமநாதனுக்குத் தோன்றும். ' 'பிறரால் அண்ணன் வேதனைப் படுவதை நம்மிடம் சொல்லிக் கொள்கிறான். யார் யாரோ செய்யும் செயல்கள் அவன் உணர்ச்சிகளைக் கிளறி வேதனை ஊட்டுமானால் தனது மகத்தான பாசம் அவனது உணர்ச்சியைத் தொடாது போகுமா என்ன?' என்று எண்ணுவான்.

அண்ணன் கைக்குக் கட்டுப்போட்டு விட்டான் தம்பி. புண்ணுண்ட அவனது இதயத்துக்கு யார் கட்டுப் போடுவது? உறவுகளை 'பந்தம்' என்று சொல்லும் போது புண்ணுக்கு இதமாகப் போடும் கட்டைத் தான் குறிப்பிடுகிறார்களோ?

சபாபதி கையில் கட்டுப் போட்டு விட்டதால் ராமநாதனேதான் அப்புறம் அவனது பொருள்களை வெளியேற்ற நேரிட்டது. ஒவ்வொரு பொருளையும் பிரித்து வைக்கும்போது அவனுக்குச் சொரேல் சொரேல் என்றது. பொருள்கள் மட்டுமா காலியாகின்றன? ராமநாதனது இதயத்திலேயே பல பகுதிகள் பாலைவனமாகி வந்தன. இல்லை, இல்லை. பெஞ்சியையும், கட்டிலையும், நாற்காலியையும் வெளியேற்றும் போதே அவற்றைவிடப் பல மடங்கு பெரிய சோக உணர்வுகள் யானை யானையாக அவன் உள்ளத்தில் புகுந்தன.

அடுக்களையிலிருந்து வாசல் குறடு மட்டும் அண்ணனைச் சேர வேண்டிய சாமான்களை 'டெம்போ' லாரியில் ஏற்றியாயிற்று. லாரியைத் தொடர டாக்ஸியும் வந்து விட்டது.

வண்டு வண்டாக நாலு குழந்தைகளும் அதில் 'நான் முந்தி, நீ முந்தி' என்று ஏறி உட்கார்ந்து விட்டன. சிவகாமுவுக்கே கண் கலங்கி விட்டது. நாலு குழந்தைகளையுமே அவள் அழைத்துச் சென்றிருப்பாள். ஆனால் டாக்ஸியில் ஏற்றிக் கொள்ள மாட்டார்களே! சீனுவையும் பாபுவையும் இறங்கச் சொல்வதற்கு அவள் மிகவும் நாணி விட்டாள். ''நாளைக்கு அப்பாவும் அம்மாவும் சாப்பிட வரச்சே நீங்களும் வரலாம், கண்மணிகளா!'' என்றான். ''எனக்கு அவியல் பண்ணிப் போடறயா, பெரியம்மா?'' என்று கபடம் தெரியாமல் கேட்டான் சீனு.

சபாபதி வாசல் கேட்டை நெருங்கும் போது அவன் செல்வதைக் காணவொட்டாமல் வீட்டுப் பக்கம் திரும்பிப் பார்வையைச் செலுத்தினான் ராமநாதன். கரைந்த கண்களை மேல்நோக்காகச் செலுத்திய அவனது நயன நீர்த் திரையில் குறட்டிலே, நுழை வாசல்படிக்கு மேலே மாட்டியிருந்த பெரிய ஒரு புகைப்படம் புகை போல ஆடிற்று. கண்ணைத் துடைத்துக் கொண்டான். மனசையும், குரலையும் கெட்டியாக்கிக் கொண்டு ''அந்த ஃபோட்டோவை மறந்து விட்டாயே!'' என்றான் டாக்ஸி அருகே சென்ற அண்ணனிடம்.

''ஓ, ஐ ஸீ'' என்ற சபாபதி திரும்பி நடந்தான். சிவகாமுவும் திரும்பினாள்.

ஒரு ஸ்டூல் மீது ஏறி நின்று கொண்டு புகைப்படத்தைக் கழற்றலானான் ராமநாதன். அந்தப் பெரிய படத்தின் வளையங்களில் கம்பியை நுழைத்து முறுக்கி மாட்டியிருந்ததால் அது லகுவில் கழலவில்லை. அதை இப்படியும் அப்படியும் உலுக்கும்போது அதன் பின்னாலிருந்து காரையும், நூலாம்படையும் கிளம்பி நின்ற சபாபதியின் கண்களில் விழுந்தன. கண்களைத் துடைத்துக் கொண்டான் அவன். ராமநாதனும் கண்களைத் துடைத்துக் கொண்டான். காரணம் காரையும் நூலாம்படையும் அல்ல!

இருபத்தோராண்டுகளுக்கு முன் சபாபதியுடனும், ராமநாதனுடனும் அவர்கள் பெற்றோர் எடுத்துக் கொண்ட புகைப்படம் அது. அப்போது சபாபதியும், ராமநாதனும் 'டூ' விட்டிருந்த சமயம். (அவர்கள் தான் எத்தனை 'டூ'வையும், 'சேர்த்தி'யையும் கண்டிருப்பார்கள்!) குழந்தைகள் நிற்க வேண்டுமென ஏற்பாடு. ராமநாதன் சபாபதி அளவு உயரமில்லாததால் ஒரு பலகை மீது நின்று கொண்டான். அது தரையில் படியாமல் தாளம் போட்டுக் கொண்டிருந்தது. எனவே ராமநாதன் சபாபதியுடன் 'டூ' விட்டிருப்பதையும் மறந்து அவன் தோளிலேயே கை வைத்துக் கொண்டு ஆதாரம் பெற வேண்டியிருந்தது. சண்டையிலும் சேர்த்திருந்த அந்த அரைக் கணத்து அற்புத உறவைத்தான் அழியாத, நிரந்தர நிலையாக்கி விட்டது புகைப்படம்.

புகைப்படத்தில் 'டூ'வும் 'சேர்த்தி'யும் ஒன்றானாலும் வாழ்வில் ஒன்றாகவில்லை.

படத்தைக் கழற்றிக் கொண்டிருந்த ராமநாதனின் நெஞ்சம் கழன்று கொண்டிருந்தது. இந்தப் புகைப்படத்திலுள்ளது போலவே தான் வாழ்விலும் அண்ணனை ஆதாரமாகக் கொண்டே ஜீவித்திருக்கிறோம் என்ற பேருண்மை அவனுக்குப் பளிச்சிட்டது. 'இப்போது அவன் வெளியேறுவதற்காகத் தான் உண்மையில் வருந்தவில்லை. தான் அவனிடம் செலுத்தின அன்புக்கு இனி வாழ்வில்லையே என்றுதான் வருந்துகிறோம். ஆகா! ஒவ்வொருவரும் தத்தம் சுயநலத்தை மையமாகக் கொண்டே வாழ்கிறார்கள் என்று

# பிச்சைக்காரர்கள், சில்லரை வியாபாரிகள்

## தொல்லையை அறவே ஒழியுங்கள்

ரயில்களில் பிச்சைக்காரர்களின் தொல்லை பெருகியிருப்பதன் ஒரு காரணம், ஒரு சில தரும சிந்தனையாளர்களின் இரக்க உள்ளமே

பிரயாணிகளுக்கு மற்றுமோர் பெரும் தொல்லை கொடுப்போர், பழம் மற்றும் சில்லரைப் பொருள்களை விற்பவர்களாவர். டிக்கட்டும் வாங்காமல் இடைவிடாது பாடியும், தம் பொருள்களைக் கூவி விற்றும் ஸ்டேஷன் ஸ்டேஷனாக, பெட்டி பெட்டியாகத் தொத்திச் செல்லும் இவர்களில் பலர் சுகாதாரக் குறைவானவர்கள். நோய்க் கிருமிகளைப் பிரயாணிகளிடம் பரப்பும் இவர்களில் சமூக எதிரிகளும் பலர் உண்டு.

உங்களுக்குப் பாதுகாப்போடு கூடிய சௌகரியமான பிரயாணத்தை அளிக்க ரயில்வே அதிகாரிகள் இடையறாது உழைக்கிறார்கள். பிச்சைக்காரர்கள், சில்லரை வியாபாரிகள் தொல்லையை அறவே ஒழிக்க உங்கள் ஒத்துழைப்பை நல்குங்கள்.!



**தக்ஷிண ரயில்வே**

EP-SR-3

தான் எண்ணியது தன விஷயத்திலுமே உண்மை ஆகிவிட்டதோ? இல்லை. இந்த அன்பு சுயநலமானது என்றால் இதில் தனக்குக் கிட்டும் ஆதாயம் என்ன—பணமா, பதவியா, புகழா? எதுவுமில்லையே! தான் இவ்விருவர் வாழ்வின் கரையை விரும்புகிறேனே அன்றி எதனையும் பெற விரும்பவில்லையே. ஆம், இது தனக்காக எதையும் வேண்டாத பெரும் சுயநலமல்ல.'

'என்னை இழுக்க நலம்' என்று அருணகிரி நாதர் பாடியதன் பொருளில் ஓர் எள்ளு மூக்கு அளவு ராமநாதனுக்குப் புரிந்தது.

படத்தைக் கழற்றுகிற பாடாக இல்லை. அண்ணன் பக்கம் திரும்பினான்.

'அவன் கண்களில் ஏன் நீர் நிரம்புகிறது? காரையும் நூலாம்படையும் விழுந்ததற்குத் தான் துணிச் சுருளை எதி ஒற்றிக் கொண்டாயிற்றே!'

''கை ஓய்ந்து போகிறது; நீயே கழட்டிப் பார்!'' என்றான் ராமநாதன்.

''வேண்டாம். கழட்டவே வேண்டாம். எனக்கு அது வேண்டாம்'' என்ற சபாபதியின் குரல் கரகரத்தது.

'அது வேண்டாமென்று அழுத்திச் சொல்கிறானே! அப்படியானால் எது வேண்டுமாம்?'

'அன்பு வேணுமா, அன்பு?' என்று கேட்கத் துடித்தது ராமநாதனின் நெஞ்சு.

அவன் உள்ளமும்தான் துடித்தது. தொண்டை வறண்டு போகும் நிலையில், கால்கள் தொய்ந்து போகும் நிலையில், அன்பு என்ற பண்டத்தைச் சுமை சுமையாய்த் தூக்கிக் கொண்டு, தான் திரிவதாகக் கற்பனைச் சுருள் மீண்டும் விரிந்தது. ஓர் ஈ, காக்கை அவனைச் சீந்த வேண்டுமே! ஊ....ஹூம்!

'இதென்ன பொய்யான உணர்ச்சி? ஈக்கும் காக்கைக்கும் அன்பைத் தர நான் சம்மதிப்பேனா? உலகம் எல்லாவற்றையும் தழுவும் அன்பா என்னுடையது? இந்த உலகத்தில் என்னைப் போலவே பிறந்தும், தவழ்ந்தும் மகிழ்ந்த ஒரே ஒரு ஆத்மாவுக்கு மட்டும் தானே அன்பைத் தரச் சித்தமாக இருக்கிறேன்? அது ஏன்?'

அது ஏனென்று ராமநாதனுக்கு எப்படிப் புரியும்? அது புரிந்தால்தான் 'என்னை இழுக்க நலம்' என்று அருணகிரி பாடியதன் முழுப் பொருளும் அர்த்தமாகி விடுமே! அகில புவனங்களாகவும் யார் இருக்கிறானோ அவனிடம் அன்பு கொண்டு சகல ஜீவராசிகளிலும் கரையும் பான்மையானது அவ்வளவு எளிதில் புரிந்து விடுமா, என்ன?

''வேறென்ன வேணும், சபாபதி?'' என்று ராமநாதன் கேட்ட போது, தன்னையே தரும் துடிப்பும், அதனை அண்ணன் விலக்கி விடுவானோ என்பதில் தன்னிடமே கொள்ளும் பரிதாபமும் அவன் குரலில் கலந்து அலைமோதின.

சபாபதி வாய் திறக்கவில்லை. மனைவியின் பக்கம் திரும்பினான். மதனியைத் தீனமாகப் பார்த்தான் ராமநாதன். தன் விருப்பப்படியே பிரிந்து போவதில் இதுவரை பிரகாசித்துக் கொண்டிருந்த அவள் முகத்தில் இப்போது முகில்போல் இருள் பரவிற்று. பரவிய இருள் சிறிதுசிறிதாக இறுகிற்று. ஆகா, முகில்கள் இறுகிக் கொண்டே போனால் மின்னல் பிறக்க வேண்டியதுதானே! மின்னல் பிறக்குமா?

சிவகாமுவின் உடல் லேசாக நடுங்கிக் கொண்டிருந்தது. அவள் வாயைத் திறந்து திறந்து மூடினாள். ஒலி வரவில்லை. இருமித் தொண்டையைச் சரி செய்து கொண்டாள். உள்ளத்தைச் சரி செய்து கொள்வதற்குக்கூட ஓர் இருமல் உண்டா, என்ன? உண்டு போலத் தான் இருக்கிறது.

மின்னல் பிறந்தே விட்டது! எப்படி எப்படியோ கொடி விட்டுப் படர்ந்து, அவளுடைய இதயத்தின் ஆழத்திலிருந்த இருளை எல்லாம் துளைத்து ஒளி மயமாக்கி விட்டது அது.

''உங்க அண்ணாவுக்கு வேறென்ன வேண்டும்? நீங்கள்தான் வேணும்!'' என்று கணீரென்று கூறினாள் சிவகாமு.

மதனியோ, மாதாவோ என்று தெரியாமலா சொன்னார்கள்?

* * *

சீனுவுக்கும் பாபுவுக்கும்தான் ரொம்ப வருத்தம் — நாளை காலை நைலான் ஸ்லாக்கும், கார்டுராய் பாண்ட்டும் போட்டுக் கொண்டு அப்பா அம்மாவுடன் பெரியம்மா அகத்துக்கு டாக்ஸியில் போக முடியாதே என்று. குடும்பம் பிரிய இருந்ததையோ, மீண்டும் கூடியதையோ அவர்கள் கண்டார்களா? குழந்தைகள் கோபத்தைத் தணிப்பதற்காகத் தான் சிவகாமு டிபன் காரியரைப் பிரித்து, வேலை கெட்ட வேளையில் நாலு வாண்டுகளுக்கும் கட்டுச் சாதங்களைப் போடுகிறாள். அப்போதும் 'புஸ் புஸ்' என்றே உட்கார்ந்து கொண்டிருக்கிறது பாபு. ''நாளைக்கு உனக்கு அவியல் பண்ணிப் போடுகிறேனடா'' என்று வாக்களிக்கிறாள் பெரியம்மை. ''அம்மா கறிகாய் நறுக்குவாளாம். (அந்தப் பிரசித்தி பெற்ற அரிவாள்மனையில்தான்.) பெரியம்மா அவியல் சமைப்பேனாம். சரிதானே பாபு?'' என்று தாஜா செய்கிறாள்.

அப்போதும் வாய் திறக்கவில்லை பாபு. இருந்தாலும் அவனது மகிழ்ச்சி தெரிந்து விட்டது சிவகாமுவுக்கு. பெரியப்பா குணமே தான் இந்தப் பிள்ளைக்கு!

மனசு நிறையக் கற்பனை மணந்தாலும் அவற்றில் மிகவும் நுட்பமானவற்றை வெளியே சொல்லத் தெரியாத ஊமைக் கவிகளின் பரம்பரையைச் சேர்ந்தவன் சபாபதி. சபாபதியின் உள்ளத்தில் புஷ்பித்த எண்ணங்களைத் தொடுத்து அவனுக்கே மாலையாகச் சூட்டியவன் ராமநாதன். ஒருவரில்லாமல் மற்றவர் வாழ முடியாது. தொடுக்க ஆள் இல்லாவிடில் மலர்கள் மாலையாக முடியுமா? அல்லது மலர்களே இல்லாமல் தான் மாலை தொடுக்க முடியுமா? எனினும் இலைகளுக்குக் கீழ் மறைந்த மலர்களைப் போலத் தன் எண்ணங்களை மறைத்தே வாழ்ந்தான் சபாபதி. அப்படியும் அவனது அன்பைப் புரிந்து கொண்ட சிவகாமுவுக்கு அந்த ஊமைக் கவி பரம்பரையின் அடுத்த வாரிசான பாபுவின் மனசு புரியாமல் போகுமா என்ன?



## அத்தியாயம் இருபத்தொன்பது

## எங்கே பயணம்?

மலராத மொட்டொன்றும் மலர்ந்த பூவொன்றுமாக நிமிர்ந்து நிற்கும் அரவிந்தக் கொடிபோல், அஞ்சலித்துக் குவிந்த கரமும் அழகு நகை பூத்த முகமுமாய் வந்து நின்ற இளங் கோப்பிச்சியை மென்மையாக ஏறிட்டு நோக்கிய பரமேசுவர வர்மன், ''யார்? சோழ இளவரசியா? அடையாளமே தெரியவில்லையே!'' என்று உள்ளடங்கிய வியப்புடன் கண்களை மலர்த்தினான்.

அவனைப் பார்த்த இளங்கோப்பிச்சியின் மனத்திலும் அதே போன்ற கேள்விதான் எழுந்தது. காஞ்சியிலே அவனுக்கு முடிசூட்டு விழா நடந்த போதும், அதன்பின் தனது ஒன்றுவிட்ட இளவலான கோவிந்தவர்மனின் திருமண விஷயமாய்ப் பேச வேண்டிப் பழையாறைக்கு வந்தபோதும் அவனை நேரிலே பார்த்திருந்த அவள், இப்போதைய அவனது கோலத்தைக் கண்டு நெஞ்சம் நெகிழ்ந்து கரைந்தாள்.

''நலம்தானே இளவரசி? உன் நலன்பற்றி விசாரித்துப் போகவே இங்கு வந்தேன்!''

# பத்தினிக் கோட்டம்



தன் நலம் தவறிக் கிடக்கும் நிலையிலும் பிறர் நலம் விழைந்து வினவும் அப்பெருந்தகையாளனைப் பக்தி சிரத்தையுடன் பார்த்துக் கண்கலங்கிய இளங்கோப்பிச்சி, 'நலமே' என்பதுபோல் மெல்லத் தலையசைத்தாள்.

சற்று நேரம் அவனையே பார்த்துக்கொண்டிருந்த பரமேசுவர வர்மன் ஆழ்ந்த பெருமூச்சு விட்டுக் கரகரத்த குரலில் கூறினான்: ''விதியின் கொடிய கரங்கள் சிலரைத் தேடி வந்து அணைத்துக் கொள்கின்றன; மற்றும் சிலரோ அதன் பிடியில் தாமே வலியச் சென்று சிக்கிக் கொள்கின்றனர். விந்தையான உலகம். வேடிக்கையான மனிதர்கள்....''

தான் பழையாறை அரண்மனையிலிருந்து வெளியேறி இந்தச் சிறுகுடிலில் வந்து தங்கியிருப்பது பற்றியே அவன் இவ்வாறு சொல்கிறான் என்பதை உடனே புரிந்துகொண்ட இளங்கோப்பிச்சி, கண்ணிமைகள் படபடக்க அவனை நிமிர்ந்து நோக்கினாள்.

ஆனால் பரமேசுவர வர்மனோ அந்தப் பேச்சை அதோடு நிறுத்தி விட்டு, ''அநந்தமதி

ஜகசிற்பியன்

எங்கே?'' என்று கேட்டுக்கொண்டே மெள்ளத் திரும்பினான். கதவுக்குப் பின்னால் ஒதுங்கி நின்றுகொண்டிருந்த அநந்தமதி அவசரமாக வெளியே வந்து பணிவுடன் அவனைப் பார்த்தாள்.

''நான் பல்லவபுரத்துக்குச் சென்ற சேதி உனக்கு எப்படித் தெரியும்? எங்கிருந்து நீ என்னைப் பின்தொடர்ந்து வந்தாய்?''

''இன்று காலை இங்கு வந்த பெரும்பிடுகு முத்தரையர் என்னை இங்கு அனுப்பி வைத்தார், அரசே! காய்கறி விற்பவளாக இலவந்திகைப் பள்ளிக்குச் சென்று தங்களைக் கண்காணித்துக் கொண்டிருந்தேன்.....''

''என் பொருட்டு யாருடைய உயிரையும் பணயம் வைத்து எவ்வித காரியமும் செய்ய வேண்டாம் என்று பலமுறை நான் சொல்லியிருந்தும் அவர் ஏன் அதைக் கேளாமல் இம்மாதிரி அநாவசிய முயற்சிகளில் ஈடுபடுகிறார்?'' என்று கடுமையான குரலில் கேட்டான் பரமேசுவரவர்மன்.

பயந்து நடுங்கிய அநந்தமதி, ''மன்னியுங்கள், அரசே! தங்களுக்காக மட்டுமல்ல; எங்களின் நல்வாழ்வுக்காகவும் நாங்கள் இத்தகைய உயிராபத்தான பணிகளில் ஈடுபட வேண்டியிருக்கிறது'' என்று குழறிச் சொன்னாள்.

''ஓ! .... நீ ஆபத்துதவி இளங்காரிக்குடையானைப் பெற்றவள் அல்லவா? அப்படித்தான் பேசுவாய்!''—விரக்தியுடன் சொன்ன பல்லவ மன்னன் இளங்கோப்பிச்சியின் பக்கம் திரும்பி, ''இங்கு என் இளவல் கோவிந்தவர்மன் வந்ததாகக் கேள்விப்பட்டேனே, அவன் இருக்கிறானா?'' என்று வினவினான்.

அவன் குரலில் அவனையும் மீறிய ஓர் ஆவலும் பாசமும் கலவையிட்டதை அறிந்து உள்ளூற வியப்புற்ற இளங்கோப்பிச்சி, ''இன்று காலையில் அவர் பெரும்பிடுகு முத்தரையருடன் சேர்ந்து பழையாறைக்குப் போயிருக்கிறார், அரசே!'' என்றாள்.

''அவர்கள் ஏன் அங்கு போக வேண்டும்? எல்லாம் வீண் முயற்சி!'' என்று முணுமுணுத்துக்கொண்டே எழுந்து நின்ற பரமேசுவர வர்மன், அவளைப் பார்த்து அமைதியாகக் கூறினான்: ''இளவரசி! உன்னுடைய மாசற்ற நோக்கத்தையும், அதற்காக நீ மேற்கொண்ட பல துணிகரக் காரியங்களையும் நான் ஓரளவு அறிவேன். ஆனால், அவை அனைத்தும் விழலுக்கு இறைத்த நீராகப் போகப் போகிறதே என்பதை நினைக்கும்போது உண்மையாகவே என் மனம் வருந்திக் கலங்குகிறது. பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையில் சிறைப்பட்டிருந்த என் அருமைத் தம்பியை நீ வெளியேற்றிக் கொண்டு வராமல் இருந்திருந்தால், அவன் இன்னும் கொஞ்ச காலமாவது பகைவரின் பாதுகாப்பிலே பத்திரமாக உயிர் வாழ்ந்திருப்பான். அந்தப் பாதுகாப்பை விட்டு அவன் வெளியே வந்ததால் இப்போது ஒவ்வொரு விநாடியும் உயிராபத்தை எதிர்நோக்கிக் கொண்டே ஊர் ஊராகச் சுற்றியலைய வேண்டிய ஒரு பரிதாப நிலை அவனுக்கு ஏற்பட்டு விட்டிருக்கிறது. இதற்காகக்கூட நான் கவலைப்படவில்லை; எதையும் எண்ணிப் பாராமல் உணர்ச்சி வயப்படக் கூடிய அந்த அவசரக்காரன் உன்னை ஏதேனும் ஆபத்தில் சிக்க வைத்து, அதனால் அவனுக்கும் எனக்கும் தீராப் பழியை உண்டுபண்ணி விடுவானோ என்று எண்ணியே நான் பெரிதும் கவலையுறுகிறேன். இவ்வளவையும் இங்கே சொல்வதற்குக் காரணம், நீங்களெல்லாம் ஏதோ ஒன்றைப் பெரிதாக எண்ணிக் கொண்டு அதன் மீது உங்களின் தீவிர முயற்சிகளைத் தொடர முற்படுகிறீர்கள். ஆனால், அந்த 'ஒன்றோ' நீங்கள் நினைப்பதுபோல் இருக்கவில்லை. அது வேறு முடிவில் இருந்து வருகிறது. இப்போதைக்கு நான் சொல்ல விரும்புவது இவ்வளவே.''

அனலிடைப்பட்ட மெழுகுச் சிலையென உருவழிந்து நின்ற இளங்கோப்பிச்சி, துயரம் தாளமாட்டாமல் விம்மிப் பொருமினாள்.

பரமேசுவர வர்மனின் கண்களும் நீர்ப் போர்வையிட்டுப் பனித்திட்டன. அந்தப் பளபளப்பைத் தன் இமைகளைத் தாழ்த்தி மறைத்துக்கொண்ட அவன் அங்கிருந்து புறப்படத் திரும்பினான்.

கூனிக் குறுகி நின்று கொண்டிருந்த அநந்தமதி சட்டென்று முன்னால் போய், ''மன்னரவர்கள் இப்போது பெருவளநல்லூர்ச் சேதியக் கிழவரின் இல்லத்துக்குத்தானே போகிறார்?'' என்று நடுங்கிய குரலில் கேட்டாள்.

''இல்லை; அவருடைய இல்லத்தில் இனியும் நான் தங்கியிருந்து அவருக்குச் சிரமம் தர விரும்பவில்லை.''

''அவ்வாறானால், இப்போது மன்னரவர்கள்?....''

''எங்கே போகிறேன் என்று எனக்கே தெரியாது.''

அவன் மெள்ள நடக்கலானான்.

''சளுக்கியத் தளபதி தங்களைப் பல்லவபுரத்துக்கு அழைத்த காரணம் என்ன என்று முத்தரையர் வந்து கேட்டால்?''—அநந்தமதி அவனைப் பின்

எழிலின் எல்லையை எட்ட...

# "'ஹேஸலின்' ஸ்னோ"

மேனிக்கு மென்மையாக மெருகிடுவதிலே தன்னிகரற்றது
"'ஹேஸலின்' ஸ்னோ." மென்மையான,
எண்ணெய்ப் பசையற்ற இவ்வழகுப் பொருள்
சருமத்துக்கு மழமழப்பையும் வனப்பையும் ஊட்டுகிறது.
பவுடர் படிவதற்கெனவோ அல்லது தனிப்பட்ட
முறையிலோ உபயோகித்து உங்கள் சருமத்துக்குப்
பொலிவுடன் கூடிய பாதுகாப்பை அளியுங்கள்.
**"'ஹேஸலின்' ஸ்னோ"** அரம்பையர் குலத்தின்
பாரம்பரை அழகுசாதனம்.




பர்ரோஸ் வெல்கம்
தயாரிப்பு



BWY-11-TAM

தொடர்ந்து கொண்டே இவ்வாறு வினவினாள்.

"என்னைத் தேடிக் கண்டுபிடிப்பதற்காக, என்னுடைய உருவத்தை வரைந்து கொடுக்கும்படி, என்னிடமே கேட்டான் என்று சொல்!"

"மன்னரவர்கள் அதற்கு?..."

"மறுப்புச் சொல்லவில்லை."

"தாங்களே தங்கள் உருவ ஓவியத்தைத் தீட்டிக் கொடுத்து விட்டீர்களா......?"

'ஆம்' என்று புன்னகை பூத்தான் பரமேசுவர வர்மன்.

"அப்படியானால் அரசரவர்கள்...."

"அங்கிருந்து உயிருடன் வெளியே வந்திருக்கிறேனே என்று ஆச்சரியப்படுகிறாயா? வரிப் புலிகள் வாழும் காட்டில் மாசற்ற மான்களும் இருப்பதுண்டு என்று உண்மையை என் மனத்திலே பதிய வைப்பதற்காக இறைவன் ஓர் அதிசயத்தை நிகழ்த்திக் காட்டியிருக்கிறான்!" — கழுத்தில் கிடந்த சவுக்கைக்காய் மாலையைக் கையில் எடுத்து வருடிக் கொண்டே தன்னை மறந்து சிரித்தான் பரமேசுவர வர்மன்.

இவ்வளவு நேரம் எழுதி நிறுத்திய சித்திரம் போல் எவ்வித ஆட்ட அசைவுமின்றி நின்று கொண்டிருந்த அந்தச் சாலையோரப் பவழமல்லி மரம் ஏனோ இப்போது கலகலவெனக் குலுங்கிப் பூக்களை உதிர்த்தது.

அவனுக்குப் பின்னால் திக்பிரமையுற்று நின்று கொண்டிருந்தவர்களைப் பார்த்துப் புன்முறுவல் பூத்த பரமேசுவர வர்மன், அங்கிருந்து சாலையில் இறங்கி நடந்தான்.

அவனது நெடிய உருவம் இருளில் மறையும் வரையில் சிலையாகச் சமைந்து நின்ற அநந்தமதி சரேலெனத் திரும்பி இல்லத்துக்குள் விரைந்தாள். சித்திரத் திண்ணைத் தூணில் வாடித் துவண்டு சாய்ந்து கொண்டிருந்த இளங்கோப் பிச்சியும் அவளைப் பின்தொடர்ந்தாள்.

"இளவரசி! நான் இப்போதே பெருவள நல்லூருக்குப் புறப்பட வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே தன் ஆடையணிகள் சிலவற்றை எடுத்து மூட்டை கட்ட ஆரம்பித்தாள் அநந்தமதி.

இதைக் கேட்டுத் திகிலடைந்த இளங்கோப்பிச்சி, "என்ன! இந்த இரவு நேரத்திலா புறப்படப் போகிறீர்கள்?" என்று அடைத்த குரலில் கேட்டாள்.

"ஆம், அம்மணி! பல்லவ மன்னர் கடைசியாகச் சொல்லிச் சென்ற விவரத்தை நான் உடனடியாகச் சேயக் கலைஞரிடம் போய்த் தெரிவித்தாக வேண்டும். அவர் மூலம் அதை மறைத் தலைவரின் செவிக்கு எட்டும்படியாகச் செய்ய வேண்டும். இல்லையானால், நாம் எல்லாம் பார்க்க முடியாத பல விபரீதங்கள் நிகழ்ந்து விடும் போல் தோன்றுகிறது."

அநந்தமதி சொன்னதை ஒப்புக் கொள்ளும் பாவனையில் தலையைத் தூக்கிக் கொண்ட இளங்கோப்பிச்சி, சற்று நேரம் எதைப் பற்றியோ ஆழ்ந்து சிந்திப்பவளாய் இருந்துவிட்டுப் பின் தணிந்த குரலில், "நீங்கள் சொல்வது சரிதானம்மா! அத்துடன் எனக்கும் ஒரு யோசனை தோன்றுகிறது...." என்று இழுத்தாள்.

"சொல்லுங்கள், இளவரசி!"

"சேயக் கலைஞரிடம் நீங்கள் தெரிவித்தாக வேண்டிய அந்தச் செய்தியை, எங்கள் ஆபத்துதவி வீரனை சம்புவராயனிடம் சொல்லி அனுப்பினால், அதை அவன் உங்களைவிடச் சீக்கிரமாகவும் பத்திரமாகவும் எடுத்துப் போய்ச் சேர்த்து விடுவானல்லவா?"

"இது நல்ல யோசனைதான்; ஆனால், சம்புவராயர் இதற்குச் சம்மதிக்க வேண்டுமே!"

"பழையாறைக்கு என்னை அழைத்துப் போவதற்காக வந்திருக்கும் அவன், இந்தச் செய்தியைப் பெருவள நல்லூருக்கு எடுத்துச் செல்ல மாட்டான் என்கிறீர்களா?"

"ஆம், அம்மணி! இன்று காலை முதலே உங்களைப் பழையாறைக்குப் பயணப்படும்படி அவர் வற்புறுத்திக் கொண்டிருக்கிறார். என்னிடம் சொல்லிக் கொண்டு புறப்பட வேண்டும் என்பதற்காக, என் வருகையை எதிர்

இன்னல் வந்துற்றிடும் போததற்கஞ்சோம்;
ஏழையராகி இனி மண்ணிற்றுஞ்சோம்.
தன்னலம் பேணி இழிதொழில் புரியோம்,
தாய்த்திரு நாடெனில் இனிக்கையை விரியோம்.



பார்த்து அவரை நீங்கள் நிறுத்தி வைத்திருந்தீர்கள். இந்த நிலையில், அவர் இப்போது பெருவளநல்லூருக்குப் போக ஒப்புக் கொள்வாரா?''

''இல்லை; நான் பயணப்படாமல் இருந்ததற்குக் காரணமே வேறு!'' என்று மெல்ல முணுமுணுத்த இளங்கோப்பிச்சி, ''சரி; அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம். நான் அவனைப் பெருவளநல்லூருக்குப் போய் வரும்படி செய்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டே வாசல் பக்கம் சென்றாள்.

அநந்தமதி நினைத்தது போலவே ஆபத்துதவி சம்புவராயன் பெருவளநல்லூருக்குப் போக மறுத்து விட்டான். பழையாறைச் சோழரின் கட்டளையை நிறைவேற்ற வேண்டுமென்பதிலேயே அவன் பிடிவாதமாயிருந்தான். இளங்கோப்பிச்சியோ, தான் இடும் பணியை நிறைவேற்றி விட்டு வந்தால்தான் அவனுடன் பழையாறைக்குப் பயணப்பட முடியும் என்று உறுதியாகச் சொல்லி விடவே, அவன் அங்கிருந்து அரை மனத்தோடு சேதியக் கலைஞரின் இல்லத்துக்குப் புறப்பட்டுச் சென்றான்.

ஓரளவு மன அமைதி பெற்ற அநந்தமதி உறங்கப் போய் விட்டாள். ஆனால் இளங்கோப்பிச்சி உறங்கியே அறியாதவள்போல் தன் அறையில் உட்கார்ந்து, விம்முவதும் பொருமுவதும் ஏங்கிப் பெருமூச்சு விடுவதுமாக நேரத்தைக் கரைத்துக் கொண்டிருந்தாள்.

இராச் சாமம் கழிந்து விடியற்போது மலரப் போகிறது என்பதற்கு அறிகுறியாக எங்கோ ஓர் ஒற்றைக் கோழி கூவும் ஒலி கேட்டது.

அந்தக் கோழியின் கூவலுக்காகவே காத்திருந்தவள் போல் துடிப்புற்று எழுந்தாள் இளங்கோப்பிச்சி. கண்ணீரால் நனைந்திருந்த தன் முகத்தைத் துடைத்துக் கொண்டு, அடி மேல் அடி வைத்துப் போய் அநந்தமதி படுத்திருந்த அறைக்குள் எட்டிப் பார்த்தாள். அவள் அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்கிறாள் என்பதை நிச்சயப்படுத்திக்கொண்டு தன் அறைக்கே திரும்பி வந்து, இரவெல்லாம் சிந்தித்தது போதாதென்று இப்போதும் சிறு பொழுது சிந்தனையில் ஆழ்ந்தாள்; பிறகு தன்னையே உறுதிப்படுத்திக் கொள்கிறவள்போல் விரக்திப் புன்னகையொன்று பூத்துக் கொண்டவளாய், அங்கிருந்து வெளியேறும் நோக்கத்துடன், தான் இருந்த அறையைக் கடந்து கூடத்து அறையில் காலெடுத்து வைத்தாள்.

அதே சமயம், அந்த இல்லத்தின் வெளி வாசல் கதவை யாரோ முரட்டுத்தனமாகத் தடதடவென்று தட்டும் சத்தம் கேட்டது.

### அத்தியாயம் முப்பது

## எதிர்பார்த்த பேரிடி!

'சேரின் மேவிய செழுமணி வீதிகள் சிறந்து – பாரில் நீடிய பெருமை சேர் பழம்பதி'யான பழையாறை நகரின் 'சோழ மாளிகை' என்னும் பகுதியிலே அமைந்த அரண்மனை ஆலோசனைக் கூடத்தில்,—

''இறுதியாகத் தங்கள் முடிவுதான் என்ன?'' என்று அழுத்தம் திருத்தமாகக் கேட்டுக்கொண்டே தம் ஆசனத்தை விட்டு எழுந்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

''இவ்வளவு நேரம் நான் சொன்னதையெல்லாம் என் முடிவான முடிவுகளாகவே நீங்கள் எடுத்துக் கொள்ளலாம்!'' என்று அலட்சியமாகச் சொல்லித் தம் இருக்கையில் ஒருக்கழித்துச் சாய்ந்தார் பழையாறைச் சோழர்.

இடுப்பின்மேல் இடக்கையை ஊன்றிக் கொண்டு அவரையே ஒரு கணம் உற்றுப் பார்த்த முத்தரையர், ''அதாவது, எங்கள் கூட்டுறவிலிருந்து கழன்றுபோய், சளுக்கிய விக்கிரமாதித்தனுடன் ஒட்டிக் கொள்ளப் போகிறீர்கள், அப்படித்தானே?'' என்று அடித்தொண்டையில் விளித்தார்.

''அதுதான் எனது சாதுர்யமான முடிவு!'' என்று சாவதானமாக விளம்பினார் சோழச் சிற்றரசர்.

''பல்லவ மன்னருடன் இனிப் பங்காளியாக இருந்து பயனில்லை என்பதால்தானே?''

''அதில் எள்ளத்தனையும் எனக்குச் சந்தேகமில்லை.''

''பரமேசுவர வர்மர் இப்போது வில்வேலியால் வரவழைக்கப்பட்டுப் பல்லவபுரம் போயிருக்கிறார் என்பதாலும், அங்கே அவர் எப்படியும் எதிரிகள் கையில் சிக்கிக் கொள்வார் என்பதாலும்தான் நீங்கள் இந்த முடிவுக்கு வந்திருக்கிறீர்களோ?''

''இல்லை, நண்பரே! இவ்வாறெல்லாம் நடக்கும் என்று எனக்கு ஏற்கனவே தெரியும். மண்டபப்பட்டுக்




## ஐடெக்ஸ்
## கண் மை
## அரவிந்த் பிந்தி
## குங்கும் சாந்து



அரவிந்த் லாபரட்டரீஸ்
தபால் பெட்டி 1416 மதராஸ் 17

---

# Kalinga tubes
*for*
**WATER & GAS**




பிரிட்டிஷ் தர நிர்ணயத் திட்டப்படி
மற்றும் முலாம் பூசப்பட்ட
உயர்ந்த ரக எஃகு குழாய்கள்

## கலிங்கா டியூப்ஸ் லிட்.
33, சித்தரஞ்சன் அவின்யூ, கல்கத்தா-12
தொழிற்சாலை: சௌத்வார், கட்டாக், ஒரிஸ்ஸா

---

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# அருணா
ஸ்திரீகள் ஆரோக்ய
சௌபாக்யத்திற்கு

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிட்.
சென்னை-17

குகைக் கோயிலில் உங்களையும் பல்லவ இளவரசனையும் சந்தித்த அன்றே நான் இந்தத் தீர்மானத்துக்கு வந்து விட்டேன்.''

''பரமேசுவர வர்மரின்மேல் நீங்கள் நம்பிக்கை இழந்ததற்குக் காரணம் என்ன?''

''அவர் வயதில் மிக இளைஞர். வாழ்க்கையின் உண்மைகளை மேலோட்டமாகப் பார்ப்பவர். அரசியல் விவேகமற்றவர். நீதி — நேர்மை — தர்மம்—நியாயம் என்ற பெயரில் கோழைத்தனத்தை வளர்ப்பவர். அடிமைப்பட்டுக் கிடக்கும் மக்களின் துயரத்தை ஆற்ற வேண்டுமென்ற எண்ணமே இல்லாதவர். தாம் மட்டும் நிம்மதியாக இருந்தால் போதும் என்று நினைக்கும் சுயநலக்காரர். புகலிடம் தேடிப் புகுந்திருக்கிறோமே என்பது பற்றிச் சிறிதும் வெட்கப்படாதவர். இவை எல்லாவற்றுக்கும் மேலாக, அளவு மீறிய தெய்வ பக்தியால் தம்மிடமிருந்த கொஞ்சநஞ்ச வீர உணர்ச்சியையும் வழித்தெறிந்துவிட்டு நிற்பவர். தமக்காக மற்றவர்கள் செய்யும் நன்முயற்சி காரியங்களுக்குக் கூட ஊக்கமோ உற்சாகமோ உடன்பாடோ தராமல் அலட்சியப்படுத்தி விட்டு ஒதுங்கிப் போக நினைப்பவர். ஆட்சிப் பீடத்துக்குச் சிறிதும் ஒவ்வாத துறவு மனப்பான்மை கொண்டவர். இத்தகைய ஒரு வெறும் மனிதரை யார் தாம் நம்ப முடியும்? என் மன மாற்றத்துக்கு இவையே காரணங்கள்.''

பல்லவ மன்னன் மீது பழையாறைச் சோழர் வரிசைப்படுத்திக் காட்டிய இந்தக் குணக் கேடுகள் அனைத்தும் தம்மையே குறிப்பிட்டுச் சொன்னாற்போல் மனம் குமுறிக் கொந்தளித்த பெரும்பிடுகு முத்தரையர், தீயுருண்டைகளாகச் சிவந்த தம் கண்களை உருட்டிப் புரட்டி அவரை விழித்துப் பார்த்தவாறு, ''ஆமாம்; சளுக்கிய விக்கிரமாதித்தனே உங்களைத் தன்னுடன் வளைத்துக்கொள்ள முயற்சி செய்தானா அல்லது நீங்களே அவனிடம் போய்ச் சரணடைந்தீர்களா?'' என்று வெறித்த குரலில் வினவினார்.

கடகடவென்று நகைத்த பழையாறைச் சோழர் செருக்குடன் தலை நிமிர்ந்து சொன்னார்: ''விக்கிரமாதித்தனுக்கும் எனக்கும் இதுவரையில் யாதொரு தொடர்பும் ஏற்படவில்லை. பல்லவபுரத்தில் தங்கியிருக்கும் தளபதி வில்வேலியிடம் நானே நேரில் சென்று எனது இந்த மனமாற்றத்தை மிகத் தாழ்மையாகத் தெரிவித்தேன். மகிழ்ந்து போன அவன், உடனே என் விண்ணப்பத்தை ஏற்றுக் கொண்டான். உறையூரில் இருக்கும் விக்கிரமாதித்தன் இன்னும் சில தினங்களில் பல்லவபுரத்துக்கு விஜயம் செய்யப் போகிறான் என்றும், அப்போது அவனிடம் இது பற்றிக் கலந்து பேசி ஓர் உயர்வான முடிவுடன் எனக்கு அழைப்பு அனுப்புவதாகவும் உறுதியளித்தான்.''

அனற் சுவாலையால் சுட்டுப் பொசுங்கியவர் போல் அப்படியும் இப்படியுமாகத் தம் உடம்பை நெளித்து முறுக்கிய முத்தரையர், ''ஓகோ! நேற்றைய தினம் இந்த உறுதிமொழியை வாங்கிக் கொண்டுதான், பல்லவபுரச் சாலையிலே சளுக்கிய வீரர்களின் பக்கத் துணையோடு அத்தனை படுவேகமாகப் பறந்து வந்தீர்களோ?'' என்று சினம் செறிந்த ஏளனத்துடன் கேட்டார். ''பழம் பெரும் சூரிய குலத்தில் தோன்றியவர் என்றும், பார் புகழ் கொண்ட மனுநீதிச் சோழன், கரிகால் பெருவளத்தான் ஆகியோரது பரம்பரையில் வந்தவரென்றும் அடிக்கடி பெருமை பேசிக்கொள்ளும் நீங்கள், கேவலம் இந்தக் கையகலச் சிறு நாட்டின் அரசுக் கட்டிலை நிலைநிறுத்திக் கொள்ள வேண்டும் என்பதற்காக, ஆதிக்க வெறி கொண்ட அந்நியனொருவனிடம் போய் மண்டியிட்டு உறவு கொள்ளத் துணிந்தது பற்றிக் கொஞ்சமும் வெட்கப்படாமல் இருப்பது எனக்கு விந்தையாக மட்டுமல்ல; வேதனையாகவும் இருக்கிறது!''



சடாரெனத் துள்ளி யெழுந்தார் பழையாறைச் சோழர். "ஆஹாஹ்ஹஹா! வெட்கமாம், வேதனையாம்! எதற்காக நான் வெட்கமும் வேதனையும் பட வேண்டும்? சளுக்கிய விக்கிரமாதித்தன் ஓர் அந்நியனென்றால், இந்தப் பல்லவ பரமேசுவரவர்மரும் எனக்கு அந்நியர்தான்! இவருடைய மூதாதையர் ஸ்தாபித்து வைத்த பல்லவ சாம்ராஜ்யம் எங்கிருந்து வந்ததாம்? எல்லாம் எங்கள் சோழ-பாண்டியர்களது சொத்தைப் பறித்துத்தானே பேரரசு கண்டான் சிம்மவிஷ்ணு? ஒரு காலத்திலே சாம்ராட்டுகளாக விளங்கிய நாங்கள், இந்தப் பல்லவர்களின் தலையெடுப்பால் சிற்றரசர் நிலைக்குத் தாழ்ந்து, கடந்த பல தலைமுறைகளாக அவர்களுக்குக் கப்பம் கட்டிச் சேவகம் செய்கிறோமே, இதற்காக அல்லவா நான் வெட்கமும் வேதனையும் கொள்ள வேண்டும்? பல்லவ நாட்டைக் கைப்பற்றியிருக்கும் விக்கிரமாதித்தனை விரட்டி விட்டு, மீண்டும் பரமேசுவரவர்மரைச் சக்கரவர்த்தியாக்கி விட்டால் மட்டும் என்னுடைய நிலை உயர்ந்து விடுமா? அப்போதும் இந்தப் பல்லவரின் கீழ் நான் குறுநில மன்னனாகத்தானே இருந்தாக வேண்டும்? அப்படியிருப்பதற்காக, இப்போதுள்ள ஒரு பலம் பொருந்திய மன்னனைப் பகைத்துக் கொள்வதும், அதனால் பல தொல்லைகளை ஏற்றுக் கொள்ளுவதும் பைத்தியக்காரத்தனம் அல்லவா? இன்றைய அரசியல் போக்கில் என்னுடைய திட்டம் வெற்றி பெற்றால், நானே கூடப் பழையாறைச் சிற்றரசன் என்ற நிலை மாறி, சோழ சாம்

ராஜ்யத்தின் சக்கரவர்த்தி என்னும் பெருமைக்கு உயர்ந்தாலும் உயரலாம்! அந்த அரிய சந்தர்ப்பத்தை நான் ஏன் இழக்க வேண்டும்? வெட்கமாம், வெட்கம்! யாருக்கு வெட்கம்? யாருக்கு வேதனை? வழி வழியாகச் சிற்றரசர்களாகவே இருந்து, பேரரசர்களுக்குத் திறை செலுத்திச் செலுத்திப் பழக்கப்பட்டுப் போன உங்களைப் போன்றவர்களுக்குத்தான் அது வெட்கமாகவும் வேதனையாகவும் இருக்கலாம்; ஆனால், பாராண்ட பரம்பரையிலே வந்த எனக்கு அதில் என்னத்தனை இழிவு தாழ்வும் இல்லை!''—மிடுக்கும் செருக்குமாக இவ்வாறு பொழிந்து தள்ளிய அவர், தம் ஆசனத்தில் போய்க் கம்பீரமாக அமர்ந்தார்.

முத்தரையரின் முகம் கன்றிச் சுருங்கியது. 'இந்த இருதயமற்ற மனிதரைப் பற்றியா அன்று சேதியக் கலைஞர் அத்தனை உயர்வாகப் பேசினார்? இவரைப் புரிந்து கொள்வது கடினம் என்று சொன்னாரே, இவரைப் புரிந்து கொள்ள என்ன இருக்கிறது?' என்று எண்ணி உள்ளூறப் புழுங்கி மறுகிய அவர், ''அது சரி, அன்பரே! உங்களுடைய இந்தச் சுயநல முடிவினால் உங்களிடமுள்ள மண்ணளவும் பொன்னளவும் ஆட்சியதிகார அளவும் விரியலாம், பெருகலாம், உயரலாம். ஆனால் உங்கள் சமய வாழ்வு சீரழியப் போகிறதே, அதைப் பற்றி நீங்கள் சிந்தித்துப் பார்த்தீர்களா? விக்கிரமாதித்த வல்லபன் தன் தம்பி மகளான உத்தமசீலி என்பவளைக் கொண்டு இந்நாட்டிலே செய்யவிருக்கும் காரியம் என்ன என்பதை, வேங்கி மன்னனது ஓலையின் வாயிலாக அறிந்திருக்கும் நீங்கள் அது பற்றி எண்ணிப் பார்க்கவே இல்லையா? தலைமுறை தலைமுறையாகச் சைவ சமயத்தை ஏற்றுப் போற்றிப் பேணி வரும் நீங்கள்,—சைவப் பணியே தம் பிறவியின் நோக்கமாக வாழ்ந்து மறைந்த மணிமுடிச் சோழர் என்னும் செங்கதிர்ச் சென்னியின் செல்வக் குமாரரான நீங்கள், — சைவத்துக்காகச் சர்வ பரித்தியாகமும் செய்து வரும் பாண்டியப் பேரரசி மங்கையர்க்கரசியின் சகோதரரான நீங்கள், — சமணராக இருந்து பின் சைவராக மாறி, ஞானப் பிள்ளையாம் திருஞானசம்பந்தப் பெருமானைக் கொண்டு சமணருடன் அனல் வாதம் புனல் வாதம் நடத்தச் செய்து சைவத்தைத் தம் நாட்டிலே குன்றிட்ட விளக்காக்கி வைத்திருக்கும் பாண்டியப் பேரரசரான நின்றசீர் நெடுமாறனை மைத்துனராகக் கொண்ட நீங்கள், இங்கே விக்கிரமாதித்தனின் ஆட்சி வேரூன்றினால் என்ன நடக்கும் என்பதை யோசித்துப் பார்க்கவே இல்லையா?'' என்று உணர்ச்சிக் கறை பேறிய குரலில் விம்மிக் கேட்டார்.

இடி இடிப்பது போன்ற கடகட வென்ற சிரிப்பொலி — பழையாறைச் சோழர்தான் அப்படிச் சிரித்தார். ''என் அருமை நண்பரே! சைவத்தைப் பற்றியும் அதன் எதிர்கால வாழ்வைப் பற்றியும் எனக்கு நினைவூட்ட நீங்கள் யார்? வழி வழியாகச் சமணராக இருக்கும் நீங்களா அதை என்னிடம் வந்து சொல்வது? சமயத்தின் பெயரால் எனது மாட்சிமிக்க எதிர் காலத்தைச் சாய்க்கப் பார்க்கிறீர்களோ?''

அவமானத்தால் உடல் குன்றிப் போன முத்தரையரின் முகம் பாறையாக இறுகிக் கறுத்தது. பேச்சிழந்த நிலையில் சற்று நேரம் மௌனமாயிருந்த அவர், எப்படியோ தம்மைச் சமாளித்துக் கொண்டு, இறுதி முயற்சியொன்றில் ஈடுபட முனைகிறவர்போல் தயக்கத்துடன் தலை நிமிர்ந்து, ''சரி, அன்பரே! இதெல்லாம் உங்கள் வரை நியாயமாகவே இருக்கலாம். ஆனால், நீங்கள் உயிரினும் மேலாக மதித்து வரும் உங்களது செல்வக் குமாரி இளங்கோப்பிச்சியின் எதிர்காலத்தைப் பற்றிய நிலை என்ன? உங்கள் மன மாற்றத்தினால் அவளுடைய வாழ்க்கையிலே ஏற்படக் கூடிய பயங்கர அதிர்ச்சிகளையாவது சற்றுச் சிந்தித்துப் பார்த்தீர்களா?'' என்று அமைதியாகவே கேட்டார்.

பழையாறைச் சோழரின் முகம் திடீரென்று வெளிறியது. ஆசனத்தில் சாய்ந்து தெளிந்த அவர், திடுமென்று எழுந்து நின்று, ''ஓ!... என் மகளுக்கும், பல்லவ இளவரசனான கோவிந்த வர்மனுக்கும் உள்ள தொடர்பைக் காட்டி என்னை உங்கள் வழியில் திருப்பப் பார்க்கிறீர்களா? அதைப் பற்றி சொல்லாம் நான் சிந்தித்ததோடு மட்டுமல்ல, சிறப்பானதோர் ஏற்பாட்டையுமே செய்து முடித்து வைத்திருக்கிறேன்! அதனால்தான் என் மகளை ஆலம்பாக்கத்திலிருந்து உடனே பழையாறைக்கு அழைத்து வந்து சேர்க்கும்படி, ஆபத்துதவி சம்புவராயனையும் அனுப்பி வைத்திருக்கிறேன்! இதோ பாருங்கள், இந்த ஓலையை!'' என்று ஏளனச் சிரிப்புடன் கூறிக்கொண்டே தம்மிடமிருந்த ஓர் ஓலை நறுக்கை எடுத்து நீட்டினார்.

அவ்வோலையை வாங்கிப் படித்த முத்தரையரின் முகம் விகாரமாகி வறண்டது. பரபரப்புடன் நிமிர்ந்து, ''நண்பரே, இது உண்மையா? உண்மைதானா?'' என்று நாக்குழற நடுங்கிக் கேட்டார். (தொடரும்)

# சிந்திய பாலுக்கு சிணங்குவரோ?

பலர் அப்படித்தான்! அசல் பார்ட்ஸ் கிடைக்கும்போது போலிப் பார்ட்ஸ்களை வாங்கி மோசம் போன பின் வருந்துகிறவர்களைப்போல.

ஞாபகம் இருக்கட்டும். பெர்க்கின்ஸ் இன்ஜின்களுக்கு (ரிஜிஸ்டர்டு) அசல் சிம்ப்ஸன் பார்ட்ஸ்களை மட்டுமே பொருத்துவது எப்பொழுதும் லாபகரமானது. நீடித்த உழைப்பிற்கும், திறமைக்கும், சிக்கனத்திற்கும் அதுவே ஏற்றது. உண்மையில் இவை பணத்தை மிச்சப் படுத்துகின்றன.




Simpson & Co. Ltd

தலைமை ஆபீஸ் & தொழிற்சாலை: 202/203, மவுண்ட் ரோடு, சென்னை-2

கிளைகள்: பெங்களூர் — உதகமண்டலம் — திருச்சிராப்பள்ளி — செகந்தராபாத்

S-334

# நீர்க்கோலம்

"சிந்தனையையே ஒரு வாழ்க்கை ஆக்கிக் கொண்டு விட்டவர்களுக்கு வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்க அவகாசம் ஏது?"

நினைப்பினால் எட்டித் தொடவே முடியாத பல்லாயிரம் பல்லாயிரம் கோடி ஆண்டுகளுக்கு முன்னால் யுக யுகாந்தரங்களின் எல்லையைக் கடந்த காலத்தின் பெரும் பரப்பில் ஏதோ ஒரு நாள் ஏதோ ஒரு வைகறை நேரம்.

இந்த மண்ணில் நாள் தவறாமல் எந்த அதிசயத்தையோ தேடிக் கொண்டு உதிப்பதைப்போல் உதிக்கிற கதிரவன் இன்னும்சிறிது நேரத்தில் சோதிக் கோலமாய் மேலெழுந்து புறப்பட்டு விடுவான். அதோ கிழக்கே அடிவானத்துப் படுகையில் குங்கும வெள்ளம். கீழ் வானத்தின் அந்த நிறங்களில் குங்குமச் சிவப்பு மட்டுமே இல்லை. பொன் உருகி ஓடையாய்ப் பரவுவது போல் ஒரு பகுதி. மஞ்சளும், குங்குமமும் ஆறாகப் பெருகிக் கலப்பது போல் ஒரு பகுதி. கண்ணுக்கு எட்டிய தொலைவு வரை சிவப்பு இரத்தினக் கற்களைப் பொடி செய்து தூவினாற் போல் ஒரு பகுதி — இப்படி உதயத்துக்கு முன்பே உதயமாகிக் கிடந்த பேரழகுகளை வகிர்ந்து கொண்டு கதிரவனும் உதிக்கப் போகிறான். பூத்திருக்கும் பூக்களின் மணங்களை எல்லாம் அவசரமாக வாரிக் கொள்ளையடித்துக் கொண்டு ஓடுவது போல் விடிகாலைப் பனிக் காற்று வீசிக் கொண்டிருக்கிறது. பேதா பேதம் நிறைந்த பல வகைப் பறவைகளின் குரல் ஒலி. செவிகளில் அமுத மழைபொழியக் கேட்கும் முனிவர்களின் வேத முழக்கம். தீர்க்கமாகவும், தணிந்தும் ஏறி இறங்கி ஒலிக்கும் மறை ஒலிகள் வனம் நிறையத் தூய்மையை அள்ளித் தெளிப்பது போல் கேட்கின்றன. சற்றே ஒலி வேறு பட்டுப் பிரிந்து கொஞ்சம்





சாம கானம்; நதிகள் பாயும் கலகல சப்தம். மரங்கள் ஆடும் ஓசை. இலைகள் உதிரும் அழகு. பூக்கள் ஓசைப்படாமல் பூத்திருக்கும் இரகசியம், காற்றிலும் பசுமை மணக்கும் இந்தக் காட்டின் வனப்பு — எல்லாம் அழகு தான். எல்லாம் இயற்கை தான். இந்தக் காட்டின் அடர்த்தியில் தான் எத்துணைப் பசுமைச் செறிவு? என்ன அருமையான சூழ்நிலை?

இதுதான் நைமிசாரண்ய வனம்! உயர்ந்த வேப்ப மரங்கள், அடர்ந்த செடி கொடிகள், குளிர்ந்த ஆறுகள், கனிந்த சூழ்நிலை,—இது வெறும் காடுதானா? அல்லது இன்பமும், அமைதியும், புனிதமும், புண்ணியமும், அறமும் அருளும் ஒருங்கே செழித்தோங்குவதற்கென்றே ஏதாவதொரு தெய்வம் தன்னுடைய பிரத்தியேகக் கவனத்தின் கீழ் இந்த இடத்தை உருவாக்கி வைத்திருக்கிறதா?' — என்று எண்ணத் தருந்ததாக அமைந்திருந்தது காட்டின் அழகு.

காய்ந்த தருப்பைப் புற்களில் வேயப்பட்ட இந்தக் குடிசைகள் — இவை யாருடையவை? ஆடம்பரமற்ற அழகிய இந்தக் குடிசைகளின் தோற்றத்திலிருந்து ஏதோ ஒரு பொருள் நம்மைக் கவருகின்றதே; அது என்ன? ஆன்மாவை இறுகத் தழுவிக் குளிக்க வைக்கும் ஏதோ ஒரு பேரொளி இந்த வனம் முழுவதும் வியாபித்திருக்கிறது போலும். வாழ்க அந்தப் பேரொளி. அதற்கு வணக்கம் செலுத்தி விட்டு இந்த வனத்துக்குள் நுழைவோம். முனிவர்களின் ஆசிரமங்களாகிய அந்தக் குடிசைகளிலே மங்கல விளக்குகளின் ஒளி, தூபங்களின் நறுமணம், பூக்களின் தண்மை — எல்லாம் சேர்ந்து கோவிலின் அமைதியை நல்கியிருந்தன. உண்மையில் அவை கோவில்கள்தாமே?

மூத்த முனிவர்களும், அவர்களுடைய தர்மபத்தினிகளும், முனிகுமாரர்களும், முனிகுமாரிகளும், தத்தம் வைகறைக் கடன்களை முடித்துக் கொண்டிருக்கிறார்கள். காலை நேரமே ஒரு பூவாகப் பூத்துப் பொலிந்து கொண்டிருக்கிறது. எங்கும் அமைதி. எங்கும் அருள், எங்கும் இன்பம், எங்கும் தெய்விகம், எங்கும் தவம்.-அந்த வனத்தில் நிறைந்திருந்தவை இவை அல்லது அந்த வனத்தை நிறைத்திருந்தவை இவை. சோம்பல், மிடி, துயரம், பேராசை, பொறாமை- அந்த வனத்தில் இல்லாதவை இவை. சுருக்கமாகச் சொல்லி விடலாம். அந்தக் காடு ஒரு காவியம் — அமைதியும் நயமும் நிறைந்த காவியம். அங்கு வசிப்பவர்களுக்கோ வாழ்க்கையே ஒரு காவியம்தான். அந்த வனத்தில் ஒவ்வோர் ஆசிரமமும் ஒரு குருகுலம்தான். ஒவ்வொரு முனிவரும் ஒரு பேராசிரியர் தான். ஒரு குடிசையிலிருந்து பண் ஒலித்தால் இன்னொரு குடிசையிலிருந்து பரதம் ஒலிக்கும். ஒரு குடிசையிலிருந்து கவிதை ஒலித்தால் இன்னொரு குடிசையிலிருந்து அலங்காரம் ஒலிக்கும்; அங்கு ஒவ்வொரு விநாடியும் வாழ்க்கையே ஞான யாத்திரைதான். அழகும் ஞானமும் ஆழமும் அமைதியுமே வாழ்க்கையாக இருக்கிற இடத்தில் தனியே அழகென்று எதைப் பிரித்துச் சொல்லுவது? தனியே சிறப்பென்று எதை விலக்கிச் சொல்லுவது? ஏற்கெனவே தோன்றிப் புகழோடிருந்த நூல்கள் எல்லாம் அங்கே கற்பிக்கப்பட்டன. இனி மேல் கற்பிக்கப்பட வேண்டிய நூல்கள் எல்லாம் அங்கே புதிதாய்த் தோன்றிக் கொண்டிருந்தன. அறிவின் எழிலும், இயற்கையின் வனப்பும் ஒன்றுபடுகிற ஞான பூமியாயிருந்தது அது.

அதோ அந்த வனத்தின் நடுவே நாணமிட்டுப் பாய்ந்தோடும் நதியின் நீரலைகளில் கிழக்குப் பக்கத்துக் கதிரவனின் செம்மையிலிருந்து பிரிந்த மற்றோர் இளங் கதிரவனைப் போல் செம்பொன் மேனி மாணிக்கச் சுடர் விரிக்க நீராடிக் கொண்டிருக்கிறானே அவன் தான் சர்வக்ஞன். வாசிக முனிவரின் புதல்வன். அவனையே ஞான குருவாகவும் கொண்டவன். முகத்தில் குழந்தைமை மாறாத அந்த இளமையிலேயே நைமிசாரணியத்தின் ஞானக் கொழுந்தாக விளங்கும் பெருமை பெற்றவன் அவன். அதிகாலையில் எழுந்து அமைதியான வனத்தில் கலகல வென்று பாயும் நதியின் நடுவே நீராடும்போதே சங்கல்பத்தையும் நீராடுவதற்குரிய மந்திர மொழிகளையும் அவனுடைய நாவு ஒலிக்கும் போது கேட்கும் செவிகளுக்கு அந்த ஒலியே ஒரு சௌபாக்கியமாக இருக்கிறது. ஆற்றின் அக்கரையில் மற்றொரு குடிசை வாயிலில் பவழ மல்லிகை மரங்கள் உதிர்த்திருந்த பூக்களைத் திரட்டிக் கொண்டிருந்த முனிகுமாரி பிரிய தர்சினிக்கோ சர்வக்ஞனின் குரல் சௌபாக்கியமாக மட்டுமின்றிச் சர்வ சௌந்தரியங்களும் ஒன்றுபடுகிற ஓர் அழகுச் சேர்க்கையாகவும் இருந்தது. தரையில் உதிர்ந்திருந்த பூக்களை அள்ளிக் கொண்டிருக்கும்போதே காதில் உதிரும் பூக்களாய்ச் சர்வக்ஞனுடைய சொற்களைக் கேட்டாள் அவள்.

# பொன்மழை

பூக்குடலைக்கும் பூக்கள் உதிர்ந்திருந்த பூமிக்கும் நடுவே தயங்கும் கையோடு ஒரு கணம் தலைநிமிர்ந்து நதிப் பக்கமாகப் பார்த்தாள் பிரியதர்சினி. இடுப்பளவு நீரில் கிழக்கு முகமாகக் கைகூப்பி நின்று கொண்டிருந்தான் சர்வக்ஞன். பொன்னில் வார்த்து நிறுத்திய ஆண் சிலை போல் தோளிலும், முகத்திலும் முத்து முத்தாய் நீர்த் துளிகள் சரிய அவன் எதையோ வழிபட்டு வணங்கிக் கொண்டிருந்தது தவிர அவனையே பிறர் வழிபட்டு வணங்கலாம் போன்ற கோலத்தில் நின்று கொண்டிருந்தான் அவன்.

அவனுக்குப் பின்னாலிருந்து சிரிப்பொலி கேட்டது. கை ஒன்று செய்ய விழி ஒன்று நாடப் பரவசத்திலிருந்த பிரியதர்சினி பயத்தோடும், வெட்கத்தோடும் பின்னால் திரும்பிப் பார்த்தாள். வயது மூத்தவரும் சர்வக்ஞனுக்கும் அவளுக்கும் குருதேவரும் ஆகிய வாகீச முனிவர் சிரித்துக்கொண்டே வந்து நின்றார்.

''பிரியதர்சினி! நீ செய்யும் காரியம் விநோதமாக அல்லவா இருக்கிறது? கரைமேல் உதிர்ந்திருக்கும் பூக்களை ஆற்றைப் பார்த்துக் கொண்டே அள்ள முடியுமா அம்மா?''

இதைக் கேட்டு நாணத்தைத் தவிர்க்க முடியாதவளாய்த் திரட்டுவதற்கு மீதமிருந்த பூக்களையும் திரட்டி ஒன்று சேர்க்க முடியாமல் விரும்பிய திசையில் ஓடிய நினைவுகளையும் அப்படி அப்படியே பின்தங்க விட்டு விட்டுக் குடிசைக்குள் ஓடி விட்டாள் அவள்.

'அற்புதமான பெண்தான் இவள்' என்று தமக்குள் மெல்லச் சொல்லிச் சிரித்துக்கொண்டார் வாகீச முனிவர். பிரியதர்சினியின் பெற்றோரும் அதே வனத்தில்தான் தவ வாழ்க்கை வாழ்ந்தார்கள். ஆனால் குழந்தைப் பருவத்திலேயே தாயையும், நினைவு தெரிகிற பருவத்தில் தந்தையையும் இழந்து விட்டாள் அவள். அதன் பின் வாகீச முனிவர்தான் அவளை வளர்த்து வந்தார். அவருடைய தவப் புதல்வன்தான் சர்வக்ஞன். ஆனால் தந்தை என்பதற்காக அவருக்கு அளித்து வந்த மதிப்பைக் காட்டிலும் இரண்டு மடங்கு மதிப்பைக் குரு என்பதற்காகவும் அவருக்கு அளித்து வந்தான் சர்வக்ஞன். இன்று நேற்று அல்ல, வாகீச முனிவருக்கு முன்னால் சுவடிகளை விரித்துக்கொண்டு கற்கத் தொடங்கிய நாளிலிருந்து அவர் தன்னுடைய தந்தை என்பதை மறந்து குரு என்ற உறவையே பெரிதாக மதிக்கக் கற்றுக் கொண்டான் சர்வக்ஞன். அந்த வனத்தின் வாழ்க்கையிலேயே மிகச் சிறந்த அநுபவம் கல்விதான். கல்வியும் ஒரு தவமாக—கல்வியும் ஒரு வழிபாடாக இருந்த காலம் அது. அந்த யுகத்தில் கற்பது ஒரு வேலையல்ல; அது ஒரு புனித அநுபவம்.

அதிகாலைக் குளிரில் எழுந்து நதி நீரில் மூழ்கித் திருவழிபாடு செய்து மலர்ந்த மனத்தோடு வாகீச முனிவருக்கு முன்னால் சர்வக்ஞனும் தானுமாகக் கற்பதற்கு அமர்ந்த நாட்களை வரிசையாகத் தனக்குள் எண்ணிப் பார்த்துக் கொண்டாள் பிரியதர்சினி. செலவழிக்காமல் சேர்த்து வைத்த பழைய நிதியை எண்ணிப் பார்ப்பது போல் அந்த நாட்களை எண்ணுவதே ஒரு சுகமாக இருந்தது. ஆனால் பக்கத்திலே அமர்ந்து கற்கும் போதும் ஓமகுண்டத்தில் எரியும் அக்கினிக்கு முன்னால் மற்றோர் அக்கினியாய் நின்று அவன் வணங்கும்போதும் 'ஓம்' என்று கம்பீரமாகத் தொடங்கி மறைகளின் வாக்கியங்களை அவன் ஒலிக்கும்போதும் அவனைப் பார்ப்பதே ஒரு சுகமாக அவள் உணர்ந்திருக்கிறாள். ஒரே தவச் சாலையில் ஒரே முனிவருடைய கண்காணிப்பில் ஒரே இடத்தில் இருந்து கற்றுக் கொண்டு வாழ்ந்தாலும் அவளும் அவனும் தனித் தனியாயிருக்கும்படி செய்திருந்தார் முனிவர். அவ்வளவிலும் வாகீச முனிவருடைய அந்தரங்கத்துக்கு ஓர் உண்மை தெரிந்துமிருந்தது. பிரியதர்சினியின் தந்தை பேதைப் பருவத்துச் சிறுமியாக அவளை வாகீச முனிவரிடம் ஒப்படைக்கும்போது, ''இவள் உங்கள் புதல்வன் சர்வக்ஞனுக்காகவே பிறந்திருக்கிறாள். இன்று இவளை உங்களிடம் ஒப்படைக்கும்போது அடைக்கலமாக மட்டும் ஒப்படைக்கவில்லை. இவள் நுழைய வேண்டிய புக்ககத்தில் இவளுடைய வாழ்க்கையை மணக்கச் செய்கிற நாயகன் பிறந்திருக்கிற இடத்திலேயே இவளை ஒப்படைக்கிறேன்'' என்று சொல்லித்தான் ஒப்படைத்திருந்தார். வாகீச முனிவரோ அவர்கள் இருவரையும் மணமக்களாக நினைத்துக் கொண்டு வளர்ப்பதை விடவும் சிறப்பாகக் கல்விப் பெருமையால் வளர்த்திருந்தார். அப்படியிருந்தும் வேறு விதமான மெல்லிய ஞாபகங்கள் தாமாகவே பிரியதர்சினியின் மனத்தில் மலர்ந்திருந்தன. அத்தகைய ஞாபகங்கள் அவள் மனத்தில் வளர்ந்து வருவதை வாகீச முனிவரும் குறிப்பாகப் புரிந்து கொண்டுதான் இருந்தார். சர்வக்ஞனைப் பற்றியும் அவர் நன்றாகப் புரிந்து கொண்டுதான் இருந்தார். உலகத்திலேயே மிகச் சிறந்தவை என்று காலமெல்லாம் போற்றப் பெறும் பார காவியங்கள் பலவற்றை எழுத வேண்டுமென்றும் அவற்றால் தன் புகழ் வாழ வேண்டுமென்றும் இலட்சியம் வகுத்துக் கொண்டிருந்தான் அவன். ஐந்திரத்தையும், பாணினீயத்தையும் உரை விளக்கம் செய்ய வேண்டுமென்று ஆசையாயிருந்தது அவனுக்கு. கவிகளுக்குப் பயன்படுகிற நவ நவமான அலங்காரங்கள் அடங்கிய நூல் ஒன்றும் அந்த அலங்காரங்களுக்கு உதாரணமாக ஆயிரம் ஆயிரம் பாடல்களும் எழுத வேண்டுமென்று தவித்தான் அவன். உடம்பாலும் ஆசைகளாலும் வாழ்வதை விடப் புகழால் வாழ்வதற்கு ஆசைப்பட்டான் சர்வக்ஞன். அவனுடைய வாழ்க்கை ஓர் ஆசையாயில்லை. அவன் ஆசையே ஒரு தனி வாழ்க்கையாயிருந்தது. அந்த வனத்தின் அமைதியிலே காற்றில் வாகை நெற்றுக்கள் ஆடும் ஓசையையும் மூங்கிற் புதரில் காற்றே இயற்கையாகப் புகுந்து புறப்படும்போது நேர்ந்த நேர்ச்சியாய்ப் பிறக்கும் குழலிசையையும் கேட்க நேரும்போதெல்லாம் அழகாகப் பாடவும் அழகாகப் படைக்கவும் இந்த உலகில் ஏதோ இருக்கிறதென்று அவன் மனம் தவிக்கும். பூக்களின் மணங்களிலும் சாயங்கால வானத்தில் வெள்ளிக் கோடிழுத்தாற் போல் மங்கித் தெரியும் இளம் பிறையிலும் அதனைச் சூழ அந்தகாரத்திலிருந்து தூவிச் சிதறும் வைரங்களைப் போல மின்னத் தொடங்கியிருக்கும் பிஞ்சுத் தாரகைகளுடைய சிறிய அழகிலும்

## உங்கள் சரக்குகளை காற்று உட்புகாமலும் கவர்ச்சிகரமாகவும் பாக் செய்யுங்கள்



TRAYONS

# ட்ரேயான்ஸ் ட்ரேயோபேன்

நவீன பாக்கிங் சாதனங்களுள் அற்புதமான ட்ரேயான்ஸ் ட்ரேயோபேன் உள்ளிருக்கும் சரக்குகளின் மேல் காற்றிலுள்ள ஈரம்கூட அண்டாதபடி பாதுகாப்பளிக்கிறது.

ட்ரேயான்ஸ் ட்ரேயோபேன் கொண்டு பாக் செய்த பண்டங்களை பாக்டரியில் தயாரித்தபோதிருந்த புதுமையுடனேயே நீங்கள் வாங்க முடிகிறது. ஏனெனில் ட்ரேயான்ஸ் ட்ரேயோபேன் 96 சதவீதம் கண்ணாடிபோல் தோற்றமளிக்கிறது.

**ஸ்டாக்கிஸ்டுகள் :**

RT

## ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்

61, செம்புதாஸ் தெரு, மதராஸ்-1   போன் 21641 - தந்தி CELYARN

**கிளைகள் :**

போன் 3253–தந்தி CELYARN 68/416, மெயின் ரோடு,
செவ்வாபேட்டை, சேலம்.

போன் 2598–தந்தி CELYARN 114/A, தெற்கு மாசி வீதி, மதுரை.

போன் 3441-தந்தி RAYONS யுனைடெட் இந்தியா பில்டிங்,
அவினாசி ரோடு, கோயமுத்தூர்

RT-20-54

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




'சிந்தைகவரும் வண்ணங்களுடன் சொந்தங்கொள்ளும் சோப்பு!'
என்கிறார் அழகுநட்சத்திரம் ராகினி.




சினிமா நட்சத்திரங்களின் தூய, மெல்லிளம் அழகுசாதன சோப்

LTS. 116-X29 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.